# சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்கள்

முனைவர் எச். சித்திரபுத்திரன்



INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

# சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்கள்

ஆசிரியர்
முனைவர் எச். சித்திரபுத்திரன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி, சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | caṅkattamiḻ uṟavumuṟaic coṟkaḷ |
| Author | : | Dr. H. Chithiraputhiran |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113. |
| Publication No | : | 427 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 2002 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 11 point |
| No. of Pages | : | xii + 196 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.45/- (Rupees forty five Only) |
| Printing | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004 |
| Subject | : | Sanga Tamil Kinship terms<br>- Lexicographic Study |

# பொருளடக்கம்

## சுருக்கக் குறியீடு

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறு. | - | குறுந்தொகை |
| நற். | - | நற்றிணை |
| பதி. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பத்து. | - | பத்துப்பாட்டு |
| குறி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| திரு. | - | திருமுருகாற்றுப்படை |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| பட். | - | பட்டினப்பாலை |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முல். | - | முல்லைப்பாட்டு |

**முனைவர் சா. கிருட்டினமூர்த்தி**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - *600 113*

# அணிந்துரை

மொழி ஒரு கருத்துப் பரிமாற்றக் கருவி. அது மனித தேவையின் அடிப்படையில் எழுவது. மொழி சமுதாய நோக்குடையது என்பதால் மொழியில் பண்பாட்டின் தாக்கமும் பண்பாட்டில் மொழியின் தாக்கமும் தவிர்க்க இயலாததாகின்றன. மொழியும் பண்பாடும் ஒரு நாணயத்தின் இருபக்கங்களாகத் திகழ்வதால்தான் இத்தகைய சார்புநிலை ஏற்படுகின்றது என்று கூறலாம்.

சொற்கள் பொருளை வெளிப்படுத்தும் குறியீடுகள் என்றாலும் அவை மக்களின் வாழ்க்கை நிலையையும் சமுதாய வளர்ச்சியையும் வெளிக்காட்டும் கண்ணாடியாகத் திகழ்கின்றன என்று கூறுவர். ஒரு சொல்லின் பொருள் என்பது அச்சொல்லைப் பேசுவோர் வெளியிடும் கருத்து மற்றும் அவர் சார்ந்துள்ள சமுதாயம், பண்பாடு ஆகியனவற்றின் பெட்டகமாகத் திகழ்கின்றது. சொல்லின் சமுதாய, பண்பாட்டுப் பின்புலங்களை விளக்குவது எளிதான செயலன்று. சொற்கள் சமுதாயத்தால் வரையறை செய்யப்படுவன என்பதால், சமுதாயத்தின் வாழ்க்கைச் சூழல், பழக்கவழக்கம் என்பன சொல்லின் விளக்கத்திற்குரியனவாக ஆகின்றன.

ஒரு மொழியின் சொற்றொகுதியில் இடம் பெறும் புலச் சொற்கள் மொழியின் வளர்ச்சிநிலையையும் தொன்மையையும் காட்டுவதில் தனியிடம் பெறுகின்றன. சொற்புலங்களுள் உறவுமுறைக்குத் தனியொரு சிறப்புண்டு. பிறபுலச் சொற்களைப் போலல்லாமல் உறவுமுறைச் சொற்கள் மனிதர்களை இணைக்கும் சங்கிலித் தொடர்களாகச் செயல்படுகின்றன. உறவுடையவர்களை இணைத்துப் பார்ப்பது என்றில்லாமல் உறவு அற்றவர்களையும் உறவுடையாரைப் போன்று இணைத்துக் காட்டுவதில் உறவுமுறைச் சொற்களுக்குத் தனியோர் இடம் உண்டு. அம்மா, அண்ணன், அக்கா, மாமா எனும் சொற்கள் இதற்குச் சான்றுகளாய் விளங்குகின்றன. நாட்டு ஒற்றுமை, சமுதாய ஒற்றுமை, சமய ஒற்றுமை எனப் பல்வேறு நிலைகளில் ஒற்றுமை உணர்வைக் காணத் துடிக்கும் நமக்கு உறவுமுறைச் சொற்கள் தகுந்த செயல்பாட்டு ஆதாரங்களாக விளங்குகின்றன என்றால் அது மிகையாகாது.

காலந்தோறும் வளர்ந்துவரும் தமிழ் இலக்கியங்களுள் உறவுமுறைச் சொற்களின் பயன்பாட்டில் பல தனித்தன்மைகளைக் காண இயலுகின்றது. குறிப்பிட்டுச் சொல்லுவோமானால் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப் பெறும் உறவுமுறைச் சொற்களுக்கும் இடைக்கால இலக்கியம், இக்கால இலக்கியம் போன்ற இலக்கியங்களில் பயன்படுத்தப்பெறும் உறவுமுறைச் சொற்களுக்கும் இடையே பல வேறுபாடுகளைக் காண இயலுகின்றது. எனவே பல்வேறு காலக்கட்டங்களில் காணப்பெறும் உறவுமுறைகளும், உறவுமுறைச் சொற்களும் பல்வேறு துறையினரால் ஆய்வுக்குரிய ஒரு பொருளாகக் கருதப்பட்டு வந்துள்ள நிலையில் **சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்களைச்** சொற்பொருண்மை நோக்கில் நுணுகி ஆய்ந்துள்ள இவ்வாய்வு வரவேற்கத்தக்க ஒன்று; ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

இன்று பெருவழக்காகவுள்ள அம்மா, அப்பா போன்ற சொற்கள் சங்க இலக்கியத்தில் வழக்கில் இல்லை என்பது சிந்தனையைக் கிளறுவதாக உள்ளது.

சங்க இலக்கியத்தில் இடம்பெறும் சொற்களை மூன்று தலைமுறைக்குரிய சொற்களாகப் (பெற்றோர் தலைமுறை, பேசுவோன் தலைமுறை (Ego), மகன்-மகள் தலைமுறை) பகுத்து ஆய்ந்துள்ளது இவ் ஆய்வின் இன்றியமையாக் கூறாகும். இரண்டு வகைகளாகப் பிரிக்கப்பட்டு அமைப்பு மற்றும் பொருள் என்பனவற்றின் அடிப்படையில் எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப்பெற்றுள்ளன.

பெற்றோர் தலைமுறையில் இடம்பெறும் ஞாய், யாய், எந்தை, நுந்தை எனும் சொற்கள் வரலாற்று நிலையில் தொல்திராவிட மொழிகளுடன் ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளன. தன்மை, முன்னிலை, படர்க்கை எனும் நிலையில் இச்சொற்கள் வேறுபட்டு நிற்கும் தன்மை சங்க இலக்கிய உறவுமுறைச் சொற்களின் தனித்தன்மையைக் காட்டுவதாய் உள்ளது.

பேசுபவன் (Ego) தலைமுறையில் இடம்பெறும் கணவன், மனைவி உறவுமுறைக்கு ஏராளமான ஒருபொருட் பன்மொழிகள் காணப்படுவதும் அவை பெரும்பாலும் வகை - *2*க்குரிய சொற்களாகக் (மனை, இல்__) காணப்படுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கன. தங்கை எனும் சொல் சங்க இலக்கியத்தில் இன்றைய பொருளில் வழங்கப்படாது 'குலப்பெண்' எனும் பொருளில் வழங்கப்பட்டுள்ளமையை இவ் ஆய்வின் வழி அறிய இயலுகின்றது. தம்பின், தம்முன் எனும் சொற்கள் முறையே தம்பி, அண்ணனைக் குறிக்கும் வகையில் சங்க நூற்களில்

பயன்படுத்தப்பட்டுள்ளன என்பது தமிழில் முன்னொட்டாக்கம் என்பதை நினைவுறுத்துவதாக உள்ளது.

உறவுமுறைச் சொற்கள் விரிவு பெற்று உறவு அல்லாத பொருளிலும், பொதுச் சொற்கள் விரிவு பெற்று உறவுமுறைப் பொருளிலும் வழங்கப்படுவது சங்கத்தமிழின் தனித்தன்மையாக உள்ளது என்பதை இந்நூல் தெள்ளிதின் வெளிக்காட்டுகின்றது.

இந்நூலின் பின்னிணைப்பாக அமையும் அகராதியும் வரைபடமும் நூலின் சிறப்பினை உயர்த்திக் காட்டுவனவாய் உள்ளன என்று கூறின் அது மிகையன்று.

சங்க இலக்கிய உறவுமுறைச் சொற்கள் எனும் தலைப்பில் அமைந்துள்ள இந்நூல் உறவுமுறைச் சொற்கள் எனும் புலத்திற்குப் பொது நிலையிலும், சங்க இலக்கிய உறவுமுறைக்குச் சிறப்பு நிலையிலும் பயனுள்ளதாய் அமைகின்றது.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற இவ்வாய்வை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தமது சொந்தப் பொறுப்பில் வெளியிடுவது எனும் நிலையில் இஃது இலக்கிய இலக்கண ஆய்வாளர்களிடையே பெரும் வரவேற்பைப் பெறும் என்பதில் ஐயமில்லை.

இவ் அரிய முயற்சியில் தன்னை முழுமையும் ஈடுபடுத்திக் கொண்ட தமிழ்ப் பல்கலைக்கழக அகராதியியல் துறைத் தலைவர் முனைவர் எச். சித்திரபுத்திரன் அவர்களுக்கு நிறுவனத்தின் பாராட்டுதல்களும் வாழ்த்துகளும் உரியன.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி அமைச்சர் முனைவர் மு. தம்பிதுரை அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திரு. பி.ஏ. இராமையா, இ.ஆ.ப. அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறைக் கூடுதல் செயலாளர் திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூல் அழகுற வெளிவர ஒளிக்கோர்வை செய்து உதவிய திரு. வி. வாசுதேவன் மற்றும் திருமதி ந. லட்சுமி ஆகியோர்க்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூலை நன்கு அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்டிங் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் நன்றி.

**இயக்குநர்**

**சென்னை**
**22-3-2002**

# நன்றியுரை

தமிழ்ப் பல்கலைக்கழக அகராதியியல் துறையில் என்னால் மேற்கொள்ளப்பெற்ற "சங்கத் தமிழ் உறவுமுறைச் சொற்கள்" எனும் இவ்வாய்வுத் திட்டத்தினை நூலாக வெளியிடுவதற்கு அனுமதி வழங்கிய தமிழ்ப் பல்கலைக்கழக ஆட்சிக்குழுவிற்கும் பல்கலைக் கழக நிருவாகத்தினருக்கும் முதற்கண் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சங்கத் தமிழ் உறவுமுறைச் சொற்கள் எனும் இத்திட்டத்தினை வெளியிடுவதற்கு இசைவு அளித்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன முன்னாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கும் இப்பணியை மிக விரைவில் அச்சேற்றி வெளிவரப் பல்லாற்றானும் உதவிய இந்நாள் இயக்குநர் கெழுதகை நண்பர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வினை மேற்கொண்ட காலத்தில் ஆக்கமும் ஊக்கமும் அளித்து ஆற்றுப்படுத்திய அகராதியியல் துறை முன்னாள் துறைத்தலைவர் முனைவர் (திருமதி) சு. சிவகாமசுந்தரி அவர்களுக்கு என்றும் நன்றிக் கடப்பாடுடையேன். இவ்வாய்வு வெளிவரப் பல்லாற்றானும் உதவிய தமிழ் அறிஞர் முனைவர் இரா. இளவரசு அவர்களுக்கும், எனது நண்பர் பேராசிரியர் முனைவர் செ. ஜீன் லாறன்ஸ் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலின் மெய்ப்புப் படிகளைத் திருத்திச் செப்பம் செய்து உதவிய அகராதியியல் துறை ஆய்வு உதவியாளர் முனைவர் (திருமதி) மா. பார்வதியம்மாள் அவர்களுக்கும், திட்ட உதவியாளர் திரு. ச. மாணிக்கம் அவர்களுக்கும் நன்றியைக் கூறிக் கொள்கிறேன்.

மெய்ப்புப் படிகளைச் செப்பம் செய்த அகராதியியல் துறை ஆய்வாளர் (FDP) திருமதி அ. லலிதா அவர்களுக்கும் ஆய்வு மாணவி செல்வி வசுந்தராதேவி அவர்களுக்கும் என் நன்றி.

**தஞ்சாவூர்** **எச். சித்திரபுத்திரன்**
**28-2-2002**

# முன்னுரை

'சங்கத் தமிழ் உறவுமுறைச் சொற்கள்' எனும் இந்நூலில் முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஆறு இயல்கள் அடங்கியுள்ளன. நூலின் இறுதிப்பகுதியில் சங்க நூற்களில் இடம்பெற்றுள்ள உறவுமுறைச் சொற்கள் அடங்கிய அகராதிப் பகுதி ஒன்றும் இடம்பெற்றுள்ளது. இயல்களின் பெயர்களும் அவற்றின் வைப்பு முறையும் பின்வருமாறு அமைந்துள்ளன:

இந்நூலிற்குரிய தரவுகள் சங்க நூற்களிலிருந்து திரட்டப்பெற்றுள்ளன. சங்க இலக்கியத்திற்கென வெளியாகியுள்ள பல்வேறு சொல்லடைவுகளும் தமிழ்ப் பல்கலைக்கழகத்தினால் தொகுக்கப் பெற்றுள்ள 'சங்க இலக்கியச் சொல்லடைவு', 'சங்க இலக்கிய அகராதி' என்பனவும் இப்பணிக்காகப் பயன்படுத்திக் கொள்ளப் பெற்றுள்ளன.

ஒவ்வொரு இயலிலும் குறிப்பாக 3,4,5,6 இயல்களில் ஒரு முன்னுரையும் இறுதிப் பகுதியில் ஒரு தொகுப்புரையும் இடம்பெற்றுள்ளன. முன்னுரைப் பகுதியில் தொல்காப்பியம் மற்றும் நிகண்டுகளில் இடம்பெறும் அவ்வவியல்களுக்குரிய உறவுமுறைச் சொற்கள் சுருக்கமாக விளக்கப் பெற்றுள்ளன. அதை அடுத்து உறவுமுறைச் சொற்கள் விளக்கமுறை அடிப்படையில் எடுத்துக்காட்டுகளுடன் விரிவாக ஆராயப் பெற்றுள்ளன. உறவுமுறைச் சொற்களின் உறவல்லாப் பொருள்களும் அவற்றின் தனித்தன்மைகளும் சுட்டிக்காட்டப் பெற்றுள்ளன. இயல்களின் இறுதிப் பகுதியில் அவ்வவ் இயல்களுக்குரிய ஆய்வுக் கருத்துகள் தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன. தமிழ் உறவுமுறைச் சொற்களுக்கு இணையாகப் பிற திராவிட மொழிகளில் வழங்கப்பெறும் இனவடிவங்களும் ( Cognates ) தொல் திராவிட வடிவங்களும் ( Proto Dravidian Forms ) கண்டறியப்பட்டுக் குறிக்கப் பெற்றுள்ளன.

'சொல்லும் பொருளும்' எனும் முதல் இயலில் சொல்-பொருள் உறவு தொடர்பான பல செய்திகள் இடம் பெற்றுள்ளன. மொழி ஆய்வு, மொழி ஆய்வின் படிநிலைகள், பொருட்புல வெளிப்பாடு, சொற்பொருள் உறவுகளான ஒருபொருட்பன்மொழி, ஒரு சொல் பல பொருள் என்பனவும்; சொற்பொருண்மைக் கூறுகளான கருத்துப்பொருள், குறிப்புப் பொருள், பயன்பாட்டெல்லை என்பனவும் பின் இயல்களுக்குப் பயன்தரும் வகையில் சுருக்கமாகவும் எடுத்துக்காட்டுகளு டனும் தரப்பெற்றுள்ளன.

'உறவுமுறை அமைப்பும் உறவுமுறைச் சொல்லும்' எனும் இரண்டாவது இயலில் உறவுமுறையின் அமைப்பும்

அதன் செயல்பாடும்; உறவுமுறைச் சொற்களின் செயல்பாடும் அவற்றின் வகைப்பாடும்; முர்டாக், லூயிடியூமோன், பிரெண்டாபெக், டிரெளவுட்மான் என்பவரின் வகைப்பாடுகளும் விரிவாக இடம்பெற்றுள்ளன. உறவுமுறை ஆய்வின் வளர்ச்சி, இந்திய உறவுமுறை ஆய்வின்நிலை, தமிழ் உறவுமுறை ஆய்வின் பங்களிப்பு என்பனவும் இவ்வியலில் சுருக்கமாகக் குறிக்கப் பெற்றுள்ளன.

மூன்றாவது இயலில் 'பெற்றோர் தலைமுறை'க்குரிய தாய்-தந்தை எனும் சொற்களும் அவற்றின் ஒருபொருட் பன்மொழிகளும் எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப் பெற்றுள்ளன.

'கணவன்-மனைவி உறவுமுறையும் உறவுமுறைச் சொற்களும்' எனும் நான்காம் இயலில் கணவன், மனைவி எனும் சொற்களும் அவற்றிற்குரிய ஒருபொருட் பன்மொழிகள் பலவும் வேறுவேறு வகைகளாகப் பிரிக்கப்பட்டு எடுத்துக் காட்டுகளுடன் ஆராயப்பெற்றுள்ளன.

'உடன்பிறப்பு உறவுமுறையும் உறவுமுறைச் சொற்களும்' எனும் ஐந்தாவது இயலில் அண்ணன், தம்பி, அக்காள், தங்கை எனும் உறவுமுறைகளுக்குரிய சொற்கள் ஆராயப்பட்டுள்ளன.

ஆய்வேட்டின் ஆறாவது இயல் 'மகன்-மகள் உறவுமுறை'க்குரியதாகும். இவ்வியலில் மகன், மகள் எனும் சொற்களும் அவற்றின் ஒருபொருட் பன்மொழிகளும் விளக்கப் பெற்றுள்ளன.

பின்னிணைப்பில் இடம்பெறும் அகராதிப் பகுதியில் சங்க இலக்கிய உறவுமுறைச் சொற்கள், அவற்றின் வகை, உறவுமுறைப் பொருள், வரவிடங்கள் ( நூல், பாடல் எண், பாடல் அடி ) எனும் செய்திகள் இடம்பெற்றுள்ளன. உறவுமுறைச் சொற்களை ஒப்பிட்டு ஆராயும் வண்ணம் வரைபடங்களும் இப்பகுதியில் சேர்த்துக் கொள்ளப் பெற்றுள்ளன.

தமிழ் இலக்கிய ஆய்விற்குப் பொதுநிலையிலும் மொழியியல் ஆய்விற்குச் சிறப்பு நிலையிலும் பயன்படும் இந்நூல் மேலும் பல பரந்துபட்ட பயன்பாடுகளை உள்ளடக்கியதாக அமையும் என்பதில் ஐயமில்லை.

எச். சித்திரபுத்திரன்

# 1. சொல்லும் பொருளும்

## 0. முன்னுரை

மொழி ஒரு கருத்துப் பரிமாற்றக் கருவியாகும். நமது கருத்தைப் பிறருக்கும் பிறர் கருத்தை நாமும் உணர்ந்து கொள்ளத் துணைநிற்பது மொழியாகும். மொழி மாறிவரும் தன்மை கொண்டது. மொழி மனித வளர்ச்சிக்குத் துணை நிற்பது. மொழி கருத்துப் பரிமாற்றத்திற்கு மட்டுமின்றிச் சமுதாயத்தின் செயல்பாட்டிற்கும் துணைநிற்கிறது. எனவேதான் மொழி மாற்றம் சமுதாய மாற்றத்தின் வெளிப்பாடாக அமைகின்றது. மொழி மனித வாழ்வில் கல்வி, கலை, பண்பாடு, நாகரிகம், அறிவியல் போன்றவற்றின் செயல்பாட்டிலும் வளர்ச்சியிலும் பெரும் பங்காற்றுகின்றது. மொழி வளர்ச்சியின் ஒவ்வொரு நிலையிலும் சமுதாயம், பண்பாடு மற்றும் அறிவியலின் தாக்கத்தைக் கண்டுகொள்ள முடியும்.

மொழியும் சமுதாயமும் நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றன. ஒரு சமுதாயம் வளர வளர அதனோடு தொடர்பு பெற்று அச்சமுதாயத்தினரால் பேசப்பட்டு வரும் மொழியும் வளர்ச்சியடைகின்றது. வளர்ந்து வரும் சமுதாயத்தில் வரையறுக்கப்பட்ட சொல் தொகுதியினையும் வளர்ச்சியடைந்த சமுதாயத்தில் நன்கு வளர்ச்சியடைந்த மொழியினையும் காணமுடியும்.

## 1.1. மொழி ஆய்வு

பல்வேறு துறைகளைச் சார்ந்தோர் மொழியோடு தொடர்புடைய பலபணிகளை மேற்கொண்டனர். அவரவர் சார்ந்துள்ள துறையின் தன்மைக்கு ஏற்பவே மொழியை ஆராய்ந்தனர். எடுத்துக்காட்டாக, மானிடவியல், மொழியியல், உளவியல், தத்துவவியல் போன்ற பல துறை அறிஞர்களைக் குறிப்பிடலாம். மொழியை எந்த அடிப்படையில் ஆராய்ந்தாலும் மொழியில் சமுதாய, பண்பாட்டுக் கூறுகளின்

தாக்கத்தைத் தவிர்ப்பது இயலாத ஒன்றாகும். மேலும் சமுதாய, பண்பாட்டுக் கூறுகளைக் கண்டறியும் சமுதாயவியல் சார்ந்த ஆய்வுகளில் மொழித் தாக்கம் பெரும் இடத்தைப் பெற்று நிற்கின்றது.

ஒரு மொழியைப் பல்வேறு நிலைகளில் ஆராயுமிடத்து 1. தனிமனித வேறுபாடு ( *Individual variation* ), 2. சமுதாய அமைப்பு ( *Social organization* ), 3. பொருள் வெளிப்பாடு ( *Meaning expression* ) என்ற மூன்று கூறுகளும் முக்கிய பங்காற்றுகின்றன. இக்கூறுகள் மொழியின் செயல்பாட்டில் பல செயல் விளைவுகளை ஏற்படுத்த வல்லன. மொழியைப் பேசுபவர்களுக்கிடையே நிலவும் தனிமனித வேறுபாடு மொழியிலும் சமுதாயத்திலும் மாற்றங்களை ஏற்படுத்த வல்லது. இவ்வகையான தனிமனிதக் கூறுகளின் தொகுப்பே சமுதாயமாகும். சமுதாயம் தனி மனித அமைப்புக்களைச் சார்ந்தே விளக்கம் பெறுகின்றது. சமுதாயக் கூறுகளான வகுப்பு அல்லது பிரிவு, இனம், சூழல், வட்டாரம், உணர்வுகள் போன்றன சமுதாய அமைப்பிலும் மொழி அமைப்பிலும் மாற்றங்கள் ஏற்படத் துணை நிற்கின்றன.

மொழி ஆய்வில் சமுதாயத்தின் பங்கைப் பல மானிடவியல் அறிஞர்கள் விளக்கிச் சென்றுள்ளனர். அவர்கள் கருத்துப்படிச் சமுதாயமும் மொழியும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன. ஒரு மொழியை ஆராய்வதற்கு அம்மொழி பேசப்படும் சமுதாயச் சூழலை விரிவாக ஆராய வேண்டுமென்பது மானிடவியல் மொழியியலாரின் கருத்தாகும். மொழியைப் புறச்சூழலுடன் ஒப்பிட்டு ஆராயும் இப்போக்கு விட்ஜென்ஸ்டின் காலம் முதல் வளர்ச்சியடைந்து வந்துள்ளது. மொழியை அதன் அமைப்பு நிலையில் மட்டுமில்லாமல் சமுதாயத்தோடும் இணைத்துப் பார்க்க வேண்டும் என்பது விட்ஜென்ஸ்டின் கருத்தாகும். விட்ஜென்ஸ்டின் சில பழங்குடி மக்களின் மொழியை விரிவாக ஆராய்ந்து மொழியும் சமுதாயமும் ஒன்றையொன்று சார்ந்து இயங்கும் தன்மை கொண்டன என விளக்கிக் காட்டினார். மேலும் மொழி, சமுதாயக் கூறுகளால் வரையறை செய்யப்படுகின்றது என்பதைத் தன் கள ஆய்வின் மூலம் வெளியுலகிற்குக் காட்டியுள்ளார்.

மலினோஸ்கி ஒரு மொழியின் அமைப்பை ஆராய்வதற்கு அம்மொழியைப் பேசும் மக்களின் பண்பாட்டையும் ஆராய வேண்டும் என்றும் இவ்வடிப்படையில் தான் மொழியியல் ஆய்வு சமுதாயம் சார்ந்த ஓர் ஆய்வாக உருப்பெற்று வந்துள்ளது என்றும் குறிப்பிடுவார். சொற்கள் பொருளை விளக்குவதுடன் அம்மொழியைப் பேசும் மக்களின் உண்மை நிலையினையும் வெளிக்காட்டும் என்பது மொழியியல் அறிஞர் பாமர் ( 1981 ) அவர்களின் கருத்தாகும்.

## 1.2. மொழி ஆய்வில் படிநிலைகள்

மொழி ஆய்வின் வளர்ச்சியில் பல படிநிலைகள் இடம்பெற்றுள்ளதைக் காண இயலும். மொழியை அமைப்பு ( Structure ) நிலையில் மட்டும் ஆராய்ந்த காலம் பழங்காலமாகும். மொழி ஆய்வு என்றால் மொழியிலுள்ள சொற்களின் அமைப்பை மட்டும் ஆராயும் ஆய்வு என்றே கருதப்பட்டு வந்தது. இக்காலக்கட்டத்து அறிஞர்கள் மொழியின் அக அமைப்பில் அதிகம் கவனம் செலுத்தி வந்தனர். அமைப்பு மொழி ஆய்வை அடுத்த காலம் விளக்க முறைக் காலமாகும். விளக்கமுறை ஆய்வில் மொழியின் குறிப்பிட்ட ஒரு காலக்கட்டம் தெரிவு செய்யப்பெற்று அக்காலக்கட்டத்துக்குரிய மொழிப் பண்புகள் மட்டும் ஆராயப்பட்டன. சொல்லின் அக அமைப்பை அடிப்படையாகக் கொண்டு இவ்வாய்வு வளர்ந்திருப்பினும் தனியொரு ஆய்வாகவே நீண்ட காலம் விளங்கி வந்துள்ளது. மொழியை விளக்குவதற்கு மொழியின் அமைப்பையும், காலத்தையும் மட்டும் கருத்தில் கொள்ளாது சமுதாயத்தோடும் இணைத்துப் பார்க்கும் ஆய்வு சமுதாய மொழியியல் ஆய்வாகத் தற்பொழுது உருப்பெற்றுள்ளது.

சமுதாய மொழியியல் வளர்ச்சிக்கு டெல்ஹைம்ஸ் ( 1966 ), வில்லியம்லெபோ ( 1970 ), கும்பர்ஸ் ( 1972 ) என்போர் பெரும் பங்காற்றினர். இவர்கள் மொழி சமுதாய அளவைக் ( Social parameter ) கூறுகளின் அடிப்படையில் அமைந்துள்ளது என்றும் மொழியின் வரலாற்று ஆராய்ச்சி மொழி பற்றிய ஆராய்ச்சியாக அமைவது மட்டுமின்றி அம்மொழியைப் பேசும் மக்களின் வரலாறாகவும் ( Social

history ) அமைகின்றது என்று கண்டறிந்தனர். இந்நிலையில்தான் மொழியைச் சமுதாயக் கூறுகளின் அடிப்படையில் ஆராயும் பணி பரவலாக மேற்கொள்ளப் பட்டது.

### 1.3. சொற்பொருள்

மொழியின் வளர்ச்சியில் அதன் எழுத்திலும், இலக்கணத்திலும் பெருமளவு மாற்றங்கள் ஏற்படுவதில்லை. ஏனெனில் அவை வரையறைக்கு உட்பட்ட மாற்றங்களாகும். ஒரு மொழியின் இலக்கணத்திலும் எழுத்திலும் மாற்றம் ஏற்பட மிக நீண்டகாலம் தேவைப்படுகின்றது. எடுத்துக்காட்டாகச் சங்க கால இலக்கணக் கூறுகளைக் குறிப்பிடலாம். சங்க கால இலக்கணக் கூறுகள் மாற்றம் பெற்று இன்றுள்ள நிலையை அடைய ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகள் ஆகியுள்ளன. மொழியமைப்பில் ஏற்படும் மாற்றங்களில் மிக எளிதானவை சொல் மற்றும் பொருளில் ஏற்படும் மாற்றங்களாகும். மொழி இரண்டு நிலைகளில் வளர்ச்சியடைகின்றது. அவை ஒன்று கிடைநிலை வளர்ச்சி ( Horizontal growth ) மற்றொன்று உயர்நிலை வளர்ச்சி ( Vertical growth ) என்பனவாகும். கிடைநிலை வளர்ச்சி ஒரு சொல் பல்வேறு பொருள்களைப் பெற்று நிற்பதையும் அப்பொருள்களுக்கிடையே நடைபெறும் மாற்றங்களையும் குறிக்கும். உயர்நிலை வளர்ச்சி ஒரு மொழியில் சொற்கள் பெருகிவரும் தன்மையைக் குறித்து நிற்கும். அதாவது சொற்களின் எண்ணிக்கையில் ஏற்படும் மாற்றம் உயர்நிலை வளர்ச்சிக்குரியதாகும்.

சொல்லிற்கும் அது குறிக்கும் பொருளுக்கும் இடைப்பட்ட உறவு நேரடியானதன்று. அது மிகவும் நெகிழ்வானது. ஒரு சொல்லின் பொருளைப் பல்வேறு முறைகளில் எளிதாக விளக்கிவிட முடியும். ஆனால் அச்சொல் கொண்டுள்ள சமுதாய, பண்பாட்டுக் கூறுகளை விளக்குவது எளிதான செயலன்று. ஏனெனில் சொற்கள் பொருள்களை மட்டும் தரும் குறியீடுகள் அல்ல. முன்னர்க் குறிப்பிட்டது போல் அவை பண்பாடு, பழக்கவழக்கம், நாகரிகம், சமுதாய அமைப்பு போன்றவற்றை வெளிக்காட்டுவனவாகும். ஒரு சமுதாயத்தில் அல்லது ஓர் இனத்தில் பேசப்படும் சொற்கள்

அச்சமுதாயத்தின் வளர்ச்சி வாழ்க்கைச் சூழல், வெளியுலகத் தொடர்பு என்பனவற்றைச் சார்ந்துள்ளன. சுற்றுப்புறச் சமுதாயத்தின் தன்மைக்கு ஏற்பவும் சொற்கள் வரையறை செய்யப்படுகின்றன. ஒரு சமுதாயத்தில் வழங்கப்படும் சொற்கள் மற்றொரு சமுதாயத்தில் வழக்கின்றிப் போகலாம். சொற்றொகுதிக்கும் புறச்சூழலுக்கும் இடைப்பட்ட உறவை நன்கு வளர்ச்சியடையாத சமுதாயங்களில் வெளிப்படையாகக் காண இயலும். பின்வரும் எடுத்துக்காட்டுகள் இக்கருத்திற்கு வலுச்சேர்க்கும்.

* இந்தியப் பழங்குடி மக்களின் வாழ்வில் மூங்கில் இன்றியமையாத ஒன்றாக விளங்குவதன் காரணமாக மூங்கிலைக் குறிக்கப் பல சொற்கள் இச்சமுதாயத்தில் காணப்படுவதோடு மூங்கிலின் வகைகளையும் சிறுசிறு வேறுபாடுகளையும் மூங்கிலினால் செய்யப்பெற்ற பொருட்களையும் குறிப்பிடத் தனித்தனியாகப் பல சொற்கள் வழங்கப்பெறுகின்றன.

| | |
|---|---|
| *Wa* | *'bamboo'* |
| *Wakkitor* | *'a variety of bamboo'* |
| *Wajar* | *'a variety of bamboo'* |
| *Wak ) lok* | *'long bamboo lamp'* |
| *Watuy* | *'ring of the bamboo'* |
| *Wamlang* | *'a variety of bamboo'* |
| *Wamlik* | *'a variety of bamboo'* |

(Singh, p.90)

* பஞ்சாபி மொழியில் மணலின் வெவ்வேறு வகைகளைக் குறிப்பிட 83 சொற்களும் ஒட்டகத்தைக் குறிப்பிட 123 சொற்களும் காணப்படுகின்றன.

* அங்காமி மொழியில் காளானைக் குறிப்பிட 100-க்கும் அதிகமான சொற்கள் வழக்கிலுள்ளன.

* உறைபனியின் மத்தியில் வாழும் எக்ஸிமோக்களின் மொழியில் பனியின்

பல்வேறு நிலைகளைக் குறிப்பிட 4 சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

* வங்காள மீனவர் சமுதாயத்தில் மீன் வலையையும் வலையின் வேறுபட்ட வகைகளையும் குறிப்பிட 23 சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. அவர்கள் பேச்சில் காற்றின் வகைகளைக் குறிப்பிடப் பல சொற்கள் காணப்படுகின்றன.

மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் சொற்களுக்கும் சமுதாயத்திற்கும் இடையேயுள்ள உறவை வெளிக்காட்டு வனவாய் அமைந்துள்ளன. இவ்வகையான தேவைநோக்குச் சொற்கள் பழங்குடி மக்களின் மொழியில் அதிகம் உள்ளன.

* அந்தமான் தீவுகளில் வாழும் பழங்குடி மக்களின் மொழியில் மிகமிகக் குறைவான சொற்களே காணப்படுகின்றன. இச் சொற்களில் பெரும்பாலானவை வேட்டை யாடுதல், மீன்பிடித்தல் தொடர்பானவை. பெயர்ச்சொற்களில் மட்டுமின்றி மிக நுண்ணிய வேறுபாடுகளைக் காட்ட வினைச்சொற்களும் இவ்வாறு பயன் படுத்தப்படுகின்றன.

* நாகர் மொழியில் 'எடு' என்ற வினைச் சொல்லிற்கு இணையாகப் பின்வரும் சொற்கள் வழக்கிலுள்ளன.

| | | |
|---|---|---|
| apun | v. carry | ( a baby in a customary manner ) |
| apu | v. carry | ( on shoulder ) |
| perlock | v. carry | ( on head ) |
| an | v. carry | ( in hand ) |

* முண்டாரி மொழியில் 'வெட்டு' என்ற வினைச்சொல்லிற்கு இணையாக, பயன் படுத்தப்படும் கருவிகளின் அடிப்படையில் பல சொற்கள் கையாளப்பட்டு வருகின்றன.

| | | | |
|---|---|---|---|
| *maa* | *'cut'* | *( by axe )* | |
| *had* | *'cut'* | *( by knife )* | |
| *ir* | *'cut'* | *( by sickle )* | |
| *latab* | *'cut'* | *( by scissors )* | |
| *hire* | *'cut'* | *( by teeth )* | |
| *gid* | *'cut'* | *( meat )* | *( Singh, ப.147 )* |

## 1.4. பொருட்புலமும் பொருள் வெளிப்பாடும்

ஒரு பொதுச்சொல்லில் அடங்கும் ஒன்றிற்கொன்று பொருள் தொடர்புடைய சொற்களின் தொகுதியே பொருட்புலமாகும். ஒரு புலத்தின்கண் அடங்கும் சொற்கள் தம்முள் பொருள் உறவு பெற்றிருப்பது மட்டுமில்லாமல் பொருள் விரிவு பெற்று மற்றொரு புலத்துடன் தொடர்புடையதாகவும் செயல்படும். இப்புலச் சொற்கள் தாங்கள் சார்ந்துள்ள புலங்களின் அமைப்பை மட்டும் விளக்காது சமுதாயத்தின் பல்வேறு பண்புகளையும் குறிப்பிடுவனவாய் அமைகின்றன. கீழ்வருவன சில இன்றியமையாத பொருட் புலங்களாகும்:

1. உறவுமுறை, 2. தாவர-விலங்குகள், 3. மதம், சடங்கு, 4. அணிகலன், 5. ஆடை, 6. குடியிருப்பு, 7. பாத்திரம்-வீட்டுச் சொற்கள், 8. அரசியல், 9. தின்பண்டம்-உணவு வகைகள், 10. நோய், மருத்துவம்/மருந்து, 11. ஒப்பனை, அழகுப் பொருட்கள், 12. போக்குவரத்து, ஊர்தி, 13. சிற்பம், கட்டிடம், 14. பருவநிலைகள், 15. செய்தித் தொடர்பு, 16. வியாபாரம், 17. போர், படை, 18. விளையாட்டு, பொழுதுபோக்கு, 19. நிறங்கள், 20. அளவை, 21. விழா, பண்டிகை, சடங்கு, 22. அறிவியல் கண்டுப்பிடிப்பு, 23. சிறப்புப் பெயர் போன்றன. மேற்கண்ட புலங்கள் சமுதாயத்திற்குச் சமுதாயம் காலத்திற்குக் காலம் இடத்திற்கு இடம் மாறும் தன்மை உடையன. கால வளர்ச்சியில் சமுதாயத்தோடு இணைந்து இப்புலச் சொற்களும் உலகப் பொருளும் மாற்றம் பெற்று வருவதைக் கண்கூடாகக் காணமுடியும்.

தாவரச் சொற்கள் சமுதாய, பண்பாட்டுக் கூறுகளையும், புராண, ஆன்மீகச் செய்திகளையும் உள்ளடக்கி யனவாய்க் காணப்படுகின்றன. சங்க இலக்கிய குறிஞ்சி,

முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற திணைப் பாகுபாடு பண்பாட்டின் அடிப்படையில் நிகழ்ந்ததாகும். திணைப் பாகுபாட்டிற்குப் பூக்களின் பெயர் அடிப்படையாகக் கொள்ளப்பட்டிருந்தாலும் அவை சங்க கால முதல், கரு, உரி என்ற கோட்பாட்டையும் சங்க கால வாழ்வியலையும் குறித்து நிற்கின்றன.

தாவரச் சொற்களில் ஒரு தாவரத்தைக் குறிக்க ஏராளமான ஒருபொருட் பன்மொழிகள் காணக் கிடைக்கின்றன. இவ்வொருபொருட் பன்மொழிகளின் ஆக்கத்திற்குப் புராண, மத, சமுதாய நம்பிக்கைகள் காரணங்களாய் அமைந்துள்ளன. ஒவ்வொரு சமுதாயத்திலும் பொதுவாகவும் சிறப்பாகவும் பல விழாக்களும் சடங்குகளும் நிகழ்கின்றன. இவை அம்மொழி பேசும் மக்களுடன் நேரடித் தொடர்புடையன. நவராத்திரி, தீபாவளி, தைப்பூசம், கோகுலாஷ்டமி, சிவராத்திரி, கந்தசஷ்டி போன்றன தங்களிடையே பல புராணக்கதைகளைக் கொண்டுள்ளன. இச்சொற்கள் அக்கதைகளைக் குறிக்கும் குறியீடுகளே தவிர விழாக்களின் முழுமையான பொருள்கள் அல்ல. இச்சொற்களின் பின்னணியில் வழங்கப்பெற்று வரும் கதைகளை விளக்காது பொருளை மட்டும் தருவதில் சிறப்பில்லை. இதைப்போலவே குழந்தை பிறப்பு, பெயரிடல், காதுகுத்தல், பூணூலிடல், பூப்புனித நீராட்டு, திருமணம், வளைகாப்பு, இறப்பு போன்ற சடங்குகள் சமுதாயச் சிறப்பு வாய்ந்தன. இவை சமுதாயத்திற்குச் சமுதாயம் மாறுபடும் தன்மையன. இச்சடங்குகள் குறித்த சொற்கள் அகராதி களிலோ, கலைக்களஞ்சியங்களிலோ இடம்பெறாமல் இன்றளவும் ஊர்மக்களின் நாவில் மட்டும் வழங்கப்பெற்று வருகின்றன. பல சிறப்பகராதிகளைத் தொகுப்பதன் மூலம் இச்சொற்களையும் அவை சார்ந்த சடங்குகளையும் நாம் பாதுகாத்துக் கொள்ள முடியும்.

மேற்கண்டவற்றைப் போன்று உறவுமுறைச் சொற்களும் சமுதாய, வட்டார மற்றும் பண்பாட்டுக் கூறுகளை வெளிக்காட்டுவதில் பெரும் பங்காற்றுகின்றன.

### 1.5. சொற்பொருண்மைக் கூறுகள்

சொற்பொருண்மை பற்றிய ஆய்வு மிகப் பழங்காலம் முதல் குறிப்பாக அரிஸ்டாட்டில் காலம் முதலே நடந்து

வந்துள்ளது. சொற்பொருள் பற்றிய கொள்கைகளாக ஒன்பது வகைக் கொள்கைகளைச் சண்முகம் ( 1989, 19 ) குறிப்பிடுவார். இக்கொள்கைகள் பெரும்பாலும் உலகப் பொருள், பேச்சாளர் - கேட்பவர்மனம், சொல்லின் பயன்பாடு, மொழிச்சூழல், பேச்சுச் சூழல் என்பனவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளன. சொற்பொருண்மைக் கொள்கைகள் பெரும்பாலும் 1. உலகப்பொருள், 2. கேட்பவர் மற்றும் பேசுபவரின் மனநிலை, 3. மொழிச்சூழல் என்ற மூன்றுடன் தொடர்புடையன. பல்வேறு கொள்கைகளில் சொல் மற்றும் உலகப் பொருளைக் கருத்துடன் இணைத்துப் பார்க்கும் கொள்கையே மொழியியலார் இடையே பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளது. இக்கொள்கையை அடியொற்றிச் சொல்லுக்கும் உலகப் பொருளுக்கும் இடைப்பட்ட உறவை ஆக்டன் & ரிச்சர்ட்ஸ் என்பவர்கள் ஒரு முக்கோண வரை படத்தின் மூலம் விளக்குவார்கள் ( ஆக்டன் & ரிச்சர்ட்ஸ் ).




பொருள் முக்கோணக் கொள்கையின்படி உலகப் பொருளுக்கும் சொல்லுக்கும் இடையே நேரடித் தொடர்பு எதுவும் இல்லை. உலகப் பொருளும் சொல்லும் கருத்தின் வழியே இணைக்கப் பெறுகின்றது. இதைக் காட்டவே உலகப் பொருளுக்கும் சொல்லுக்கும் இடையே தொடர்பற்ற கோடு தரப்பெற்றுள்ளது. ஓர் உலகப்பொருள் அல்லது கருத்து ஒவ்வொரு சமுதாயத்திலும் அல்லது மொழியிலும் ஒவ்வொரு வகையில் கருத்தாக்கம் செய்யப் பெறுகின்றது. இதை, சுகுஸ்தா எடுத்துக்காட்டுகளுடன் விரிவாக விளக்குவார் ( Zgusta, p.28 ).

சொற்பொருண்மை மூன்று அடிப்படைக் கூறுகளைக் கொண்டது. இம்மூன்று கூறுகளும் சொல்லின் பொருள் வேறுபாட்டிற்கும் ஒருபொருட்பன் மொழிகளின் ஆக்கத்திற்கும் காரணங்களாய் அமைந்துள்ளன. பின்வருவன அம்மூன்று பொருட்கூறுகளாகும்:

1. கருத்துப்பொருள் ( Designation )
2. குறிப்புப் பொருள் ( Connotation )
3. பயன்பாட்டெல்லை ( Range of Application )

### 1.5.1. கருத்துப்பொருள்

சொல்லுக்கும் உலகப் பொருளுக்கும் இடையேயுள்ள உறவு மற்றும் சொல்-பொருள் பற்றிப் பேச்சாளர் மனத்தில் ஏற்படும் கருத்தே கருத்துப் பொருளாகும். முன்னர்க் கூறியது போல் சொல்லும் உலகப்பொருளும் இக்கருத்துப் பொருள் மூலமே இணைக்கப் பெறுகின்றன. புறப்பொருள் அல்லது உலகப் பொருள் கொண்டுள்ள பல்வேறு பண்புகளின் தொகுப்பே அடிப்படைப் பண்பாகும். இவ்வடிப்படைப் பண்புகளின் தொகுப்பே கருத்துப் பொருளாகும். ஒரு மொழியின் அடிப்படைப் பண்பு மற்றொரு மொழியில் மாறுபடும்.

### 1.5.2. குறிப்புப்பொருள்

கருத்துப் பொருளுடன் கூடுதலாகச் சொல் மற்றும் பொருள் குறித்த உணர்ச்சி, பேச்சாளர் நிலை, வட்டாரம், சூழல், இடம், இனம், மதம், பண்பாடு, கிளைமொழி, இருமொழியம், மொழிநடை போன்ற பல்வேறு செய்திகளைத் தருவது குறிப்புப் பொருளாகும். குறிப்புப் பொருள் நிலையற்றது. காலத்திற்குக் காலம் இடத்திற்கு இடம் சமுதாயத்திற்குச் சமுதாயம் மாறும் தன்மை கொண்டது. நடை வேறுபாடுகளான குழூஉக்குறி, இடக்கரடக்கல், மங்கல வழக்கு, குழந்தைமொழி என்பனவும் குறிப்புப் பொருளில் அடங்கும். ஒருசொல் கருத்துப் பொருளையும் அதனுடன் தொடர்பு பெற்ற குறிப்புப் பொருளையும் பெறும் வாய்ப்புடையது. எடுத்துக்காட்டாக, நிறச்சொற்களில் கறுப்பு, சிவப்பு, வெள்ளை என்பனவும் உறவுமுறைச் சொற்களில் அம்மா, அண்ணன், மாமா போன்றனவும் கருத்துப் பொருளுடன் குறிப்புப் பொருளையும் பெற்றுள்ளன.

வெள்ளை - 1. வெண்மை நிறம் ( கருத்துப்பொருள் )
2. கள்ளம், கபடமற்ற தன்மை ( குறிப்புப்பொருள் )
3. கள் ( குறிப்புப்பொருள் )

சிவப்பு - 1. சிவப்பு நிறம் ( கருத்துப்பொருள் )
2. இரத்தம் ( குறிப்புப்பொருள் )
3. கம்யூனிசம் ( " )
4. விபச்சாரம் ( " )

அம்மா - 1. தாய் ( கருத்துப்பொருள் )
2. அம்பாள் ( " )
3. அம்மைநோய் ( குறிப்புப்பொருள் )
4. அம்மை நோய் வந்தவன் ( " )

மாமா - 1. தாய்மாமன் ( கருத்துப்பொருள் )
2. மாமனார் ( " )
3. கணவர் ( குறிப்புப்பொருள் )
4. விபசாரம் ( " )

இவற்றைத் தவிர நாத்தனார், அண்ணமண்டி, தம்பிமண்டி, ஆச்சி, அய்யா, அப்பச்சி, பெரிசு என்ற உறவுமுறைச் சொற்களும் குறிப்புப்பொருளைக் கொண்டன ( காண்க: 2.13.2; 2.13.4 ).

### 1.5.3. பயன்பாட்டெல்லை

மூன்றாவது கூறான பயன்பாட்டெல்லை, சொல் அதன் பயன்பாட்டில் ஒரு வரையறையுடன் கையாளப்படும் தன்மையைச் சுட்டி நிற்கின்றது. தமிழில் வழக்கிலுள்ள சம்பளம், கூலி, தொகுப்பூதியம், மதிப்பூதியம், படி என்பனவும் முடி, மயிர், குஞ்சி, கூந்தல், கூழை என்பனவும் இதற்குச் சில எடுத்துக்காட்டுகள் ஆகும்.

சம்பளம் - செய்த வேலைக்காக மாதம் ஒருமுறை பெறும் பணம் ( ஊதிய நிரக்கு )

கூலி - செய்த வேலைக்காகத் தினம்/வாரம் ஒருமுறை பெறும் பணம்.

தொகுப்பூதியம் - செய்த வேலைக்கு ஒவ்வொரு மாதமும் பெறும் குறிப்பிட்ட தொகை.

மதிப்பூதியம் - மதிப்பின் அடிப்படையில் வேலைக்காக மாதம் ஒருமுறை பெறும் பணம்

படி - வேலைக்குப் பெறும் ஊக்கப் பணம் ( குறிப்புப் பொருளுடன் )

உறவுமுறைச் சொற்களில் சங்கத் தமிழில் வழக்கிலுள்ள எந்தை, நுந்தை, தந்தை; யாய், ஞாய், தாய் என்பன முறையே தன்மை, முன்னிலை, படர்க்கை எனும் மூன்று இடங்களுக்கும் உரியன. இப்பண்பு பிற்காலத்தில் மாற்றம் பெற்றுத் தாய், தந்தை என்பன மூன்று இடங்களுக்கும் பொதுவாய் வழங்கப்பெற்றுப் பயன்பாட்டு எல்லையைச் சுட்டுவதாய் உள்ளது.

சொற்பொருளின் கூறுகளான கருத்துப்பொருள், குறிப்புப்பொருள், பயன்பாட்டெல்லை என்பன மூன்றும் ஒரு சொல்லிற்கு இருக்க வேண்டும் என்ற நியதி இல்லை. ஆனால் எல்லாச் சொற்களும் ஒரு கருத்துப் பொருளைப் பெற்றிருக்கும். சொற்கள் குறிப்புப் பொருளைப் பெறுவதற்குப் பல காரணங்கள் கண்டறியப் பெற்றுள்ளன ( சித்திரபுத்திரன், 1992 ) .

### 1.6. சொற்பொருள் உறவுகள்

சொல்லிற்கும் அது குறிக்கும் பொருளுக்கும் இடையே நான்குவித உறவுகளைக் காணமுடியும். அவை:

1. பலபொருள் தன்மை ( Polysemy )
2. ஒருபொருள் தன்மை ( Synonymy )
3. எதிர்த்தன்மை ( Antonomy )
4. மீச்சொல்-உட்பொருள் சொல் தன்மை ( Hyperonymy-Hyponymy )

மேற்கண்ட பொருள் உறவுகளைப் பின்வருமாறு காட்டலாம்.



( 1 )
( பலபொருள் தன்மை )



( 2 )
( ஒருபொருள் தன்மை )




(3) (எதிர்த்தன்மை)

(4) (மீச்சொல்-உட்பொருள் சொல்)

### 1.6.1. பலபொருள் தன்மை

ஒரு சொல் பல பொருள்களைக் கொண்டிருப்பின் அது பலபொருள் தன்மையாகும். இப்பொருள்கள் தம்முள் உறவுடையனவாகவோ வேறுபாடுடையனவாகவோ இருக்கும். மேற்காணும் வரைபடத்தில் பலபொருள் தன்மையும் பொருள் உறவும் பொ$_1$ =பொ$_2$ =பொ$_3$ எனும் விளக்கத்தின் மூலம் காட்டப் பெற்றுள்ளன. பலபொருள் தன்மையில் இடம்பெறும் பொருள்கள் தம்முள் ஓர் அடிப்படைப் பொருள் கூற்றைப் பெற்றிருக்கும். இவ்வாறு, ஓர் அடிப்படைப் பொருளைப் பெற்று, அதிலிருந்து விரிவு பெற்றுவரும் பொருள்களைக் கொண்ட சொற்கள் பலபொருள் சொற்களாகும். இதற்கு மாறாக ஒரு சொல் கொண்டிருக்கும் பொருள்கள் தம்முள் உறவற்றுக் காணப்படின் அது ஒப்புருத்தன்மை (Homonymy) ஆகும். ஒப்புருத்தன்மையில் இரண்டிற்கு மேற்பட்ட சொற்கள் ஒரே ஒலியமைப்பை அல்லது வடிவமைப்பைப் பெற்றிருக்கும். இவ்வகையிலான சொற்கள் ஒப்புருச் சொற்களாகும். ஒப்புருச் சொற்கள் வேறுவேறு சொல் மூலங்களைக் கொண்டன. சொற்களின் ஒப்புருத்தன்மையைக் கீழ்வரும் வரைபடம் மூலம் விளக்கலாம்.




மேற்காணும் வரைபடத்தில் பொருள்கள் தொடர்பற்றன என்பதைக் குறிப்பிட # எனும் குறியீடும் சொற்கள் ஒரே

அமைப்புடையன என்பதைக் குறிப்பிட = எனும் குறியீடும் கொடுக்கப் பெற்றுள்ளன. மொழிகளில் ஒப்புருச் சொற்கள் தோன்றுவதற்குரிய காரணங்களை உல்மென் (1962), சுகுஸ்தா (1977), சிங் (1982) போன்றவர்கள் தெளிவாக விளக்கியுள்ளனர்.

உறவுமுறைச் சொற்களில் காணப்படும் பல்பொருள் தன்மையைப் பின்னிணைப்பில் விரிவாகக் காணலாம் (காண்க: பின்னிணைப்பு).

### 1.6.2. ஒருபொருள் தன்மை

சொற்பொருள் உறவில் அடுத்து வருவது ஒருபொருள் தன்மையாகும். ஓரே பொருளைத் தரும் வேறுவேறு சொற்கள் ஒருபொருட் பன்மொழிகளாகும். மொழிகளில் முழு நிலையிலான ஒருபொருட் பன்மொழிகள் இல்லை என்பது மொழியியல் அறிஞர்களின் கருத்து. எனவே, ஒருபொருட் பன்மொழிகள் முற்று ஒருபொருட் பன்மொழி, பகுதி ஒருபொருட்பன்மொழி என இரண்டு வகைகளாகப் பிரிக்கப்படும். வரைபடத்தில் தரப்பட்டிருக்கும் # எனும் குறியீடு சொற்களின் வேறுபட்ட ஒலியமைப்பைக் காட்டும். ஒரு சொல்லின் மாற்று வடிவங்கள்கூட ஒருபொருட் பன்மொழிகளாகக் கருதப்படுவதுண்டு. ஒருபொருட் பன்மொழிகளின் ஆக்கத்திற்குப் பல காரணங்கள் கண்டறியப்பட்டுள்ளன (சிங். 67). சங்கத் தமிழில் தாய், தந்தை, கணவன், மனைவி போன்ற சொற்களுக்குப் பல ஒருபொருட் பன்மொழிகள் வழக்கிலுள்ளன.

### 1.6.3. எதிர்த்தன்மை

சொற்களுக்கிடையே காணப்படும் முரண்பட்ட அல்லது வேறுபட்ட பொருள் தன்மையைக் குறிப்பிடுவன எதிர்மறைச் சொற்களாகும். எதிர்மறைச் சொற்கள் என்று பொதுநிலையில் அழைக்கப்பட்டாலும் அவற்றில் பல வகைகள் இடம்பெற்றுள்ளன (சித்திரபுத்திரன், 1992). அவற்றுள் ஒன்று எதிர் எதிர்மறை (Reciprocal) ஆகும். உறவுமுறைச் சொற்களைப் பொறுத்தமட்டில் கணவன்-மனைவி, அண்ணன்-தம்பி என்பன எதிர் எதிர்மறைச் சொற்களாகும்.




இச்சொற்களில் ஒருசொல்லுக்கு மற்றொரு சொல் எதிர்ப் பண்பைக் கொண்டது. எடுத்துக்காட்டாக A கணவனானால் B அவனது மனைவி. B மனைவியானால் A அவளது கணவன். இங்கு ஒருவருக்கு ஒருவர் நேர் எதிர் உறவுடையவர் ஆவார்கள்.

### 1.6.4. மீச்சொல்-உட்பொருள் சொல்

மீச்சொல்-உட்பொருள் தன்மையில் சொற்களுக்கும் அவை அடங்கியுள்ள புலத்திற்கும் இடையிலான உறவு பல்வேறு நிலைகளில் காட்டப்படும். வரைபடம் ( 4 ) இல் சொல்$_4$ சொல்$_5$ சொல்$_6$ என்பன சொல்$_1$ சொல்$_X$ என்பதன்கீழ் அடங்குகின்றன. சொல்$_4$-இன் பொருளை விளக்க வேண்டுமெனில் சொல்$_1$, சொல்$_X$, என்பனவற்றின் பண்புகளும் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும். உறவு முறையில் ஒவ்வொரு தலைமுறையின்கீழ் அடங்கும் உயர்நிலை உறவுகள் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.




பேரன் என்ற சொல்லை விளக்க மேற்சொல்லான மகன், தனியன் என்பவை சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும். இவ்வகையான வழக்கம் பல்வேறு தலைமுறைகளுக்குரிய உறவுகளைத் தெளிவாக விளக்கிடப் பயனுள்ளதாக அமையும்.

### 1.7. உறவுமுறைச் சொற்களின் சொற்பொருண்மைக் கூறுகளும் சொற்பொருள் உறவுகளும்

* உறவுமுறைச் சொற்களுக்கு உறவு முறையே கருத்துப் பொருளாகும். உறவு

முறையைக் கருத்துப் பொருளாகக் கொண்ட உறவுமுறைச் சொற்கள் குறிப்புப் பொருளையும் பயன்பாட்டு எல்லையையும் பெற்று நிற்கும் வாய்ப்புடையன.

* ஓர் உறவுமுறைச் சொல் பல உறவு முறைகளைத் தாங்கிப் பல்பொருள் சொல்லாகவும் செயல்படுகின்றது.

* ஓர் உறவுமுறையைக் குறிப்பிட பல உறவு முறைச் சொற்கள் காணப்படுகின்றன.

* உறவுமுறைச் சொற்கள் உறவுமுறை யல்லாத பிற பொருளைக் குறிக்கவும் பொருள் விரிவு பெறுவது உண்டு (காண்க-2.13.2).

* பொதுப்பொருளைக் கொண்ட பல சொற்கள் உறவு முறையைக் குறித்தும் பொருள் சிறப்பு அடைவது உண்டு (காண்க-2.13.3)

* சங்கத்தமிழில் பயின்றுவரும் உறவு முறைச் சொற்களில் சில தனியொரு அமைப்பைக் கொண்டன. இவை மூவிடப் பெயர்களை (Pronouns) முன்னொட்டாகக் கொண்டுள்ளன. இது ஓர் இன்றியமையாத சொற்பொருண்மைப் பண்பாகும்.

# 2. உறவுமுறை அமைப்பும் உறவுமுறைச் சொற்களும்

## 2.0. முன்னுரை

உறவுமுறை பல்வேறு உறவுகளை இணைக்கும் பாலமாகும். உறவுமுறைச் சொற்களின் ஒட்டுமொத்த நிலையும் உறவுமுறைச் சொற்களைப் பயன்படுத்தும் விதிமுறைகளும் உறவுமுறை அமைப்பாகும். அதாவது 1. ஏற்றுக் கொள்ளப்பட்ட உறவு சமுதாயக் கூறுகளின் அடிப்படையில் எவ்வாறு வகைப்படுத்தப் படுகிறது அல்லது பிரிக்கப்படுகிறது என்ற நிலையே உறவுமுறை அமைப்பு ஆகும். 2. உறவுமுறை அமைப்பு உறவுகளின் தொகுப்பு நிலையிலான அமைப்பாகும். இது இரத்தம் மற்றும் மணத்தொடர்பால் மனிதர்களிடையே ஏற்படும் மொத்த உறவுகளைக் குறிப்பதாகும். தனிப்பட்டவர்களிடையே காணப்படும் உறவு, உறவுமுறை அமைப்பு மூலம் ஆளப் படுகின்றது. உறவுமுறையில் காணப்படும் உறவின் பிணைப்பே ஒரு குழுவை மற்றொரு குழுவுடன் இணைப்பதற்கும் ஒரு குழுவில் அடங்காதவர்களை வேறுபடுத்தி அறியவும் பயன்படுகின்றது. சமுதாயக்குழு அமைப்பிற்கு உறவுமுறை அடிப்படையாக அமைகின்றது.

உறவுமுறை அமைப்பு உயிரியல் ( Biological ) கூறுகளை அடிப்படையாகக் கொண்டிருந்தாலும் அது பண்பாடு மற்றும் சமுதாயம் சார்ந்த பண்புகளை உள்ளடக்கிய தாகவும் உள்ளது. உறவுமுறைகளை வகைப்படுத்தும் தன்மை சமுதாயத்தில் அவ்வுறவுகள் பங்கு பெறும் இயல்புக்கு ஏற்பவே அமைகின்றது. பண்பாட்டை அடியொற்றியே பெரும்பாலும் ஒரு சமுதாயம் உறவுமுறைகளை வகைப்படுத்திக் கொள்கின்றது. உறவுமுறை அமைப்பும் வகைப்பாடும் சமுதாயத்தையும் அச்சமுதாய மக்களின் பழக்க வழக்கங்களையும் பண்பாட்டுக் கூறுகளையும் ஒழுங்குபடுத்தி நிற்கின்றன. மனிதச்

சமுதாயங்களுக்கிடையே பொதுநிலையில் வேறுபாடு காணப்படுவதாலும் உறவுமுறை அமைப்புப் பண்பாட்டினால் வரையறுக்கப்படுவதாலும் உறவுமுறை அமைப்பிலும் அவ்வமைப்பு வெளிப்படுத்தும் உறவுமுறைச் சொற்களிலும் பல வேறுபாடுகள் காணப்படுகின்றன.

மக்கள் பொதுவாக இனக்குழுக்களின் வழியாக உறவுபடுத்தப்படுகின்றனர். இவ்வுறவு எல்லாவிடத்தும் எல்லாக் காலங்களிலும் பொதுமையான ஒன்றாக விளங்குவதில்லை. உறவுமுறை அமைப்பில் உறவுமுறைச் சொற்கள் ஒரு கூறாக இயங்குகின்றன. இவை சமுதாயங்களில் நிலவும் உறவுமுறையைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகின்றன.

ஒவ்வொருவருக்கும் பெற்றோர் உறவுமுறை உண்டு. அதாவது தாய், தந்தையர் உண்டு. அவர்களுக்குப் பிள்ளைகள் உண்டு. குழந்தைகளுக்குள் சகோதர, சகோதரி உறவுகள் உண்டு. பொதுநிலையில் கொள்ளப்படும் இவ்வுறவு, மொழிகளில் பல்வேறு வகைகளில் வழங்கப்படுவதை அகராதி அறிஞர் சுகுஸ்தா பின்வருமாறு விளக்குவார்:




A ஒரு தனியன். B அவனது தங்கை. C அவள் கணவர். D என்பது B-Cயின் மகன். F என்பது E-யின் கணவர் எனின் ஆங்கிலமொழிப் பேச்சாளர்களுக்கு A என்பவர் F என்பவரின் தாத்தா ஆவார். ஆனால் தகலாக் மொழியில் F என்பவருக்கு A கசின் உறவாகும் (சுகுஸ்தா). இங்கு ஆங்கில மொழியிலும் தகலாக் மொழியிலும் A இருவேறு வகைகளில் உறவினராகக் கொள்ளப்படுகின்றார்.

## 2.1. உறவுமுறை அமைப்பும் செயல்பாடும்

மொழிகளில் உறவுமுறை வகைப்பாடு அறிவியல் வகைப்பாடாகவோ உயிரியல் வகைப்பாடாகவோ பண்பாட்டுக் கூறுகளின் அடிப்படையில் அமைந்த வகைப்பாடாகவோ இருக்கும். உறவுமுறை பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு வகைகளில் வகைப்படுத்தப் பட்டுள்ளது.

உறவுமுறை பொதுநிலையில் இன்றியமையாத இரண்டு பெரும் பிரிவுகளின் கீழ் வகைப்படுத்தப்படுகின்றது. அவை:

1. இரத்த உறவு ( Consanguinal relation )

2. மண உறவு ( Affinial relation )

உறவுமுறை தனி மனிதர்களை இரத்தம் மற்றும் திருமணம் மூலம் இணைக்கும் பாலமாக விளங்குகின்றது. தனியனின் பிறப்பின் வழி பெறப்படும் உறவு இரத்த உறவாகும். அதாவது தனியனின் தந்தை, தாய், மகன், மகள், சகோதர, சகோதரிகள் ஆகியோர் இரத்த உறவினர் ஆவர். ஓர் ஆணோ பெண்ணோ திருமணம் செய்து கொள்வதன்மூலம் பெறப்படும் உறவு மண உறவாகும். இரத்த உறவுடையோர் வாழ்நாள் முழுவதும் இரத்த உறவுடையோராகவே இருப்பர். மண உறவுடையோர் மண உறவுடையோராகவே இருப்பர். மண உறவுக்கு எடுத்துக்காட்டாகக் கணவன், மனைவி, கணவன்/மனைவியின் சகோதர/சகோதரிகள், மாமனார், மாமியார் போன்ற உறவினர்களைக் குறிப்பிடலாம்.

மேற்காணும் இரு உறவுகளைத் தவிரப் போலி உறவு ( Fictive relation ) என்ற உறவுநிலையும் வழக்கிலுள்ளது. இரத்தம் மற்றும் மணஉறவு எனும் உறவுமுறைகள் இன்றி, ஓர் இனத்தை அல்லது குழுவைச் சார்ந்த ஒருவரை உறவுமுறைச் சொல்லைப் பயன்படுத்தி அழைக்கும் செயல் போலி உறவுக்கு எடுத்துக்காட்டாகும். இம்முறை உறவுமுறைச் சொற்களின் பொருள் விரிவை உணர்த்துவதாய் அமைகின்றது.

திருமண உறவு ஏற்பட்டாலும் ஏற்படாவிட்டாலும் பொதுநிலையில் மணஉறவு கொள்ளத்தக்கவர் வாய்ப்பு மணநிலையினர் ( Potential affines ) என்று அழைக்கப்படுவர். திருமணத்தை அடிப்படையாகக் கொண்டு நோக்கின் இரண்டு வகையினர் சமுதாயத்தில் இடம்பெறுவதைக் காண இயலும்.

1. மெய்யாகவே மணஉறவு பெற்றவர்
2. மணஉறவு கொள்ளத்தக்கவர்

என்பவர் அவ்விரு வகையினர் ஆவர். மரபுவழித் திருமணங்கள் இத்தகைய உறவுகளை ஏற்படுத்துகின்றன எனக் கூறலாம். உறவுமுறை அமைப்பு, உறவுமுறை அமைப்பில் இடம்பெறும் பல்வேறு கூறுகள், உறவுமுறை வரைபடம் இன்ன பல செய்திகளை விளக்கமாகக் காண்போம்.

உறவுமுறை அமைப்பும், அவ்வமைப்பில் இடம்பெறும் உறவுமுறைச் சொற்களும் மானிடவியல் உறவுமுறைப் படங்கள் மூலம் விளக்கப்படுகின்றன. இதற்குப் படங்களில் பல குறியீடுகள் பயன்படுத்தப்படுவதுண்டு. உறவுமுறை அமைப்பின் பல்வேறு பண்புக் கூறுகள் இவ்வரைபடங்களில் குறிக்கப் பெறுகின்றன. வரைபடங்கள் கிடைநிலை ( Horizontal ) மற்றும் உயர்நிலைக் ( Vertical ) கோடுகளைக் கொண்டிருக்கும். அவற்றைச் சுருக்கமாக முதலில் காண்போம்:

எந்தத் தனி நபரிடமிருந்து உறவுமுறை கணிக்கப் பெறுகின்றதோ அவர் தனியன் ( ego ) என்று அழைக்கப் பெறுகின்றார். தனியன் ஆண் எனின் ▲ என்ற குறியீடும் பெண் எனின் ● என்ற குறியீடும் பயன்படுத்தப்படுகின்றன. எந்த நபர் உறவு முறையால் குறிக்கப் படுகின்றாரோ அவர் உறவுநபர் ( altar ) என்று அழைக்கப்படுகின்றார்.

எடுத்துக்காட்டாக 'இராமனின் தாய்' என்று சொல்லும் பொழுது இராமன் தனியன்; தாய் உறவு நபர் ஆகும். உறவு முறை வரைபடங்களில் ஆண்-பெண் வேறுபாடு முறையே △ ○ எனும் குறியீடுகள் மூலம் குறிக்கப்பெறுகின்றது. இரத்த உறவைக் குறிக்க ஒற்றைக் கிடைநிலைக் கோடும் ( - ) திருமண உறவைக் குறிக்க இரு கிடைநிலைக்

கோடுகளும் (=) பயன்படுத்தப் பெறுகின்றன. தலைமுறை வேறுபாடு வரைபடங்களில் கோடுகளின் உயர்வு, தாழ்வு மூலம் காட்டப் பெறுகின்றது. தனியன் பொதுவாகத் திருமணம் ஆகாத ஆணாகவோ/பெண்ணாகவோ இருப்பார். தனியன் எவரிடம் உறவு கொண்டுள்ளார், அவர் ஆணா/பெண்ணா, அவர் வயது என்பதைப் பொறுத்து உறவுமுறைச் சொற்களில் மாற்றம் நிகழ்கின்றது. ⊥ என்பது இறங்கு உறவையும் ┌──┐ என்பது கிடைநிலை உறவையும் குறிக்கும்.



△=○ என்பது கணவன் மனைவியைக் குறிக்கும். ▲ என்பது தனியனின் பெற்றோரைக் குறிக்கும். △▲○ என்பது தனியனுக்கு ஆண், பெண் என்ற இரண்டு உடன் பிறப்புகள் உண்டு என்று குறிப்பிடும். வரைபடத்தின் வலது பக்கத்தில் வருபவர் பெண்ணாகவும் இடது பக்கம் வருபவர் ஆணாகவும் இருப்பர். சகோதர/சகோதரிகளின் தொடர் வயது மூப்பு (மூ) இளமை (இ) என்ற விளக்கங்கள் மூலம் பெறப்படும்.

## 2.2. குடும்பமும் உறவுமுறையும்

உறவுமுறை அமைப்பில் குடும்ப அமைப்பும் குல அமைப்பும் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. உறவுமுறை அமைப்பு குடும்பத்தையும் அதன்வழி விரிவடையும் மரபையும் உள்ளடக்கியதாகும். பொதுவாகத் தாய்வழி மற்றும் தந்தை வழிக் கூட்டுக்குடும்பம் மற்றும் தனிக்குடும்பம் இவற்றிற்கு இடைப்பட்ட சிறு கூட்டுக்குடும்பம் ஆகியன உறவுமுறை அமைப்பில் காணப்படும் குடும்ப வகைகளாகும் (இராபர்ட் சத்திய சோசப் 1996, 19). ஒரு குடும்பத்தில் இரத்த உறவையும் திருமண உறவையும் காண இயலும். கணவன், மனைவி அவர்களின் குழந்தைகள் அடங்கிய குடும்பம் சிறு குடும்பமாகும். பல சிறு குடும்பங்கள் இணைந்து ஒரு கூட்டுக் குடும்பம் ஏற்படுகின்றது. சிறு குடும்பம் தனிக்குடும்பம் (Neuclear family) ஆகும். பெற்றோர் குழந்தைகள் என்ற

தனிக்குடும்பம் எல்லாச் சமுதாயத்திலும் உறவின் அடிப்படையாக விளங்குகின்றது. ஆனால் குடும்பத்திலுள்ள உறவுகளின் அமைப்பும் பண்பாடும் மாற்றம் பெற்றுக் காணப் படுகின்றது. இக்குடும்ப வகைப்பாட்டிற்குப் பொருளாதாரமே அடிப்படையானது. பொருளாதார வசதி இல்லையெனின் கூட்டுக் குடும்பம் தனிக்குடும்பமாகும். இதைப் போன்று பல்வேறு காரணங்களால் தனிக்குடும்பம் கூட்டுக் குடும்பம் ஆகலாம். சங்க இலக்கியத்தில் தனிக்குடும்ப அமைப்பே நிலவுகின்றது. மேற்கண்ட குடும்ப அமைப்புகளைக் கீழ்வருவன போன்று விளக்கலாம்.

* தாய்-தந்தை மட்டும் உள்ள குடும்பம்



* தந்தைவழிக் குடும்பம்



* தாய்வழிக் குடும்பம்



என்பன முறையே தந்தைவழியையும் தாய்வழியையும் குறிப்பிடுகின்றன.

* தாய் - தந்தை - குழந்தைகள் உள்ள தனிக்குடும்பம்



* தாய் - தந்தை - மகன்/மகள் மற்றும் கணவன்-மனைவி அடங்கிய கூட்டுக்குடும்பம்.



கூட்டுக்குடும்பம் என்பது தாய்-தந்தை -மகன்-மகள் -மகன்/மகளின் குழந்தைகள் என்பவர் அடங்கிய குடும்பமாகும். குறிப்பிட்ட ஒரு நிலையிலிருந்து இவ்வுறவு முறைகள் பார்க்கப்பட வேண்டும் என்பதற்காகப் பொதுவாகத் தனியன் வரைபடங்களில் குறிக்கப்படுவதுண்டு.



( தனியன் )

## 2.3. உறவுநிலைகள்

உறவினர்களின் நெருக்கத்தைப் பொறுத்து உறவு முறை 1) நேரடி உறவு ( Direct relation ), 2 ) மறை உறவு ( Indirect relation ) எனும் இரண்டு நிலைகளில் காணப்படு கின்றது. இவ்விரண்டு உறவுகளும் வம்சவழி அல்லது மரபின் தூரத்தைப் பொறுத்து அமைகின்றன. மறை உறவு அதிக தூரத்தைக் கொண்ட உறவாகும். தனியனின் மேல், கீழ் இரண்டு தலைமுறைகளுக்கும் கூடுதலாக அமையும் உறவைத் தூரத்து உறவு என்பர். எனினும் தூரத்து உறவை முடிவு செய்வது சூழலும், தனியனின் பழக்க வழக்கங்களும்தான் என்று கூறலாம்.

முர்டாக் ( 1949:94 ) உறவுமுறையை நான்கு படிநிலைகளின் கீழ் விளக்குவார். அவை:

1. முதல்நிலை உறவு/அடிப்படை உறவு ( Primary relation )
2. இரண்டாம்நிலை உறவு ( Secondary relation )
3. மூன்றாம்நிலை உறவு ( Tertiary relation )
4. தூரத்து உறவு ( Distant relation )

* முதல்நிலை அல்லது அடிப்படை உறவில் தனியனின் பெற்றோர், உடன்பிறந்தோர், மனைவி மற்றும் குழந்தைகள் அடங்குவர்.




* இரண்டாம்நிலை உறவில் தந்தையின் தந்தை, தந்தையின் தாய், தந்தையின் சகோதர சகோதரிகள் அடங்குவர்.




இங்குத் தனியனின் முதல்நிலை உறவினரின் ( தந்தை-1 ) முதல்நிலை உறவினர் ( தந்தை-2 ) தனியனுக்கு இரண்டாம்நிலை உறவினராகுகின்றார்.

* தந்தையின் தந்தையின் தந்தை, தந்தையின் தாய் தந்தையின் சகோதரனின் குழந்தைகள் ஆகியோர் தனியனின் மூன்றாம்நிலை உறவினர்களாவர்.




தனியனின் இரண்டாம் நிலை உறவினரின் முதல்நிலை உறவினர் அவருக்கு மூன்றாம்நிலை உறவினராவார். முர்டாக்கின் கருத்துப்படி இம்மூன்று உறவு நிலைகளிலும் இடம்பெறாது விடுபட்ட, குறிப்பாகப் பல தலைமுறைகளுக்கு மேல், கீழ் உள்ள உறவினர்களும் மணஉறவின் மூலம் பெறப்படும் பல உறவினர்களும் தூரத்து உறவினர்கள் ஆவார்கள்.

உறவுமுறை விரிவாக்கக் கோட்பாட்டின் அடியாக எழுந்த இப்படிநிலைகள் பற்றுறுதி, பாசம் மற்றும் பல்வேறு உணர்வுகளின் அளவைகள் ஆகியவற்றின் அடிப்படையில் மாறுபடுவதுண்டு ( இராபர்ட் சத்திய சோசப் 1996:15 ) . சங்க இலக்கியத்தைப் பொறுத்தமட்டில் முதல்நிலை உறவினர் பற்றிய செய்திகளே மிகுதியும் இடம்பெற்றுள்ளன.

## 2.4. ஒருபோகு உறவு:குறுக்கு உறவு

உறவுமுறை அமைப்பில் காணப்படும் மற்றொரு வகைப்பாடு ஒருபோகு உறவு ( Parallel kinship ) மற்றும் குறுக்கு உறவு ( Cross kinship ) என்பதாகும். இவ்வகைப் பாட்டை முதன்முதலில் டபுள்யு.ஏ.ஆர். ரிவர்ஸ் என்பவர் அறிமுகப்படுத்தினார். திராவிட உறவுமுறை அமைப்பு இவ்விருவகை வேறுபாடுகளைக் கொண்டது.

தாயின் சகோதரியின் பிள்ளைகளும் தந்தையின் சகோதரரின் பிள்ளைகளும் ஒருபோகு உறவினர் ஆவர். அதாவது பெற்றோரின் உடன்பிறந்தவர்களில் பெற்றோரின் பாலைச் சேர்ந்தவர்களின் பிள்ளைகளின் உறவாகும். இவ்வுறவு பங்காளி உறவாகும். மாறாகத் தாயின் சகோதரரின் பிள்ளைகளும் தந்தையின் சகோதரியின் பிள்ளைகளும் குறுக்கு உறவினராவர். அதாவது பெற்றோரின் உடன்பிறந்தவர்களில் பெற்றோரின் எதிர்பாலைச் சார்ந்தவர்களின் உறவினர் இவ்வகைக்குரியவர். இது மாமன் முறை உறவாகவும் குறிக்கப்பெறும். இவ்வகை உறவுகளைப் பின்வரும் வரைபடங்கள் மூலம் காட்டலாம்:










(2)

சமுதாயங்களில் ஒருபோகு உறவினர்களிடையே திருமண உறவு ஏற்படுவதில்லை. ஆனால் குறுக்கு உறவில் சகோதர சகோதரிகளின் பிள்ளைகளுக்கிடையே திருமணம் நிகழ்கின்றது. இத்தகைய பண்பு திராவிட மொழிக்

குடும்பங்களின் சிறந்த பண்பாகவும் தனிப் பண்பாகவும் காணப்படுகின்றது. ஆரியர்களிடையே இவ்வழக்கம் இல்லை. ஆரிய மரபில் குறுக்கு உறவில் திருமணம் செய்து கொள்வதில்லை. இவ்வுறவுகளில் பல சிக்கல்களும் உறவுமுறை மாற்றங்களும் ஏற்படுகின்றன. இராபர்ட் சத்திய சோசப் ( 1996:10 ) இச்சிக்கலை விரிவாக விளக்குவார்.

## 2.5. இரத்த உறவு: மண உறவு
( Consanguinal and Affinal relations )

உறவுமுறை, அடிப்படையில் இரத்த உறவு மற்றும் மணஉறவு எனும் இரண்டு பிரிவுகளில் அடங்கும். தனியனுடன் சிலர் இரத்தவழியும் சிலர் திருமணத்தின் வழியும் உறவு பெற்றிருப்பர்.

திருமண உறவு என்பது ஒருவரின் திருமணத்தின் மூலம் பெறப்படும் உறவாகும். பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்கும் உள்ள உறவு இரத்த உறவாகும். இரத்த உறவு உயிரியல் பண்பை அடிப்படையாகக் கொண்டது. தனியனின் தாய், தந்தை, சகோதரன், சகோதரி, மகன், மகள் என்ற உறவுகள் இரத்த உறவுக்கு எடுத்துக்காட்டாகும். தனியனின் மனைவி/கணவன், மாமி, மாமனார், மைத்துனர், கொழுந்தன், கொழுந்தி எனும் உறவுகள் மணஉறவுக்குச் சான்றுகளாகும். பெரும்பாலான மொழிகளில்/சமுதாயங்களில் இரத்தம் மற்றும் திருமண உறவுகளைக் குறிக்கத் தனித்தனிச் சொற்கள் காணப்படுகின்றன. இரத்த உறவு தொடரும் தன்மையது. அது ஒருபோதும் அறுந்து விடுவதில்லை. ஆனால் திருமணத்தின்வழி பெறப்படும் மண உறவு அறுந்துவிடும் தன்மையது. திருமண உறவு தடைபட்டுவிட இரத்த உறவு மேலும் மேலும் தொடர்ந்து தடையின்றிச் செல்லும் தன்மையது என்று கூறலாம்.

இரத்த உறவு உயர்நிலை உறவையும் ( Lineal relation ) மண உறவு கிடைநிலை ( Collateral relation ) உறவையும் காட்டுகின்றன.







## 2.6. தலைமுறை ( Generation )

உறவுமுறை வகைப்பாட்டில் தலைமுறை முக்கிய இடத்தினைப் பெறுகின்றது. தலைமுறை தனியனை அடிப்படையாகக் கொண்டு கணிக்கப்பெறும். உறவுமுறை பல தலைமுறைகளுக்கு உரியது. ஒவ்வொரு தலைமுறைக்கும் தனித்தனி உறவுமுறைச் சொற்கள் காணப்படுகின்றன. இச் சொற்கள் அவ்வத் தலைமுறைகளை வெளிக்காட்டுவனவாக அமைகின்றன. தலைமுறை மூன்று அளவைகளைக் கொண்டது. அவை:

1. ஏறு தலைமுறை ( Ascending generation )
2. இறங்கு தலைமுறை ( Descending generation )
3. தனியன் தலைமுறை ( Ego's generation )

தனியன் சார்ந்துள்ள காலத்துக்குரிய தலைமுறை தனியனின் தலைமுறையாகும். இது பொதுவாகத் தலைமுறை 0 ( த.மு.0 ) என்று குறிக்கப்பெறும். இத் தலைமுறைக்கு முன் உள்ள தலைமுறை ஏறு தலைமுறையாகும். ( தமு + 1, தமு+ 2, தமு + 3 ) தனியனுக்குப் பின் உள்ள தலைமுறை இறங்கு தலைமுறையாகும் ( தமு-1, தமு-2, தமு-3 ). இதைப் பின்வரும் வரைபடத்தின் மூலம் விளக்கலாம்:







தலைமுறை+1 தனியனின் பெற்றோர் தலைமுறையாகும். தலைமுறை+2 தனியனின் பாட்டன்-பாட்டி தலைமுறையாகும். தலைமுறை+3 பாட்டன்-பாட்டியின் பெற்றோர் தலைமுறையாகும்.

இறங்கு தலைமுறையில் தலைமுறை-1 என்பது தனியனின் மகன்/மகளையும் தலைமுறை-2 தனியனின் பேரன்/பேத்தியையும் தலைமுறை-3 பேரன்/பேத்தியின் பிள்ளைகளையும் குறிக்கும். இவ்வாறு பொதுவாகச் சில சமுதாயங்களில் ஏறு தலைமுறையில் நான்கு தலைமுறை வரையிலும் சொற்கள் காணப்படுகின்றன. இறங்கு தலைமுறையில் மூன்று தலைமுறைகளுக்குரிய சொற்கள் பொதுவாகக் காணக்கிடைக்கின்றன. எடுத்துக்காட்டாகப் பின்வரும் உறவுமுறைச் சொற்களைக் காண்போம்:

| ஏறு தலை முறை | எள்ளுத் தாத்தா ( தமு+4 ) ← | கொள்ளுத் தாத்தா ( தமு+3 ) ← | தாத்தா ( தமு+2 ) ← | தந்தை ( தமு+1 ) |
|---|---|---|---|---|
| இறங்கு தலை முறை | மகன் ( தமு-1 ) → | பேரன் ( தமு-2 ) → | கொள்ளுப் பேரன் ( தமு-3 ) → | எள்ளுப் பேரன் ( தமு-4 ) |

சில சமுதாயங்களில் ஏறுதலை முறையில் தலைமுறை 1இல் பெற்றோருக்கான சொற்கள் பொதுவாய்க் காணப்படப் பிற தலைமுறைகளுக்குரிய சொற்கள் சில அடைகளைப் பயன்படுத்துவதன் மூலம் பெறப்படும்.

பெரிய பெரிய தாத்தா

↑

பெரிய தாத்தா

↑

தாத்தா

↑

தனியன்

இறங்கு தலைமுறை என்பது பண்பாடு அல்லது உயிரியல் அடிப்படையில் பெற்றோருடனான இணைப்பாகும். இறங்குமுறையில் இரண்டு பிரிவுகள் உள்ளன. அவை:

1. தந்தைவழி உறவு ( Patrilineal relation )

2. தாய்வழி உறவு ( Matrilineal relation )

ஒருவர் தந்தை வழியிலான உறவைக் கொண்டிருந்தால் அவர் தந்தைவழி உறவினர் என்றும், தாய்வழியிலான உறவைக் கொண்டிருப்பின் தாய்வழி உறவினர் என்றும் அழைக்கப்படுவர்.

## 2.7. உயர்நிலை உறவு:கிடைநிலை உறவு ( Lineal:Collateral relations )

உயர்நிலை உறவு என்பது நேர்நிலையில் ஒன்றன்கீழ் ஒன்று அமைந்த உறவாகும். எடுத்துக்காட்டாக,

தாத்தா--தந்தை--மகன்--என்றஉறவு தனியனுடன் கீழ் நேராக உயர்நிலையில் ஒரேநேர் கோட்டில் அமைந்த உறவாகும்.

தாத்தா

↑

தந்தை

↑

மகன்

தனியனின் சகோதர, சகோதரி உறவு இதற்கு எடுத்துக் காட்டாகும். கிடைநிலை உறவு மணத் தொடர்பாலும் ஏற்படுவதுண்டு.




சிலசமுதாயங்களில் கிடைநிலை உறவு சரியாக வேறுபடுத்திக் காட்டப்படாத நிலை உள்ளது. கிடைநிலை உறவில் ஒருபோகு உறவும், குறுக்கு உறவும் இரு வேறுபட்ட உறவுமுறைகளாகும்.

## 2.8. பால்

உறவு முறையைக் குறிப்பிடுவதில் பால் ஓர் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றது. தனியன் மற்றும் குறிநபர் ( alter ) ஆணா அல்லது பெண்ணா என்பதற்கேற்ப உறவுமுறைச் சொற்கள் மாற்றம் பெறுகின்றன. பால் வேறுபாடு தலைமுறை வேறுபாடின்றி எல்லாத் தலைமுறைகளிலும் காணப்படுகின்றது.

சில மொழிகளில் ஆண்/பெண் வேறுபாடின்றி உறவுமுறைச் சொற்கள் பயன்படுத்தப் படுவதுண்டு. இதற்கு எடுத்துக்காட்டாகக் 'காட்டு நாயக்கர்' போன்ற மலைவாழ் மக்களின் மொழியைக் குறிப்பிடலாம். ஆங்கில மொழியிலுள்ள ( Cousin ) எனும் சொல் இதற்கு எடுத்துக்காட்டாகும் ( காண்க: 5.0 ).

பாட்டன்-பாட்டி
|
தந்தை-தாய்
|
கணவன்-மனைவி
|
மகன்-மகள்
|
பேரன்-பேத்தி

மேற்கண்ட உறவுமுறைச் சொற்கள் உயர்நிலைக்குரியன.

மாமன்-மாமி, மைத்துனன்-மைத்துனி, கொழுந்தன்-கொழுந்தி, மருமகன்-மருமகள் என்பன கிடைநிலைக்குரிய சொற்களாகும். தமிழ் மொழியில் பால் வேறுபாடு பொதுவாகச் சில உருபன்கள் ( ன் -> ள், ன் -> இ, ன் -> ச்சி போன்றன ) மூலம் காட்டப்படுகின்றது.

## 2.9. வயது

உறவுமுறை வகைப்பாட்டில் வயது வேறுபாடு இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றது. தனியனின் பெற்றோர் தலைமுறையில் வயது அடிப்படையில் பெரியப்பா, சித்தப்பா, பெரியம்மா, சின்னம்மா போன்ற சொற்களும், தனியனின் தலைமுறையில் அண்ணன்-தம்பி, அக்காள்-தங்கை போன்ற சொற்களும் வழக்கிலுள்ளன. இறங்கு தலைமுறையில் வயது அடிப்படையில் உறவினர்களை வேறுபடுத்த 'பெரிய', 'சின்ன', 'நடு' எனும் அடைகள் பயன்படுத்தப் படுகின்றன.

> பெரிய அண்ணன்-நடுஅண்ணன்-சின்ன அண்ணன்-
> பெரியதம்பி-நடுத்தம்பி-சின்னதம்பி

இதைப்போன்று அக்காள், தங்கை எனும் சொற்களும் அடைகளுடன் பயன்படுத்தப் பெறுகின்றன ( காண்க: ப.5.0 ).

ஆங்கிலம் போன்ற மொழிகளில் சில உறவுமுறைச் சொற்களில் வயது கணக்கில் கொள்ளப்படுவதில்லை. இதற்கு எடுத்துக்காட்டாக 'aunt', 'uncle' எனும் சொற்களைக் குறிப்பிடலாம்.

தனியனின் வயது, குறிநபரின் வயது, தொடர்புறும் உறவினர் வயது எனும் மூன்று அடிப்படைகளில் உறவுமுறைச் சொற்களுக்குள் மாற்றம் நிகழ்கின்றது. ஏறு தலைமுறையில் தனியனைவிட வயது அதிகம் உள்ளவர்களும் இறங்கு தலைமுறையில் தனியனைவிட அதிக வயதினரும், குறைந்த வயதினரும் இடம்பெறுவர்.

வயது ஏற்றம் — ஏறு தலைமுறை




வயது இறக்கம் — இறங்கு தலைமுறை

ஒவ்வொரு தலைமுறையிலும் உறவினர்களுக்கிடையே காணப்படும் வயது அடிப்படையில் வேறுபட்ட உறவுமுறைச் சொற்கள் வழக்கிலுள்ளன.

## 2.10. உறவுமுறை அமைப்பு வகைப்பாடு

### 2.10.1. முர்டாக் வகைப்பாடு

குறுக்கு உறவினரைத் திருமணம் செய்து கொள்வதும் ஒருபோகு உறவினரோடு திருமணத்தைத் தடைசெய்வதும் சமுதாயங்களில் காணப்படுகின்ற ஒரு பண்பாகும். இது சமுதாயப் பண்பாட்டுக் கூறுகளை வெளிக்காட்டுவதாய் அமைகின்றது. முர்டாக் குறுக்கு உறவுமுறையைப் பின்வரும் ஆறு வகைகளாகப் பிரித்து விளக்குவார் (முர்டாக், 1949; இராபர்ட் சத்திய சோசப், 1996:26).

1. ஹவாயன் கசின் உறவுமுறை அமைப்பு
2. சுடேனிஸ் கசின் உறவுமுறை அமைப்பு
3. எஸ்கிமோ கசின்உறவுமுறை அமைப்பு
4. ஈறாக்கியஸ் கசின் உறவுமுறை அமைப்பு
5. குறோ கசின் உறவுமுறை அமைப்பு
6. ஒமேகா கசின் உறவுமுறை அமைப்பு

என்பனவாகும்.

* ஹவாயன் கசின் உறவுமுறை அமைப்பில் தனியனின் பெற்றோர்களின் பிள்ளைகள் அதாவது தனியனின் உடன்பிறந்த சகோதர, சகோதரிகளும் அப்பெற்றோர்களின் சகோதர, சகோதரிகளின் பிள்ளைகளும் ஒரு குறிப்பிட்ட பிரிவின் கீழ் வகைப்படுத்தப்படுவர். உறவுமுறைச் சொற்களில் பால் ஒன்றைத் தவிர மாற்றம் எதுவும் இல்லை. ஒரே சொல்லால் எல்லா உறவினர்களும் அழைக்கப்படுகின்றனர்.

* சுடேனிஸ் அமைப்பு உறவாயன் அமைப்பிற்கு மாறானது. ஒருவரின் பெற்றோரின் சகோதர சகோதரிகளின்

பிள்ளைகள் ஒருவருக்கொருவர் வேறு படுத்தப்படுகின்றனர். உடன்பிறப்புகளில் இருந்தும் வேறுபடுத்தப்படுகின்றனர்.

* எஸ்கிமோ கசின் அமைப்பு முறையில் தனியனின் பெற்றோரின் எல்லாச் சகோதர, சகோதரிகளின் பிள்ளைகளும் ஒன்றாக வகைப்படுத்தப்படுகின்றனர். இவர்கள் தனியனின் சகோதர, சகோதரி களிடமிருந்து வேறுபடுத்தப்படுகின்றனர்.

* ஈறாக்கிய அமைப்பில் ஒருபோகு உறவினர் ஒருவகையினராகவும், குறுக்கு உறவினர் மற்றொரு வகையினராகவும் கொள்ளப் படுகின்றனர். திராவிட உறவுமுறை அமைப்பு இவ்வகையைச் சார்ந்ததாக உள்ளது.

* குறோ கசின் உறவுமுறை அமைப்பில் தனியனின் ஒருபோகு உறவினர் தனியனின் சகோதர, சகோதரிகளின் ஒரு பிரிவினராகவும் தனியனின் குறுக்கு உறவினர் மேற்பிரிவிலிருந்தும் வேறு படுத்தப்படுகின்றனர். இவ்வமைப்பில் தந்தைவழி முக்கியமான ஒன்றாக உள்ளது. இவ்விரு பிரிவினர்களுக்கும் இடையே பயன்படுத்தப்படும் உறவு முறைச் சொற்களிடையே தலைமுறை/ வம்ச அடிப்படையிலான வேறுபாடு காணப்படுகின்றது (இராபர்ட் சத்திய சோசப், 1996:31).

* ஓமேகா கசின் அமைப்பு தலைமுறை வேறுபாட்டில் குறோ கசின் அமைப்பை ஒத்தது. இவ்வமைப்பில் தனியனின் ஒருபோகு உறவினர் சகோதர/சகோதரி களுடன் சேர்க்கப்படுகின்றனர். இம் முறையில் தாய் வம்சம் இன்றியமையாத ஒன்றாக உள்ளது.

மேற்காணும் ஆறு முறைகளையும் சிறப்பாக விளக்கும் இராபர்ட் சத்திய சோசப் பின்வருமாறு குறிப்பிடுவார்:

> "மேற்கூறிய ஆறுவிதமான அமைப்புகளிலும்.... படிப்படியான மாறுதல்களைக் காண முடிகின்றது. உறவாயன் கசின் முறை அமைப்பை எடுத்துக் கொண்டால் பெற்றோரின் உடன்பிறந்தவர்களின் பிள்ளைகள் சொந்த சகோதர சகோதரி களிடமிருந்து வேறுபடுத்தப்படாமல் எல்லோரையும் ஒருவித உறவாகவே கருதுவதைக் காணமுடிகின்றது. பின்னால் கூறப்பட்டுள்ள அமைப்புகளில் பெற்றோரின் உடன்பிறந்தவர்களின் பிள்ளைகள் பலதரப்பட்ட உறவினர் களாகப் பிரிக்கப்படுகின்றனர். குறோ மற்றும் ஓமேகா அமைப்புக்களில் தந்தையின் வம்சாவழியினர் தாயின வம்சா வழியினர் என்ற பாகுபாடு ஏற்பட்டிருப்பதையும் குறிப்பிட்ட சில உறவினர்களிடையே உள்ள தலைமுறை வேறுபாடு புறக்கணிப்படுவதையும் காண முடிகிறது".

இதுகுறித்த விரிவான விளக்கம் இராபர்ட் சத்திய சோசப்பின் 'சமகாலத் தமிழர்களின் உறவுமுறை அமைப்பும் உறவுமுறைச் சொற்களும்' (1996:26-40) என்னும் நூலில் இடம்பெற்றுள்ளது.

### 2.10.2. லூயி டியூமோன் வகைப்பாடு

லூயியின் வகைப்பாடு அடிப்படையில் ஒருபோகு உறவு, குறுக்கு உறவு (காண்க: 2.4) எனும் இருநிலைகளில் அமைந்துள்ளது. லூயி உறவு முறையை இணை உறவு (Collateral), மண உறவு (Affines) என இரண்டாகப் பிரிப்பார். மேலும் இவர் வகைப்பாட்டில் உறவினர் மண உறவினர் - மண உறவினரல்லாப் பிற உறவினர் என இருவகையாக வகைப்படுத்தப்படுவர். உறவுமுறை தனியனின் பாட்டன்

தலைமுறை, தந்தை தலைமுறை, தனியன் தலைமுறை, மகன்/மகள் தலைமுறை, பேரன்/பேத்தி என விரிவடைவதில்லை. மாறாக உறவினர்-மணஉறவினர் எனும் அமைப்பில் பெற்றோர்-தனியன்-பிள்ளைகள் எனும் மூன்று உள்தொடர் வட்டத்திற்குள் அடங்கி விடுகின்றது.

டியூமோன் வகைப்பாட்டைப் பின்வருமாறு பட்டியலிட்டுக் காட்டலாம்:

| வகை | உறவினர் | மணஉறவினர் |
|---|---|---|
| தலைமுறை+1 | தாய்-தந்தை | மாமன்-அத்தை |
| தலைமுறை 0 | தனியன் சகோதர-சகோதரிகள் ( அண்ணன்-அக்காள், தம்பி-தங்கை ) | மைத்துனன்-மைத்துனியர் ( மச்சான், மதனி, கொழுந்தன், கொழுந்தி ) |
| தலைமுறை-1 | மகன்-மகள் | மருமகன்-மருமகள் |

## 2.10.3. பிரெண்டாபெக் வகைப்பாடு

பிரெண்டாபெக்கின் வகைப்பாடு டியூமோனின் உறவினர்-மணஉறவினர்-மண உறவினரல்லாப் பிற உறவினர் எனும் வகைப்பாட்டிற்கு ஒத்த வகைப்பாடாகும். இவர் வகைப்பாடு பெற்றோர்-தனியன்-பிள்ளைகள் எனும் தலைமுறைகளுடன் நின்று விடுகின்றது. இவர் கருத்துப்படி நேரிடையான முதல்நிலை இரத்த தொடர்பான உறவினர் ஒருபோகு உறவினராவர். மணஉறவு கொண்ட அல்லது மணஉறவு கொள்ளத்தக்க உறவினர் குறுக்குநிலை உறவினராவர். தனியனைப் பொறுத்தமட்டில் தனியனின் குடும்ப உறவினர்கள் பிள்ளைகள் ஆகியோர் ஒருபோகு உறவினராவார்கள்.

## 2.10.4. டிரௌவுட்மன் வகைப்பாடு

டிரௌவுட்மன் தமிழ் உறவுமுறையை வகைப்படுத்தியுள்ளார். இவர் திராவிட உறவுமுறையை அடிப்படையில் ஒருபோகு உறவு-குறுக்கு உறவு என இரு வகைகளாகப் பிரிப்பார். இவர் வகைப்பாடு ஐந்து தலைமுறைக்குச்

செயல்படுகின்றது. மேலும் இவ் வகைப்பாடு மாமன்-அத்தை மகள் திருமணத்தை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றது. உறவினர் எவ்வகையில் எந்த அளவு உறவு உடையவர்களாக இருந்தாலும் அவர்களை உறவு வகையினங்களுள் அடக்கிவிடலாம். இதற்கு உறவினர்களை வகைப்படுத்தவல்லக் குவிமைய உறவு வகையைக் ( Focal kin type ) கருத்தில் கொள்ள வேண்டும் என்பது டிரௌவுட்மன் கருத்து. நாஞ்சில் நாட்டு வேளாளர் உறவைக் குவிமைய உறவாக டிரௌவுட்மன் காட்டுவார். ஐந்து தலைமுறைகளுக்குரிய சொற்கள் இவரால் விளக்கப் பெற்றுள்ளன.

| தலைமுறை | உறவுமுறைச் சொற்கள் | உறவு வகைகள் |
|---|---|---|
| 1.பாட்டன்-பாட்டி ( தலை+2 ) | பாட்டன் | தாய்/தந்தையின் தந்தை |
| | பாட்டி | தாய்/தந்தையின் தாய் |
| | | ( மேலும் 14 உறவுகள் ) |
| 2. பெற்றோர் ( தலை+1 ) | அப்பா | - |
| | அம்மா | - |
| | பெரியப்பா | 6 உறவுகள் |
| | பெரியம்மா | 6 உறவுகள் |
| | சின்னப்பா | 6 உறவுகள் |
| | சின்னம்மா | 6 உறவுகள் |
| | மாமன் | 5 உறவுகள் |
| | அத்தை | 5 உறவுகள் |
| 3. தனியன் ( தலை 0 ) | அண்ணன் | 14 உறவுகள் |
| | தம்பி | 14 உறவுகள் |
| | அக்கா | 14 உறவுகள் |
| | தங்கச்சி | 14 உறவுகள் |
| | அத்தான் | 8 உறவுகள் |
| | மச்சினன் | 3 உறவுகள் |
| | மயினி | 10 உறவுகள் |
| | கொழுந்தி | 10 உறவுகள் |
| | மாப்பிள்ளை | - |
| | பெஞ்சாதி | - |
| | மனைவி | |

| | | |
|---|---|---|
| 4.பிள்ளைகள் ( தலை-1 ) | மகன் | 4 உறவுகள் |
| | மகள் | 4 உறவுகள் |
| | மருமகள் | 2 உறவுகள் |
| | மருமகன் | 2 உறவுகள் |
| 5.பேரன்-பேத்தி ( தலை-2 ) | பேரன் | 8 உறவுகள் |
| | பேத்தி | 8 உறவுகள் |

( Trautman, pp. 34-35 )

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளில் இரத்தஉறவுகளைத் தவிரப் பிற உறவுகள் மூன்றாவது பத்தியில் தரப்பட்டுள்ளன. இவ்வகைப்பாட்டில் மேற்கண்ட உறவுகளைத் தவிரப் பல கிடைநிலை உறவுகளும் இடம்பெற்றுள்ளன.

## 2.11. உறவுமுறை ஆய்வு

உறவுமுறை ஆய்வு ஒரு நூற்றாண்டிற்கு உட்பட்ட ஆய்வாகும். உறவு முறையின் அமைப்பு மற்றும் உறவுமுறைச் சொற்கள் பற்றிய ஆய்வுகளில் மானிடவியலார், சமூகவியலார், மொழியியலார் ஆகியோர் ஈடுபட்டனர். மானிடவியலார் உறவுமுறைச் சொற்கள் குறிப்பிடும் உலகப்பொருள் பற்றி ஆராய்வதிலும் உறவுமுறைப் பெயர்களை வகைப்படுத்து வதிலும் அதிக ஆர்வம் கொண்டனர். இவர்கள் உறவுமுறைச் சொற்களைச் சமுதாயத்தின் ஒரு பகுதியாகக் கண்டனர். உறவுமுறை அமைப்பு பற்றிய ஆய்வு தனியொரு ஆய்வாக வளர்ச்சி பெற்றது சமூக மானிடவியல் துறையின் வளர்ச்சி யினால்தான் என்று கூறலாம். பண்பாட்டு மானிடவியலார் ஒப்புமை முறைகளுக்கே அதிக முன்னுரிமை தந்தனர். தெளிவான பண்பாட்டு முறையிலான உறவுமுறை ஆய்விற்கு ஒப்பாய்வு தேவையான ஒன்றாவதால், பண்பாட்டு மானிட வியலார் குடும்ப அமைப்பு முறையிலும் உறவுமுறையிலும் மிகுந்த விருப்பம் கொண்டிருந்தனர். உறவுமுறையில் பண்பாடு மற்றும் பண்பாட்டு மாற்றங்கள் குறித்த ஆய்வு பொதுவாக ஒப்பாய்வு முறையைச் சார்ந்ததாய் உள்ளது. பண்பாட்டு மாற்றங்கள் குறித்த அறிவியல் அடிப்படையிலான ஆய்வு கி.பி. 19-ஆம் நூற்றாண்டில்தான் தொடங்கியுள்ளது. உறவுமுறை ஆய்வு அறிவியல் வழியிலான ஆய்வாகப் பல்வேறு நிலைகளில் வளர்ச்சிபெற்று வந்துள்ளது. உறவுமுறை ஆய்வு சாதி மற்றும் இனத் தொடர்பான ஆய்விலிருந்து விடுபட்டுத் தனி ஓர் ஆய்வாகத் தற்பொழுது நிகழ்ந்து வருகின்றது.

மரபியல் அடிப்படையிலான ஆய்வு மூன்று நிலைகளில் மானிடவியலாருக்கு இன்றியமையாத ஆய்வாக அமைந்துள்ளது என்பார் ஹரால்டு காங்கிளின் ( Harold C. Conklin ) . அவர் கூறிய கருத்துக்களில் சில பின்வருவன:-

* உறவுமுறை அமைப்பு அகில உலக அளவிலானது. அது அகில உலக அளவில் விவாதிக்கப்படும் பொருள்களில் ஒன்று.

* உறவுமுறையும் அது தாங்கி நிற்கும் பண்பாட்டுக் கூறுகளும் குறிப்பிட்ட ஒரு மொழி/சமுதாயத்தைச் சார்ந்து இருந்தாலும் உறவுமுறைத் தொடர்புகள் அகில உலக அளவில் ஏற்றுக்கொள்ளப் பட்டவையாகும்.

* உறவுமுறையில் மரபுவழித் தொடர்பு பற்றிய ஆய்வு ஒரு நூற்றாண்டிற்கு முன்னமே தொடங்கப் பெற்றது.

மொழியியலார் உறவுமுறைச் சொல்லமைப்பு, சொல்லாக்கம், சொற்பொருண்மை என்பன பற்றிய ஆய்வில் அதிகம் ஈடுபட்டிருந்தனர். சமூகவியலார் உறவுமுறையை வயது, பால், உறவுமுறைப் பிரிவு, தலைமுறை, சமுதாயக் கூறுகள், சமுதாய வெளிப்பாடு என்ற அளவைகளில் ஆராய்ந்தனர். மானிடவியலார் உறவுமுறைச் சொற்கள் குறிப்பிடும் உலகப் பொருள் பற்றிய ஆய்வை மேற்கொள்ள மொழியியலார் பொதுவாகச் சொற்பொருள் என்ற நிலையில் மட்டும் ஆய்வை மேற்கொண்டனர்.

### 2.11.1. உறவுமுறை ஆய்வு வரலாறு

உறவுமுறை பற்றிய குறிப்பிடத்தக்க அளவிலான ஆய்வு 1861ஆம் ஆண்டு ஜே.ஜே. பச்சியோலன் மற்றும் ஏ.எஸ். மைனே என்பவர்களின் பணியால் தொடங்கியது எனலாம். மைனே இந்திய ஐரோப்பிய மொழிகளில் உறவு முறையின் இன்றியமையாமையை வெளிக்காட்ட முயன்றார். அறிவியல் வழியிலான உறவுமுறை ஆய்வு லூயி ஹென்றி மோர்கன் ( 1870 ) என்பவரின் 'Systems of Consanguinity and Affinity of the Human/Family' என்ற நூல் மூலம் தொடங்கியது.

மோர்கன் உறவுமுறைச் சொற்களை விளக்கமுறைச்சொல் (Descriptive word), வகைப்பாட்டு உறவுமுறைச் சொல் (Classificatory word) என இரு பெரும் பிரிவுகளாகப் பிரித்தார் (காண்க: 2.13.7). மானிடவியல் சார்ந்த ஆய்விலிருந்து புதிய நோக்கில் உறவுமுறைச் சொற்களை ஆராய்ந்த பெருமை மோர்கனைச் சாரும். உறவுமுறை அமைப்பு முழுமையான நிலைபேற்றினைக் கொண்டது என்பது இவர் கருத்தாகும். மோர்கன் உறவுமுறைச் சொற்கள் பற்றிய ஆய்வை முழுநிலையில் மேற்கொண்டார்.

உறவுமுறை ஆய்விற்கு அறிஞர்கள் பலரும் பலநிலைகளில் வலுவூட்டினர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் ரிவர்ஸ் (1914), லூயி ராட் கிளிப் புரவுன் (1924, 1925, 1935), முர்டாக் (1934), போர்டெஸ் (1937), எக்கம் ((1934), இவான்ஸ் ஸ்பிரிட் சார்டு (1951), லெனின் டிராஸ் (1954), ஸ்லெய்டர் (1954) என்பவராவர்.

மானிடவியல் அறிஞர்களான எட்வர்ட் டெய்லர் (1964), போயஸ் (1965), குரோபர் (1967), மலினோஸ்கி (1966) என்போர் உறவுமுறை ஆய்வில் பல அரிய போற்றத்தக்க பணிகளை ஆற்றியுள்ளனர். மலினோஸ்கி களஆய்வு மூலம் உறவுமுறை ஆய்வில் பல சிறந்த பணிகளை ஆற்றியுள்ளார். கூடனெள (1956) சொற்றொகுதி பல சொல் விரிவுகளைப் (Paradigms) பெற்றுள்ளது என்றும் இவ்விரிவுகள் மூலம் உறவுமுறையில் சிறந்த ஆய்வை மேற்கொள்ள இயலும் என்றும் உறவுமுறைச் சொற்களைப் பகுப்பாய்வு மூலம் விளக்க முடியும் என்றும் குறிப்பிடுவார். மொழியியலில் பொருண்மையியலில் எவ்வாறு பொருட் கூற்றுப் பகுப்பாய்வு பின்பற்றப்பட்டுள்ளதோ அவ்வாறே உறவுமுறை அமைப்பிலும் பகுப்பாய்வு முறை பின்பற்றப் படுகின்றது. உறவுமுறைப் பகுப்பாய்வில் உறவுமுறைச் சொல்லின் பண்புக்கூறுகள் வரிசைப்படுத்தப் படுகின்றன. இப் பகுப்பாய்வின் மூலம் ஆண்-பெண் வேறுபாடு, தலைமுறை, இரத்த-திருமண உறவு எனும் பல கூறுகள் வெளிக்காட்டப் படுகின்றன. மலினோஸ்கியின் கருத்துப்படி உறவு முறை பண்பாட்டின் ஒரு பகுதியாகும். மொழியின் ஒரு பகுதியாக

விளங்கும் உறவுமுறை மொழியின் கொள்கைகளுக்கும் விதிமுறைகளுக்கும் உட்பட்டது. களஆய்வில் நீண்ட நாட்கள் களத்தில் தங்கி அங்குள்ளவர்களிடம் அவர்கள் மொழியில் பேசி ஆய்வுக்குரிய தரவுகளைத் திரட்ட வேண்டும் என்று மலினோஸ்கி குறிப்பிடுவார். ஜார்ஜ் முர்டாக் (1966) உறவுமுறைக்கும் குடும்ப அமைப்புக்கும் இடைப்பட்ட உறவை ஆராய்ந்தார். இவர் நூற்றுக்கணக்கான சமுதாயங்களின் உறவுமுறையை ஒப்பாய்வு மூலம் ஆராய்ந்துள்ளார். முர்டாக்கின் ஆய்வு விளக்கமுறை ஆய்விற்குப் பெரிதும் பயனுடையதாய் அமைந்துள்ளது.

உறவுமுறை ஆய்வில் குறிப்பிடத்தக்கவர்களில் மற்றொருவர் குரோபர் ஆவார். இவர் 1909இல் வெளியிட்ட 'Classificatory Systems of Relationship' எனும் கட்டுரையில் உறவுமுறை வகைப்பாட்டிற்குப் பின்வரும் எட்டு வகை அணுகுமுறைகளைத் தந்துள்ளார்:-

1. தலைமுறை
2. உயர்நிலை-கிடைநிலை
3. இரத்தஉறவு-மணஉறவு
4. வயது
5. உறவினரின் பால்வேறுபாடு
6. தனியனின்பால்
7. தொடர்புறும் உறவினரின் பால்
8. உறவினர் நிலை

என்பன எட்டு அணுகுமுறைகளாகும்.

லௌன்ஸ்பரி உறவுமுறைச் சொற்களை மொழியியல் மற்றும் உளவியல் அடிப்படையில் பல நிலைகளில் ஆராய்ந்தார். அதற்கெனப் பல விதிமுறைகளை உருவாக்கினார். இவர், ஒரு சொல்லால் குறிக்கப்படும் எல்லா உறவுகளையும் கட்டுப்படுத்தும் முறையில் ஓர் உறவுமுறையிலிருந்து மற்றொரு உறவுமுறையை வேறுபடுத்தி அறியப் பல பண்புகளைக் கண்டறிந்தார்.

## 2.11.2. இந்தியாவில் உறவுமுறை ஆய்வு

இந்தியாவில் உறவுமுறை மற்றும் உறவுமுறைச் சொற்கள் பற்றிய ஆய்வு மிகக் குறுகிய வரலாற்றைக் கொண்டது. இவ்வாய்வு ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால்தான் தொடங்கப் பெற்றுள்ளது. உறவுமுறை தொடர்பான ஆய்வு இந்தியாவில் வளர்ச்சி அடையாத ஒரு பகுதியாகத்தான் இன்றளவும் உள்ளது.

இந்திய உறவுமுறை ஆய்வில் ஐராவதி கார்வே சில குறிப்பிடத்தக்க பணிகளைச் செய்துள்ளார். கார்வே பல்வேறு மொழிகளிலிருந்தும் பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்தும் உறவுமுறைச் செய்திகளைத் தொகுத்து அவற்றை இனமரபு அடிப்படையில் விளக்கியுள்ளார். இவர் இந்தோ-ஆரிய மற்றும் திராவிட உறவுமுறை அமைப்புகளுக்கு இடையே காணப்படும் வேறுபாடுகளையும் விரிவாக ஆராய்ந்துள்ளார்.

*i)* ஐராவதி கார்வேயின் *(1953)* ஆய்வான *'Kinship Organization of India'* எனும் நூல் குறிப்பிட்டுச் சொல்லத் தக்க ஒரு நூலாகும். இந்நூலில் இந்து உறவுமுறைச் சொற்கள் வரலாறு மற்றும் ஒப்பாய்வு நோக்கில் தெளிவாக விளக்கப் பட்டுள்ளன. கார்வே, "...... தென்னக உறவுமுறை அமைப்பின் நியமம் என்னவென்றால் ஒரு தனியன் உறவுக்குழுவின் முழுமைக்கும் மையமாகக் கொள்ளப்பட்டு உறவினர்கள் மூத்தவர், இளையவர் என இரண்டு முதல் நிலைக் குழுக்களாக வகைப்படுத்தப்படுவதே அந்த நியமமாகும்" என்று குறிப்பிடுவார் *(1968:246)*. தமிழ் உறவுமுறை அமைப்பில் தனியனின் மூத்த உறவினர்களாக இருப்பவர்கள் ஒரு வகையினராகவும் இளையவர்களாக இருப்பவர் மற்றொரு வகையினராகவும் இருப்பர்; தனியனுக்கு முன் உள்ளவரைத் தன்முன் என்றும் பின் உள்ளவர்களைத் தம் பின் என்றும் குறிப்பிடுவர் என்று தமது நூலில் விளக்கிச் செல்வார் (காண்க: 5.1.1; 5.2). தனியன் உறவினர்களிடம் நடந்துகொள்ளும் மரியாதையின் மூலம்தான் வேறுபாடுகளை அறிய முடியும் என்பது கார்வேயின் கருத்தாகும். இந்திய உறவுமுறை அமைப்பை மொழியியல் மற்றும் பண்பாடு அடிப்படையில் ஆய்ந்த பெருமையை இந்நூலின்வழி கார்வே பெற்றுள்ளார். உறவுமுறைச் சொற்களை வகைப்படுத்தும் பணியையும் இவர் மேற்கொண்டார்.

ii) அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தால் வெளியிடப் பெற்ற 'Dravidian Linguistics Ethnology and Folk Tales-Collected Papers' (Emeneau) எனும் நூல் பாராட்டத்தக்க ஒரு நூலாகும். இந்நூலில் திராவிட உறவு முறை அமைப்பு பற்றிய கட்டுரை ஒன்றும் இடம்பெறுகிறது. இக்கட்டுரையில் சில தமிழ் உறவுமுறைச் சொற்களின் செயல்பாடும் சொல்லாக்கமும் பல்வேறு நிலைகளில் விளக்கப் பெற்றுள்ளன.

iii) மிக்சிக்கன் பல்கலைக்கழகம் மற்றும் தெற்கு மற்றும் தென் ஆசியக் கல்வி நிறுவனத்தின்வழி வெளியிடப் பெற்றுள்ள 'Kinship and History in South Asia' (1974) எனும் நூலில் தமிழ் உறவுமுறை அமைப்பு பற்றிய கட்டுரைகள் இரண்டு இடம்பெற்றுள்ளன. அவற்றுள் ஜார்ஜ் ஹார்ட் அவர்களின் 'Some Aspects of kinship in Ancient Tamil Literature' எனும் கட்டுரை குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இக்கட்டுரையில் ஹார்ட் சங்க இலக்கியச் சமுதாயத்தில் தலைவன்-தலைவி மற்றும் அவர்கள் குடும்பத்தினர் இடையே காணப்படும் உறவைச் சங்க இலக்கியப் பாடல்களின்வழி விரிவாக விளக்கியுள்ளார் (காண்க: 2.12).

iv) திராவிட உறவுமுறைச் சொற்கள் பற்றிய விரிவான ஆய்வு தாமஸ் டிரெவுட்மன் அவர்களால் வெளியிடப்பெற்ற 'Dravidian Kinship' எனும் நூலில் இடம்பெற்றுள்ளது. திராவிட மொழிகளில் காணப்படும் ஐந்து தலைமுறைகளுக்கான சொற்கள் பெரும்பாலும் வட்டார வழக்குச் சொற்கள் இந்நூலில் ஆராயப்பட்டுள்ளன. கன்னியாகுமரி மாவட்டத்து நாஞ்சில் வேளாளர் இனத்தில் பயன்படும் சொற்கள் அடிப்படைச் சொற்களாகத் தெரிவு செய்யப் பெற்றுள்ளன (காண்க: 2.10.4).

v) காத்லின் (1979) 'Dravidian Kinship and Modes of Production' என்ற கட்டுரையில் திராவிட உறவுமுறையையும் அதன் ஆக்க முறைகளையும் விளக்கியுள்ளார். தஞ்சாவூர் பிராமணர்களின் உறவுமுறைச் சொற்கள் இக்கட்டுரையில் சுருக்கமாக விளக்கப் பெற்றுள்ளன. காத்லின் கருத்துப்படி பிராமணர்கள் அல்லாமல் பிறபட்ட இனத்து மக்களும் உறவுமுறையைப் பின்பற்றுகின்றனர் (1979:268).

vi) தமிழ் உறவுமுறைச் சொற்கள் தொடர்பான ஆய்வுகளில் மற்றொன்று தாயம்மாள் அறவாணன் அவர்களின் 'உறவுமுறைகள் - ஓர் ஆய்வு' (1987) எனும் நூலாகும். இந்நூலில் பொதுநிலையில் உறவுமுறை உருவான முறையும், திருமணத்தின் தேவையும் சிறப்பாகத் தமிழர்களின் உறவுமுறைப் பெயர்களின் தனித்தன்மையும் விரிவாக ஆராயப் பெற்றுள்ளன. தாயம்மாள் அறவாணன் குறிப்பிட்டுள்ள சில கருத்துக்கள் பின்வருவன:

* திராவிட மொழி பேசுபவர் திராவிட உறவுமுறையைச் சார்ந்தவராகக் காணப்படுவர்.
* திராவிடத் திருமண உறவு இரத்த உறவை அடிப்படையாகக் கொண்டது.
* ஆரியத் திருமண உறவு தாய்/தந்தை வழியில் அமைவதில்லை.
* பெற்றோர் வழியில் பெண்கொள்ளும் வழக்கம் ஆரிய மரபில் இல்லை.
* தமிழில் தாய்வழிச் சமூக அமைப்பே தந்தைவழிச் சமூக அமைப்பைவிடத் தொன்மையானது.
* தமிழில் தாயைக் குறிக்கப் பயன்படும் சொற்களே அதிகம்.
* தாயை அடுத்து தந்தையைக் குறிக்க வழங்கப் பெறும் சொற்கள் மிகுதியாக உள்ளன.
* வடமொழி உறவுமுறைச் சொற்கள் தமிழில் அவ்வப்போது வந்து சேர்ந்துள்ளன.

திராவிட உறவுமுறை சார்ந்துள்ள ஈறாக்கியஸ் அமைப்பின் முக்கிய சிறப்புக்கூறு ஒருபோகு உறவு மற்றும் குறுக்கு உறவு எனும் வேறுபாடு ஆகும் (காண்க: 2.4). இவ்வமைப்பின்படி ஒருவர் தந்தையின் சகோதரர் மற்றும் தாயின் சகோதரி பிள்ளைகளை மணம் செய்துகொள்ள

இயலாது. மாறாகத் தந்தையின் சகோதரி/தாயின் சகோதரர் பிள்ளைகளைத்தான் மணம் செய்துகொள்ள முடியும். உறவினர்களை இரு பிரிவுகளாகப் பிரித்து ஒரு பிரிவினருடன் திருமணத் தொடர்பு கொள்வதும் மற்றொரு பிரிவினருடன் திருமணத் தொடர்பைத் தடை செய்வதும் முக்கியமான திராவிடப் பண்பாகும். திராவிட உறவுமுறையின் முக்கிய பண்புகள் 1. பால், 2. தலைமுறை, 3. வயது, 4. எதிர்உறவு என்பனவாகும். அவற்றுள் பாலும் தலைமுறையும் பிற உறவுமுறை அமைப்பிலும் இடம்பெற்றுள்ளன.

திராவிட உறவுமுறைக்கும் பிறமொழிகளின் உறவுமுறைக்கும் இடையேயுள்ள பண்பு எதிர் உறவாகும். இப்பண்பே திராவிட உறவுமுறையையும் பிற உறவு முறையையும் வேறுபடுத்தும் அளவுகோலாக விளங்குகின்றது. திராவிட உறவுமுறை அமைப்பில் ஒருசொல் பல உறவுகளைப் பெற்று நிற்கும் தன்மை சிறப்பானதாகும்.

### 2.12. சங்கச் சமுதாயமும் உறவுமுறையும்

சங்கத்தமிழ் அகப்பாடல்களில் குறிப்பாகத் தலைவன் தலைவிக்கு இடையே நிகழும் காதல், குடும்ப வாழ்வு, பொருள் ஈட்டல் தொடர்பான செய்திகள் இடம்பெறும் பாடல்களில் உறவுமுறை பற்றிய குறிப்புகள் இடம்பெறுகின்றன. தலைவி, தாய், செவிலி, தோழி, பரத்தை ஆகியோரிடத்து நிகழும் கூற்றில் உறவுமுறை பற்றிய பல செய்திகள் தெரிய வருகின்றன. சங்க நூற்களில் சிறுகுடும்ப அமைப்பே நிலவுகின்றது. சங்கப்பாடல்களில் தலைவியின் தாய், தந்தை, அண்ணன், கணவன், குழந்தை பற்றிய செய்திகளே அதிகம் உள்ளன. சங்கத் தமிழ் உறவுமுறை அமைப்பு மூலம் சங்ககாலச் சமுதாய ஆண்-பெண் உறவுநிலைகளை அறிந்துகொள்ள இயலும். சங்க இலக்கிய உறவுமுறையை எடுத்துக்கொண்டால் தனியனின் ( Ego ) மேல் ஒரு தலைமுறைக்கும், கீழ் ஒரு தலைமுறைக்கும் உரிய சொற்கள் மட்டும் வழக்கிலுள்ளன.

சங்கத்தமிழ்ப் பாடல்களில் மிஞ்சி நிற்கும் சில சமுதாய உண்மைகளை ஜார்ஜ் ஹார்ட் ( 1974 ) பல எடுத்துக் காட்டுகள் மூலம் விளக்கியுள்ளார் ( பக்.29-57 ). ஜார்ஜ் அவர்களின் கட்டுரையிலிருந்து பின்வரும் செய்திகளை அறிந்துகொள்ள இயலுகின்றது.

* திருமணத்திற்கு முன் தலைவியின் ஆற்றல் அவர் தந்தையையும் சகோதரர்களையும் பாதிக்கும் அல்லது கட்டுப்படுத்துமெனின் திருமணத்தின்பின் அது அவள் கணவனையும் குழந்தைகளையும் கட்டுப் படுத்தி நிற்கின்றது. தலைவியின் ஆற்றல் கணவன் மேல் இரண்டாவது நிலையிலும் அமைகின்றது.

* ஒரு பெண் தன் தந்தை, கணவன், மகன் ஆகிய மூவரையும் குடும்பத்திலுள்ள பிற முக்கிய உறுப்பினர்களையும் போர்க்களம் அனுப்பி வைக்கின்றாள்.

* ஒரு தாய் தன் மகன் போர்க்களத்தில் வீர மரணம் எய்திய செய்தி அறிந்து பெரிதும் மகிழ்ச்சியுறுகின்றாள்.

* தலைவனின் உறவினர் கூற்றுக்களாக அமைந்த பாடல்கள் சங்க இலக்கியத்தில் இல்லை. ஒன்றிரண்டு இடங்களைத் தவிரப் பிற இடங்களில் அவர்கள் பற்றிய குறிப்புகள் இல்லை.

* ஓர் ஆணும் பெண்ணும் இணைந்து உருவாகவிருக்கும் புதுவாழ்வில் அவர்கள் ஓர் அங்கமாகக் கருதப்படுவதில்லை.

* சங்கத்தமிழ் நூற்களில் தலைவியின் அண்ணன் குடும்பத்தில் ஓர் உறுப்பினராகச் சேர்க்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. தலைவியின் தந்தையும் அண்ணனும் பேசுவதாக எந்தக் குறிப்பும் இல்லை. எனினும் தலைவியின் வாழ்வில் சகோதரனின் பங்கு குறிப்பிடத்தக்கதாய் உள்ளது.

* தலைவியைத் தலைவனுக்கு அளிக்க மறுப்பது அண்ணனின் குறிப்பிடத்தக்க ஒரு செயலாகக் காணப்படுகின்றது. பின்வரும் பாடல்கள் இதற்குச் சான்றுகளாகும்:

கடுமான் வேந்தர் காலை வந்தெம்
நெடுநிலை வாயிற் கொட்குவர்மாதோ
பொருதா தமருவரல்லர் போருழந்
தடுமுரண் முன்பிற் றன்னைய ரேந்திய
வடிவேலெஃகிற் சிவந்த வுண்கண்
தொடிபிறழ் முன்கை யிளையோள்
அணிநல்லாகத் தரும்பிய அணங்கே ( புறம். 350. 5-11 )
...... ....... ....... ......
கருங் கோட்டுப் புன்னைப் பூம்பொழில் புலம்ப
இன்னும் வாரார் வரூஉம்
பன்மீன் வேட்டத்தென்னையர் திமிலே ( குறு.123 )

* அண்ணனைப் போல் தந்தையும் தலைவியின் காதலுக்குத் தடைவிதிப்பது போன்ற சில பாடல்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன ( காண்க: அகம்.158 ) .

* ஒரு பெண் தன் தந்தை, கணவன், மகன் ஆகிய மூவரையும் போர்க்களம் அனுப்புவதாகவும் போரில் மார்பில் வில்லேந்தி இறந்த மகனைக் கண்டு தாய் உவகை கொள்வதாகவும் சங்க பாடல்களில் செய்திகள் உள்ளன ( காண்க: புறம்.277, 279 ) .

* தலைவன் தன் குடும்பத்தோடுறவுடைய பெண்ணையோ உறவில்லாத பெண்ணையோ திருமணம் செய்து கொள்வது போன்ற பாடல்கள் சங்க நூற்களில் காணப்படுகின்றன.

யாயும்ஞாயும் யாராகியரோ
எந்தையும் நுந்தையு மெம்முறைக்கேளிர்
யானு நீயு மெவ்வழி யறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந்தனவே ( குறு. 40 )
( உறவல்லாத் திருமணம் )

இவனிவளைம்பால் பற்றவு மிவளிவன்
புன்றலையோரி வாங்குநள் பரியவும்

காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிரா
தேதில் சிறுசெரு வுறுப மன்னோ
நல்லை மன்றம்ம பாலே மெல்லியல்
துணைமலர்ப் பிணையலன் னவிவர்
மணமகிழ் இயற்கை காட்டியோயே ( குறு.229 )

ஜார்ஜ் ஹார்ட்டின் கட்டுரையின்வழிச் சங்க இலக்கியச் சமுதாயத்தில் நிலவி வந்துள்ள சமுதாய மற்றும் உறவுமுறை அமைப்பை விளங்கிக்கொள்ள இயலும்.

## 2.13. உறவுமுறைச் சொற்கள்

மனித உறவுகளின் அடிப்படையில் எழும் உறவுமுறை அமைப்பு, பிறப்பு மற்றும் திருமணம் ஆகியவற்றின் அடிப்படையில் பல்வேறுபட்ட உறவுமுறைச் சொற்களைப் பெற்று நிற்கின்றது. இவ்வுறவுமுறைச் சொற்கள் உறவுமுறை அமைப்பின் ஒரு பகுதியாக மட்டும் செயல்படாமல் சமுதாயக் குழுக்களின் ஆக்கத்திலும் அவற்றை முறைப்படுத்துவதிலும் தலையாய பங்காற்றுகின்றன. சமுதாய, பண்பாட்டு, வட்டார, இனக்கூறுகளை வெளிக்காட்டுவதில் உறவுமுறைச் சொற்கள் இன்றியமையாதனவாகத் திகழ்வதோடு மொழிக்கு மொழி சமுதாயத்திற்குச் சமுதாயம் மாறுபட்டும் நிற்கின்றன. சமுதாயக் கூறுகளின் தாக்கத்தால் உறவுமுறையில் ஏற்படும் மாற்றங்கள் சொற்களின்வழி உறவுமுறை மாற்றங்களாகப் பதிவு செய்யப்படுகின்றன. மானிடவியல் அறிஞர் குரோபர் உறவுமுறைச் சொற்கள் எட்டு நிலைகளில் வேறுபாடு கொண்டு செயல்படுகின்றன என்று குறிப்பிடுவார் ( காண்க: 2.11.1 ). சமூகவியலார் உறவுமுறைச் சொற்களைப் பல்வேறு சமுதாய அளவைகளில் குறிப்பாக வயது, பால், உறவுநிலை, சமுதாயப் பிரிவு, திருமண உறவு என்பனவற்றின் கீழ் ஆராய்வர். மானிடவியல் மற்றும் சமூகவியல் ஆகியனவற்றின் அடிப்படையில் மட்டும் உறவுமுறைச் சொற்களைத் துல்லியமாகவும் போதுமானதாகவும் விளக்க இயலாது. உறவுமுறைச் சொற்களின் ஆக்கம், செயல்பாடு, சொற்பொருள் எனும் அடிப்படையில் ஆராயும் மொழியியல் ஆய்வும் தேவையான ஒன்றாகவுள்ளது. ஒவ்வொரு மொழியும் அல்லது கிளைமொழியும் கொண்டிருக்கும் உறவுமுறை அமைப்பும் உறவுமுறைச் சொற்களும் மொழியியல் அடிப்படையில் விரிவாக ஆராயப்பட வேண்டும்.

## 2.13.1. உறவுமுறைச் சொற்களின் தனித்தன்மை

உறவு மற்றும் உறவுமுறை அமைப்பு, பொதுவாகக் காணப்பட உறவுமுறைச் சொற்களின் பயன்பாடு மொழிக்கு மொழி மாறுபடுகின்றது என்று முன்னர்க் கண்டோம் ( காண்க: 2.0 ) . பின்வரும் எடுத்துக்காட்டுகளின்வழி மேலும் அதை நன்கு உணர்ந்துகொள்ள முடியும்.

* சகோதரன், சகோதரி என்ற சொற்களுக்கு இணையான சொற்கள் ஹங்கேரி மொழியில் இல்லை. ஆனால் வயது மற்றும் பால் அடிப்படையில் நான்கு சொற்கள் இம்மொழியில் காணக்கிடைக்கின்றன.

* மலாய் மொழியில் சகோதர, சகோதரியைக் குறிக்க ஒருசொல்தான் வழக்கிலுள்ளது. இச்சொல்லில், பால் தனியனுடன் தொடர்பு பெற்றுக் காணப்படுகின்றது.




* சுவீடிஸ் மொழியில் தாத்தா, பாட்டியைக் குறிக்கத் தனிச்சொற்கள் இல்லை. கீழ்க்காணும் உறவுமுறைச் சொற்கள் இம்மொழியில் வழக்கிலுள்ளன:

| | |
|---|---|
| Farfar | - தந்தையின் தந்தை |
| Farmor | - தந்தையின் தாய் |
| Morfar | - தாயின் தந்தை |
| Mormor | - தாயின் தாய் |

( Far = தந்தை Mor = தாய் )

* இலத்தீன் மொழியில் 'uncle', 'aunt' எனும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான உறவுமுறைச் சொற்கள் இல்லை. ஆனால் தமிழ் மொழியில் உள்ளதுபோல் அப்பாவின் தம்பி, அம்மாவின் தம்பி, அப்பாவின் தங்கை, அம்மாவின் தங்கை எனும் உறவுமுறைகளுக்குத் தனித்தனிச் சொற்கள் வழக்கிலுள்ளன.

* ஆங்கில மொழியில் உறவுமுறைச் சொற்களின் பாலைக் குறிக்கத் தனிச்சொற்களோ விகுதிகளோ இல்லை. ஆனால் ஸ்பானிஸ் போன்ற மொழிகளில் மேற்கூறிய வேறுபாட்டைக் காட்டத் தனிச்சொற்கள் வழக்கிலுள்ளன. கீழ்வரும் எடுத்துக்காட்டுகளில் இவ்வேறுபாட்டைக் காணலாம்:

| | | | |
|---|---|---|---|
| *tio* | *'uncle'* | *tia* | *'aunt'* |
| *hijo* | *'son'* | *hija* | *'daughter'* |
| *abucho* | *'grand father'* | *atulea* | *'grand mother'* |
| *bermano* | *'brother'* | *hermana* | *'sister'* |

இங்கு /o/ ஆண்பாலையும் /a/ பெண்பாலையும் குறித்து நிற்கின்றன. தமிழில் தாய், தந்தை ஆகிய பெயர்களில் இவ்வேறுபாடு இடம்பெறாவிட்டாலும், பின்வரும் சில சொற்களில் இத்தகைய வேறுபாட்டைக் காண இயலும்.

| | | | |
|---|---|---|---|
| அண்ணன் | - | அக்காள் | ( ன்-ள் ) |
| மகன் | - | மகள் | ( ” ) |
| மருமகன் | - | மருமகள் | ( ” ) |
| மாமன் | - | மாமி | ( ன்-இ ) |
| அண்ணன் | - | அண்ணி | ( ” ) |

* அமெரிக்க உறவுமுறைச் சொற்கள் பால் வேறுபாட்டைத் தவிர மரபு வேறுபாட்டையும் கொண்டிருக்கும். மரபுகளின் தன்மை grand/great எனும் பெயரடைகளின் மூலம் குறிக்கப்பெறும்.




* ஆங்கிலத்தில் spouce, child, parent, sibiling என்பன பால் உறவு அற்றன. மேலும் ஆங்கில brother-in-law எனும் சொல்லிற்குத் தமிழிலும், இந்தியிலும் பல உறவுமுறைச் சொற்களும், உறவுமுறைகளும் உள்ளன.

* ஆங்கிலத்தில் aunt, uncle, cousin எனும் சொற்களின் உறவு சிறப்பாக நோக்கத் தக்கது. தாய் தந்தையரின் சகோதரிகளும் தந்தை/தாயின் சகோதரனின் மனைவியும் aunt எனும் சொல்லால் குறிக்கப் பெறுவர். இதைப் போன்று uncle எனும் சொல்லும் பல உறவுகளைக் குறிக்கின்றது. Cousin எனும் சொல் பால் வயது வேறுபாடின்றி ஆங்கில மொழியில் பயன்படுத்தப்பெறுகிறது.

* தோடா பழங்குடி இனத்தில் பலகணவன் முறை வழக்கத்திலுள்ளது. இச்சமுதாயத்தில் உயிரியல் அடிப்படையிலான தந்தை முக்கிய இடத்தைப் பெறுவதில்லை. மாறாகத் தந்தை எனும் உறவு சில சடங்குகளின் அடிப்படையிலே ஏற்படுகின்றது.

* வங்காள மொழியில் அண்ணனைக் குறிக்க வயது அடிப்படையில் பல்வேறு சொற்கள் வழங்கப்படுகின்றன.

*bardaa* - (மூத்த) அண்ணன்
*mejdaa* - மூத்த அண்ணன்களில் இளையவன்
*sejdaa* - இளைய அண்ணன்
*chotaa* - தனியனின் நேர் அண்ணன்

தமிழில் இதற்கு இணையாகப் பேச்சு வழக்கில் மூத்த அண்ணன், இளைய அண்ணன், நடு அண்ணன், கடைசி அண்ணன் எனும் சொற்கள் காணக் கிடைக்கின்றன (சிங். ப.32).

* தென்திருவிதாங்கூர் கிருத்தவ இனத்தாரால் பயன்படுத்தப்படும் பெங்ஙளா, ஆங்ஙளா எனும் உறவுமுறைச் சொற்கள் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கன. பெங்ஙளா எனும் சொல் ஒரு குடும்பத்திலுள்ள ஆண்கள் தங்கள் சகோதரிகளைக் குறிக்கவும் இரண்டாவது சொல் பெண்கள் தங்கள் சகோதரர்களைக் குறிக்கவும் பயன்படுத்தப்படுகின்றன.

பெங்ஙளா - சகோதரிகள்
ஆங்ஙளா - சகோதரர்கள்

மேலும் 'சேட்டன்' எனும் மலையாளச் சொல் மலையாள மொழியில் அண்ணனையும் கணவனையும் குறிக்கப் பயன்படுத்தப்படுகின்றது.

* தமிழில் பாட்டன், பாட்டி, தாத்தா, ஆச்சி எனும் சொற்கள் பொதுவாகப் பயன் படுத்தப்படினும், சில வட்டாரங்களில் தந்தையின் தந்தை, தந்தையின் தாய், தாயின் தந்தை, தாயின் தாய் ஆகியோரைக் குறிக்கத் தனித்தனி உறவு முறைச் சொற்கள் வழங்கப்பட்டு வருகின்றன.

அப்பச்சன் → தந்தையின் தந்தை

அப்பாத்தா
அப்பாயி } → தந்தையின் தாய்

அம்மச்சன்
தாய் பாட்டன் } → தாயின் தந்தை

அம்மாச்சி
அம்மாய்
அம்மாத்தா } → தாயின் தாய்

* தமிழகத்திலுள்ள செட்டிநாட்டு வட்டாரங்களில் வழங்கப்பெற்று வரும் நாட்டுக்கோட்டைச் செட்டியார் கிளைமொழியில் மற்ற கிளைமொழிகளில் காணப்படாத பல உறவுமுறைச் சொற்கள் வழக்கிலுள்ளன. இதற்கு எடுத்துக்காட்டாகப் பின்வரும் உறவுமுறைச் சொற்களைக் குறிப்பிடலாம்:

ஆச்சி - தாய்
அய்யா - அம்மா
அண்ணமண்டி - அண்ணனின் மனைவி ( மதனி )
தம்பிமண்டி - தம்பியின் மனைவி ( கொழுந்தி )

மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் உறவுமுறைச் சொற்கள் சமுதாயத்தோடும் வட்டாரத்தோடும் இணைந்துள்ள தன்மையைக் குறிப்பிடும்.

## 2.13.2. உறவுமுறைச் சொற்களின் வகைப்பாடு

தமிழில் உறவுமுறைச் சொற்கள் இரண்டு வகைகளில் காணக் கிடைக்கின்றன. உறவுமுறைச் சொற்கள் பொதுச் சொற்கள் என்பன அவ்விரண்டு வகைச் சொற்களாகும். இவ்வகைப்பாடு சொற்களின் கருத்துப் பொருளை அடிப்படையாகக் கொண்டது.

வகை-1 : அடிப்படையில் உறவுமுறைப் பொருளைக் குறித்துப் பின் உறவல்லாப் பிற பொதுப் பொருள்களுக்கு விரிவாகும் உறவுமுறைச் சொற்கள்.

வகை-2 : உறவல்லாப் பிற பொருள்களைக் குறித்துப் பின் உறவுமுறைப் பொருளுக்கு விரிவாகும் பொதுச் சொற்கள்.

மேற்கண்ட வகைப்பாட்டைப் பின்வருமாறு காட்டலாம்:




உறவுமுறைச் சொற்கள் பொதுவாகக் குறிபொருளாகவும் ( *reference* ) விளிப்பெயராகவும் ( *address* ) பயன்படுத்தப்படுவதுண்டு. இவ்வகைப்பாட்டின்படி வகை-1 சொற்கள் இரண்டு பொருள்களிலும் பயன்படுத்தப்பட, வகை-2 சொற்கள் குறிபொருளாக மட்டும் பயன்படுத்தப்படுகின்றன. இது இவ்விருவகை சொற்களுக்குமுரிய மற்றொரு வேறுபாடாகும். பின்வருவன இருவகைச் சொற்களுக்கும் சில எடுத்துக்காட்டுகள் ஆகும்:

வகை-1: அப்பா, அம்மா, தாய், தந்தை, அன்னை, அண்ணன், தம்பி, மகன், மகள் ....

வகை-2: ஈன்றாள், பெற்றாள், துணைவி, துணைவன், இல்லாள்.

## 2.13.3. உறவுமுறைச் சொற்பொருண்மைச் செயல்பாடு

உறவுமுறைச் சொற்கள் உறவினைக் குறிப்பிடும்பொழுது உருவ/உலகப் பொருளைக் கருத்துப் பொருளாகக் கொண்டுள்ளன. உறவுமுறைச் சொற்களின் அடிப்படை பொருள் கூற்றைக் ( *Criterial feature* ) கண்டறிய பொது நிலையில் எந்த வரன்முறையும் இல்லை. முன்னர்க் குறிப்பிட்டதுபோல் தமிழ் உறவுமுறைச் சொற்களில் பலபொருள் தன்மை, ஒருபொருள் தன்மை என்பன அதிகம் காணப்படுகின்றன. அதாவது ஓர் உறவுமுறைச் சொல் பல உறவுகளையும் பல உறவுமுறைச் சொற்கள் ஓர் உறவினையும் குறித்துக் கையாளப்படுகின்றன ( காண்க: பின்னிணைப்பு ). இச்சொற் பொருண்மைப் பண்பைப் பின்வருமாறு காட்டலாம்:




( மாமா, அத்தை, அக்காள் ஐ, அண்ணன்.... ) ( மனைவி, இல்லாள், இற்கிழத்தி, துணைவி.... )

பலபொருள்களில் ஒருபொருள் அடிப்படைப் பொருளாகவும், பிற பொருள்கள் பல்வேறு காரணங்களால் விரிவு பெற்றனவையாகவும் இருக்கும். தமிழ் உறவுமுறைச் சொற்கள் சிலவற்றின் பொருள் விரிவினைக் காண்போம்:

அம்மா என்ற சொல்லின் பொருள்விரிவு வியந்து நோக்கத்தக்கது.

I

அம்மா 1. பெற்றோரில் பெண், தாய்.

2. அம்மாவின் சகோதரி ( பெரியம்மா, சின்னம்மா ).

3. அப்பாவின் சகோதரர் மனைவி ( பெரியம்மா, சின்னம்மா ).

II

4. தாய்போல் அன்பு காட்டுதற்குரிய, அன்பிற்குரிய பெண்.

5. மதிப்பிற்குரிய/நற்குணங்களைக் கொண்ட பெண்

6. அறிமுகம் இல்லாத பெண்/சிறுமியை அழைக்கும் சொல்

7. பேசுபவரைவிடத் தாழ்நிலையில் உள்ள பெண்ணை அழைக்கும் சொல்.

8. பெண் உயர் அதிகாரியை அழைக்கும் சொல்.

9. கல்லூரி மாணவர்கள் ( ஆண்கள் ) தங்களுக்குள் அன்பாகப் பயன்படுத்தும் சொல்.

10. பிச்சையெடுப்பவர், பொருளுக்காக அழைக்கும் சொல்.

11. பெண் தெய்வங்களை, குறிப்பாக மாரியம்மன், காளி, கன்னிமேரி போன்றவர்களை அழைக்கும் சொல்.

12. சின்னம்மை, பெரியம்மை போன்ற கொடிய நோய்கள்.

13. இரக்கம், துன்பம், வியப்பு போன்ற பொருள்களில் வரும் இடைச்சொல்.

14. பெண்பால் பெயர்களின் பின்னொட்டாக வரும் விகுதி. <u>முனியம்மா</u>, <u>நாகம்மா</u>, <u>எல்லம்மா</u>.

இச்சொல்லிற்குத் தாய் என்ற உறவுமுறைப் பொருளே அடிப்படைப் பொருளாக உள்ளது. முதல் மூன்று பொருள்களைத் தவிர மற்றவை உறவல்லாப் பொருள்கள். இவை இச்சொல்லின் அணிநயப் பயன்பாட்டினால் ( Figurative meaning ) ஏற்பட்டவை. பொருள் விரிவின் ஒரு நிலையில் சொல்லுக்கும் பொருளுக்கும் உறவு இல்லாதது போன்ற ( பொருள்கள் 12, 13 ) தோற்றம் ஏற்படும். பொருள்கள் 4 முதல் 14 வரையிலானவை பேசுபவரின் நிலை, உணர்ச்சி, கேட்பவரின் நிலை, சமுதாயம் ஆகியன போன்ற பல்வேறு தனிமனித/சமுதாய நிலைகளைச் சார்ந்துள்ளன.

பொருள் 1 - அடிப்படை, தலையாய பொருள், எவ்விதக் குறிப்புப் பொருளும் இல்லை.

பொருள் 2,3 - நேரடியான விரிவுப்பொருள். சமுதாயத்தில் அப்பா, அம்மா ஆகியவர்களின் இரத்த உறவினர்களை அம்மாவுக்கு இணையாக மதிக்கும் சமுதாயப் பண்பு.

பொருள் 4 - பேசுபவரின் பண்பும், பெண்களைத் தாயாகப் போற்றும் தன்மையும் வெளிப்படும்; மேலும் அழைக்கப்படுபவரின் அன்பும் வெளிப்படும்.

பொருள் 5 - பேசுபவர் நற்குணங்கள்பால் கொண்டுள்ள மதிப்பும் தாயின் குணங்களை ஒத்தவரைத் தாயாக மதிக்கும் நற்பண்பும் வெளிப்படும்.

பொருள் 6 - பேசுபவர் பெண்கள்பால் கொண்டுள்ள மதிப்பும் அழைக்கப்படுபவரின் சாதி, இன்ன பிற சமுதாயக் கூறுகள் வெளியாகும்.
- பேசுபவரின் உணர்ச்சி ஓரளவு வெளிப்படும்.

பொருள் 7 - பேசுபவர் மற்றும் குறிக்கப்படுபவரின் தொழில், சமுதாய நிலையைச் சுட்டும். பொருளாதார நிலையைப் பிரதிபலிக்கும்.

பொருள் 8 - தொழில், மொழி, சமுதாயத்தால் வரையறை செய்யப்பட்டது.

பொருள் 9 - மாணவர்கள் ( ஆண்கள் ) தங்களுக்குள் பயன்படுத்தும் ஒருவகை அன்புமொழி. மாணவர்களிடையே உள்ள நெருக்கத்தையும் அன்பையும் வெளிக்காட்டும்.

பொருள் 10 - பேசுபவரின் பொருளாதார நிலை, சமுதாய அமைப்பு, பணிவு ஆகியவற்றை வெளிக் காட்டும். வயது வரன்முறையின்றி எல்லாப் பெண்களையும் அழைக்கும் சொல் - உணவு இடுபவரைத் தாயாகப் போற்றும் பண்பு வெளிப்படும்.

பொருள் 11 - அணிநயப்பொருள். பெண் தெய்வங்களைத் தாயாகப் போற்றும் பண்பு. கடவுளாக இருந்தாலும் தாய்போல் அன்புகாட்டும் பண்பினள் என்பதையும் பெண்களின் உயர் நிலையையும் வெளிக்காட்டும். மனிதர்களுக் குரிய அடிப்படைப் பண்புகளும் தெய்வங் களுக்குரிய சிறப்புப் பண்புகளும் தணிக்கப் படுகின்றன. மனிதப்பொருள் ( referent ) இறைப் பொருளாக மாறியுள்ளது.

பொருள் 12 - சமுதாயத்தின் இறைநம்பிக்கையைக் காட்டும். சக்தி தெய்வத்தின் ( மாரியம்மனின் ) சினத்தினால் கொடிய நோய்கள் மனிதருக்கு வருகின்றன என்ற நம்பிக்கை வெளிப் படுகிறது. நோயாளியிடம் அம்மன் இருப்பதாகக் கருதப்பட்டு அதற்கான விரதங்களும் சடங்குகளும் செய்யப்படு கின்றன. கடவுளர்பால் மக்களுக்குள்ள அச்சத்தை வெளிக்காட்டும்.

பொருள் 13 - பேசுபவரின் உணர்ச்சியையும் சூழலையும் வெளிக்காட்டும். நல்லதும் கெட்டதும் தாய் மற்றும் தெய்வங்களுடன் தொடர்பு

பெற்றுள்ளன என்ற நம்பிக்கையின் வெளிப் பாடு. அடிப்படைப் பொருள் உணர்ச்சிப் பொருளாக மாற்றம் பெறுகின்றது. பெரும்பாலான மொழிகளில் உறவுமுறைச் சொற்கள் உணர்ச்சிப் பொருளில் பயன் படுத்தப்படுவது இவண் குறிப்பிடத்தக்கது.

பொருள் 14 - அழைக்கப்படுபவரின் மதம், கடவுள் நம்பிக்கை ஆகியவற்றைக் காட்டும். அம்மா என்ற பெயரைத் தங்கள் பெயர்களுடன் இணைப்பதன் மூலம் கடவுள் அருளைப் பெறமுடியும் என்ற நம்பிக்கை வெளியாகும். சமுதாய நிலையையும், சாதியையும் ஓரளவு பிரதிபலிக்கும்.

சில இடங்களில் அம்மா என்ற சொல் மனைவியை அழைக்கப் பயன்படுத்தப்படுகிறது. இப்பயன்பாடு அம்மா என்ற சொல்லின் அடிப்படை உறவுப் பொருளைப் பாதிப்பதால் இச்சொல் பெருவழக்குப் பெறவில்லை.

I

அப்பா- 1. பெற்றோரில் ஆண், தந்தை.

2. தந்தையின் சகோதரர் ( பெரியப்பா, சித்தப்பா ).

3. அம்மாவின் சகோதரியின் கணவர் ( பெரியப்பா, சித்தப்பா ).

II

4. தந்தையைப்போல் அன்பு காட்டுவதற்குரிய/ மரியாதைக்குரிய பெரியவர்.

5. வயதில் முதியவர் ஒருவரை அழைக்கும் சொல்.

6. பெற்றோர் வழியில் வந்த தூரத்து முன்னோர்.

7. ஆண் குழந்தையை/சிறுவனை அன்பாக அழைக்கும் சொல்.

8. பெற்றோர் பிள்ளையை அன்பாக அழைக்கு சொல்.

9. கல்வி அறிவு இல்லாதவரை அழைக்கும் சொல்.

10. கல்லூரி மகளிர் தங்களுக்குள் பயன்படுத்தும் சொல்.
11. கடவுளரைக் குறிப்பாக முருகனை அழைக்கும் சொல்.
12. வியப்பு, துன்பம், வலி போன்ற உணர்ச்சிகளைக் குறிக்கும் சொல்.
13. ஓய்வு போன்ற பொருள்களில் வரும் சொல்.
14. ஆண்பால் பெயர்களில் பின்னொட்டாக வரும் விகுதி முருகப்பா, பிச்சையப்பா, கண்ணப்பா.

அம்மா என்ற சொல்லின் பொருளைப் போல் அப்பா என்ற சொல்லின் பொருளையும் விளக்கலாம். பொருள்கள் 1,2,3 என்பன உறவுமுறைப் பொருள்கள். பொருள்கள் 4-9 வரையிலானவை பேசுபவரின் உணர்வினையும், பண்பு களையும் வெளிக்காட்டும். பொருள் 10 பேசுபவர்களுக்கும் அழைப்பவருக்கும் இடையே உள்ள அன்பினைச் சுட்டும் அன்புமொழி. பொருள் 11 அணிநயப்பொருள். பொருள் தந்து காக்கும் கடவுளரைத் தந்தையாகக் கருதுவதனால் இப்பொருள் விரிவு ஏற்படுகின்றது. பொருள்கள் 12,13ம் பேசுபவரின் உணர்ச்சியினையும் சூழநிலையையும் பிரதிபலிப்பன. பொருள் 14 பெயருடையவர் சார்ந்துள்ள மதத்தினையும் கடவுள்பால் அவருக்குள்ள பற்றினையும் தெரிவிக்கிறது.

மாமா 1. அம்மாவின் அண்ணன், தாய்மாமன்.
2. அப்பாவின் சகோதரியின் கணவன்.
3. மனைவியின் தந்தை.
4. கணவனின் தந்தை.
5. அக்காவின் கணவர்.
6. சகோதரனின் மனைவியின் தந்தை.
7. சகோதரியின் கணவனின் தந்தை.
8. ( சில இனத்தார் ) கணவனை அழைக்கும் சொல்.
9. அறிமுகமுடைய ஆண், சிறுவர், சிறுமியரை அழைக்கும் சொல்.

10. பிராமணர் ஒருவரை அழைக்கும் சொல்.
11. பெண்களைக் கூட்டிக் கொடுப்போன்.

அண்ணாத்தை 'அண்ணன்'

1. நன்கு கற்றறிந்தவர்.
2. வயதில் மூத்தவரை வெறுப்பினால் அழைக்கும் சொல்.
3. இழிந்தவன்.

அப்பச்சி 'அப்பா' பள்ளர் இனத்தார் மறவர் இனத்தைச் சார்ந்த ஒருவரை அழைக்கும் சொல்.

அண்ணன் 'மூத்த சகோதரன்'

1. வயதில் மூத்த ஆணை அழைக்கும் சொல்.
2. அரசியலில் தலைவர்களை அழைக்கும் சொல்.

ஆச்சி 'பாட்டி' 1. மிக வயதான ஒரு பெண்ணை அழைக்கும் சொல்.

2. நாட்டுக்கோட்டைச் செட்டியார் இனத்தில் வயதுமுதிர்ந்த பெண்ணை அழைக்கும் சொல்.

அம்மான் 'தாய்மாமன்' கடவுள்.

அத்தை 'மாமாவின் மனைவி' வயதில் மூத்த ஒரு பெண்ணை அழைக்கும் சொல்.

தம்பி 'இளைய சகோதரர்' வயதில் குறைந்தவர் அல்லது சிறுவனை அழைக்கும் சொல் ( வயது வேறுபாடு இதற்கு வரம்பாகும் ) .

தங்கச்சி 'இளைய சகோதரி' வயதில் குறைந்த பெண் அல்லது சிறுமியை அழைக்கும் சொல் ( வயது வேறுபாடு இதற்கு வரம்பாகும் ) .

மாமி பிராமணப் பெண்ணை அழைக்கும் சொல்.

அய்யா 'அப்பா' 1. மிகு மதிப்புடைய உயர் அலுவலர் போன்றவரை அழைக்கும் சொல்.

2. பிச்சைக்காரர் பொருளுக்காக அழைக்கும் சொல். இது வயது வரம்பின்றி எல்லா ஆண்களையும் அழைக்கப் பயன்படும்.

3. முருகக்கடவுள்.

மேற்காட்டப்பெற்றுள்ள உறவுமுறைச் சொற்கள் பல்வேறு வழிகளில் பொருள் விரிவு பெற்றுள்ளன. அண்ணன், அய்யா, அம்மாள், ஆச்சி, தம்பி போன்றன சிறப்புப் பெயர்களின் பின்னால் சேர்க்கப்படும் பொழுது விகுதிகளாகச் செயல்படு கின்றன.

காளி + அண்ணன் ⟶ காளியண்ணன்
கருப்பு + அண்ணன் ⟶ கருப்பண்ணன்
கருப்பு + அய்யா ⟶ கருப்பைய்யா
முருக + அய்யா ⟶ முருகய்யா
கோலம் + அம்மாள் ⟶ கோலம்மமாள்
நாகம் + அம்மாள் ⟶ நாகம்மாள்
லெட்சுமி + ஆச்சி ⟶ லெட்சுமியாச்சி

'தம்பி' என்ற சொல் பெயரடைகளின் பின்னால் சேர்க்கப்படுகிறது.

நல்ல + தம்பி ⟶ நல்லதம்பி
சின்ன + தம்பி ⟶ சின்னத்தம்பி

இப்பண்பு குறிப்பிட்ட சில இனங்களில் மட்டும் அதிகம் காணப்படுகிறது.

'மாமியார்' என்ற சொல் வியக்கத்தக்க ஒரு பொருளைப் பெற்றுள்ளது இங்குக் குறிக்கத்தக்கது. இது சிறைச்சாலை என்ற பொருளை 'மாமியார் வீடு' என்ற சொல் மூலம் பெறுகின்றது. பொதுவாக, மருமகன் மாமியார் வீட்டிற்குச் செல்லும்பொழுது சிறப்பான வரவேற்பைப் பெறுவதுண்டு. இந்நிலையில்தான் மாமியார் என்ற சொல் பொருள் விரிவு பெறுகிறது.

### 2.13.4. உறவுமுறைச் சொற்களும் குறிப்புப் பொருளும்

பின்வரும் உறவுமுறைச் சொற்கள் சாதி, சமயம், இடம் போன்ற செய்திகளைக் கொண்டிருப்பதைக் காணலாம்.

| உறவுமுறைச் சொல் | குறிப்பு | பொருள் |
|---|---|---|
| அத்திம்பேர் | பிராமணர் | 1. அக்காவின் கணவர் 2. அப்பாவின் அக்காவின் கணவர் |
| அண்ணாச்சி | திருநெல்வேலி கன்னியாகுமரி | அண்ணன் |
| அத்தைப்பாட்டி | பிராமணர் | தாத்தாவின் சகோதரி |
| அப்பச்சி | செட்டிநாடு, நாடார் | அப்பா |
| அம்மங்கார் அம்மங்காள் | பிராமணர் | தாய்மாமன் மகள் |
| அம்மாஞ்சி | பிராமணர் | அப்பாவழி மாமாவின் மகள் |
| அம்மாஞ்சி மதினி | பிராமணர் | தாய்மாமன் மகள் |
| ஆத்தா (ள்) | செட்டிநாடு | அம்மா |
| ஆத்துக்காரர் | பிராமணர் | கணவர் |
| ஆமக்கன் | நாஞ்சில்நாடு | கணவர் |
| உடப்பிறந்தாள் | நாஞ்சில்நாடு | சகோதரி |
| உடப்பிறந்தான் | நாஞ்சில்நாடு | சகோதரன் |
| உம்மா | முஸ்லீம் | அம்மா |
| ஒப்பன் | கன்னியாகுமரி நாடார் (வெறுப்பு) | அப்பா |
| கடுவன் | கன்னியாகுமரி நாடார் | மகன் |
| காக்கா | முஸ்லீம் | அண்ணன் |
| கொம்மை | கன்னியாகுமர நாடார் (வெறுப்பு) | அம்மா |
| சம்மந்தி | கன்னியாகுமரி | கணவனின் தங்கை |
| சிரத்தியா (ர்) | தஞ்சாவூர்- பிராமணர் | அம்மாவின் தங்கை |
| தள்ளை | கன்னியாகுமரி | அம்மா |
| தொத்தா | சென்னை | அம்மா |
| தோப்பனார் | கன்னியாகுமரி | அப்பா |
| நாட்டுப்பெண் | பிராமணர் | மகன் மனைவி |
| நாத்தனார் | பிராமணர் | கணவன் சகோதரி |

| உறவுமுறைச் சொல் | குறிப்பு | பொருள் |
|---|---|---|
| பொஞ்சாதி | நாஞ்சில்-வெள்ளாளர் | மனைவி |
| பொட்டை | கன்னியாகுமரி-நாடார் | மனைவி |
| மச்சம்பி | நாஞ்சில்நாடு | தாய்மாமன் |
| மதினி | பறையர் | அண்ணன் மகள் |
| மன்னி | பிராமணர் | அண்ணன் மனைவி |
| மாட்டுப்பெண் | பிராமணர் | அண்ணன் மனைவி |
| மூப்பலு | கன்னியாகுமரி | அப்பா, தாத்தா |
| வாப்பா | முஸ்லீம் | அப்பா |

### 2.13.5. உறவுமுறைச் சொற்களும் ஒருபொருள் பலசொல் தன்மையும்

ஓர் உறவைச் சுட்டப் பல சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. இச்சொற்கள் இரண்டு வகைகளையும் சார்ந்தன.

| | | | |
|---|---|---|---|
| 1. அப்பா | ஆஞ்ஞா | | |
| அச்சன் | ஆஞான் | தகப்பன் | தோப்பனார் |
| அத்தன் | ஆஞி | தந்தவன் | நாயனார் |
| | | தந்தை | பிதா |
| அப்பச்சி | ஐ | தமப்பன் | பிதிர் |
| அப்பன் | ஐயன் | தாதா | முதல்வன் |
| அப்பா | | | |
| அப்பு | ஐயா | தாதை | உந்தை |
| ஆஞா | ஒப்பன் | தேசிகன் | எந்தை |
| 2. அம்மா | அன்னை | ஆயி | தாய் |
| அக்கா | அவ்வை | ஈன்றாள் | தாயார் |
| அத்தி | ஆச்சாள் | செல்வி | தாயி |
| அத்தா | ஆச்சி | ஞாய் | மாதா |
| அத்தை | ஆத்தா | தந்தவள் | முவ்வை |
| அம்பா | ஆத்தாள் | தவ்வை | யாய் |
| அம்மனை | ஆய்ச்சி | தன்னை | |
| அம்மச்சி | ஆயள் | தாச்சி | |

பெரும்பாலான சொற்கள் முதல்வகையைச் சார்ந்தன. அவை குறிப்புப் பொருளைக் கொண்டுள்ளன. எடுத்துக்காட்டாக

ஐ, ஐயன், அத்தன், தந்தவன், தாதை, பெற்றவன், முதல்வன், எந்தை, உந்தை என்ற சொற்கள் இலக்கியச் சொற்கள். இதைப்போன்றே மற்றைய சொற்களும் குறிப்புப் பொருளைக் கொண்டுள்ளன. அப்பச்சி, மூப்பலு என்ற சொற்கள் கன்னியாகுமரி மாவட்ட நாடார் இனத்தினரால் பயன்படுத்தப்படுவனவாகும். அஞ்ஞை, தாய், யாய், ஈன்றவள் என்னும் சொற்கள் இலக்கியச் சொற்கள். பெரும்பாலான சொற்கள் குறிசொல்லாக மட்டும் பயன்படுத்தப்படுகின்றன என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

### 2.13.6. வகைப்பாட்டு வரையறை

பொருண்மையியலில் சொற்களுக்குரிய ஒருவகைக் கட்டுப்பாடே பொருள் வரையறை ஆகும். உறவுமுறைப் பெயர்களைப் பொறுத்தமட்டில் பெரும்பாலும் அவற்றிற்குள் எந்த வரையறையும் இல்லை. எனவேதான் முன்னர்க் குறிப்பிட்டது போல் ஓர் உறவுமுறைச் சொல் பல உறவுகளைக் குறிக்கின்றது. பின்வரும் சொற்களைக் காண்போம்:

மாமா-1. அம்மாவின் சகோதரன், தாய்மாமன்
2. அப்பாவின் தங்கையின் கணவன்
3. மனைவியின் தந்தை
4. கணவனின் தந்தை
5. அக்காள் கணவர்
6. சகோதரனின் மனைவியின் தந்தை
7. சகோதரியின் கணவனின் தந்தை
8. கணவன்

மாமா என்ற சொல்லுக்கு 8 உறவுகள் உள்ளன. பதினொரு ( 2.13.3 ) பொருள்கள் உள்ளன. - 9,10,11 உறவல்லாப் பொருள்களாகும் ( காண்க: 2.13.3 ) .

பொருள் 5 - பேசுபவர் இனம், சார்ந்துள்ள இடம் ஆகியவற்றைக் குறிக்கும்

பொருள் 8 - பேசுபவரின் சமுதாய நிலை, இனம் முதலியவற்றைக் குறிக்கும்

பொருள் 11 - குறிப்புப் பொருளைக் கொண்டது. பரத்தமைக்கு உதவுவோரைக் குறிக்கும். அழைக்கப்படுபவரின் சமுதாய நிலையைக் குறிக்கும்.

ஆங்கிலத்தில் uncle என்ற சொல்லுக்கும் மேற்கண்ட (பொருள் 11) பொருள் உண்டு.

இந்தியச் சமுதாயங்களில் தாய்மாமனுக்குச் சிறப்பிடம் உண்டு. தாய்மாமன், திருமணம், இறப்பு, பூப்பு போன்ற சடங்குகளில் முக்கிய பங்காற்றுவார். தமிழ்நாட்டில் சில பகுதிகளில் தாய்மாமனுக்கு அவர் சகோதரியின் பெண்ணை மணந்துகொள்ளும் உரிமை உண்டு. சில இடங்களில் இது கட்டாயப்படுத்தப்படுகிறது. தாய்மாமனின் சிறப்பு கருதியும் தாய்மாமனைப் பிற மாமாவிலிருந்து வேறுபடுத்திக் காட்டவும் பல பெயர்கள் வழங்கப்படுகின்றன. பின்வரும் சொற்கள் தமிழில் காணப்படுகின்றன:

நன்மச்சான், நன்மாமன், அம்மான், தாய்மாமன், நல்லம்மான், அம்மாண்டார், அம்மாச்சன், நல்லப்பன்.

பின்வரும் எடுத்துக்காட்டுகளில் உறவுமுறைச் சொற்களின் உறவல்லாப் பொருள்கள் சில காட்டப் பட்டுள்ளன:

| | |
|---|---|
| அக்கா 'மூத்த சகோதரி' | 1. வயதில் மூத்த பெண்ணை அன்புடன் அழைக்கும் சொல் |
| | 2. தீயபேற்றைத் தரும் பெண் தெய்வம், மூதேவி. |
| அப்பா 'தந்தை' | 1. நன்மை செய்பவன், உதவி செய்பவன் |
| | 2. குழந்தையை அன்புடன் அழைக்கும் சொல் |
| | 3. முதியவர், வயதில் குறைந்த ஆள் ஆகியோரை அன்புடன் அழைக்கும் சொல் |
| அம்மை தாய் | 1. பார்வதி, மாரியம்மன் |
| | 2. பெண் சைனத் துறவி |
| | 3. நற்பேற்றுக் கடவுள் |
| | 4. சின்னம்மை பெரியம்மை எனும் நோய்கள் |

மாமா உறவுகளின் விளக்கம் ( காண்க: 2.13.6 )




படம் 1
( உறவுகள் 1, 2, 3, 5, 6 )

படம் 2
( உறவுகள் 4, 7, 8 )

அத்தை
1. அப்பாவின் சகோதரி
2. அம்மாவின் சகோதரனின் மனைவி
3. மனைவியின் தாய்
4. கணவனின் தாய்
5. சகோதரனின் மனைவியின் தாய்
6. சகோதரியின் கணவனின் தாய்

( 6 உறவுகள் )

| | | |
|---|---|---|
| மாப்பிள்ளை | - | 6 உறவுகள் |
| மைத்துனன் | - | 5 உறவுகள் |
| மச்சம்பி | - | 4 உறவுகள் |
| மச்சினன் | - | 4 உறவுகள் |
| மதினி | - | 4 உறவுகள் |
| மாமி | - | 4 உறவுகள் |

கணவன், மனைவி என்ற சொற்கள் குறிப்பிட்ட ஓர் உறவுமுறையை மட்டும் குறிக்கப் பயன்படுத்தப்படுவதால் அவை ஒருநிலையில் பொருள் வரையறை உடையன. இச்சொற்களின் அடிப்படைப் பொருள் மற்ற பொருள்களைப் போன்று தணிக்கப்படுவதில்லை. இது சமுதாயத்தில் இவ்வுறவுகளுக்குரிய ஒருவகைக் கட்டுப்பாட்டைக் குறிக்கின்றது.

### 2.13.7. உறவுமுறைச் சொற்களின் அமைப்பு

1. முன்னொட்டு உறவுமுறைச் ( *Prefixal word* ) சொல்
2. தனி உறவு முறைச்சொல் ( *Denotative word* )
3. அடுக்கு உறவுமுறைச் சொல் ( *Duplicative word* )
4. ஆக்க உறவுமுறைச் சொல் ( *Derivative word* )

2.13.7.1. முன்னொட்டு வகையில் உறவுமுறைச் சொல்லுடன் ஒரு முன்னொட்டு இடம்பெற்றிருக்கும். தன்மை, முன்னிலை, படர்க்கை எனும் மூவிடப் பெயர்களுக்குரிய பதிலீடுப் பெயர்கள் ( என், எம், நின், நும், தன், தம் ) உறவுமுறைச் சொற்களின் முன்னொட்டாக வரும். சங்க நூற்களில் பரவலாகக் காணப்படும் இப்பண்பு இன்றியமையாத ஒரு சொற்பொருண்மைப் பண்பாகும்.

எந்தை → என் + தந்தை

நுந்தை → நும் + தந்தை

என் + ஐ → என்னை

நின் + ஐ → நின்னை

தம் + ஐயர் → தம்மையர்

மேற்கண்ட சொற்களில் இடம்பெறும் முன்னொட்டை எளிதாகப் பகுத்து அறிந்துகொள்ள இயலும். எனினும் யாய் ( என் தாய் ), ஞாய் ( உன்தாய் ) எனும் சொற்களில் இடம்பெறும் முன்னொட்டுகளை எளிதாகப் பிரித்தறிய இயலாது.

2.13.7.2. பிரிக்க முடியாதவாறு முழுச் சொற்களாகப் பயன்படும் உறவுமுறைச் சொற்கள் தனி உறவுமுறைச் சொற்களாகும்.




அம்மா, அப்பா, மாமா என்பன போன்ற சொற்கள் இவ்வகையில் அடங்கும்.

2.13.7.3. அடுக்கு உறவுமுறையில் ஓர் உறவுமுறைச் சொல்லை இரட்டிப்பதன் மூலம் மற்றொரு உறவுமுறைச் சொல் தோன்றுகிறது.




2.13.7.4. வேறுபட்ட வடிவ அமைப்புடைய ஒருபொருளுடைய அல்லது வேறுவேறு பொருளுடைய இரண்டு சொற்கள் சேருவதன் மூலம் மூன்றாம் வகைச் சொற்கள் தோன்றுகின்றன.

2.13.7.4.1. ஒருபொருளுடையன




தந்தைதந்தை, நுந்தைதந்தை எனும் சொற்கள் சங்க நூற்களில் காணப்படுகின்றன.

### 2.13.7.4.2. வேறுபட்ட பொருளுடையன




2.13.7.4.3. மேற்காட்டப்பெற்றுள்ள வகைகள் பெரும்பாலும் பேச்சு வழக்கில்தான் அதிகம் காணப்படுகின்றன. இவற்றைத் தவிரச் சில பெயரடைகளைப் பயன்படுத்தி உறவுமுறைச் சொற்களைப் படைக்கும் முறையும் தமிழில் வழக்கிலுள்ளது. இம்முறையில் <u>பெரிய</u>, <u>சின்ன</u> போன்ற பெயரடைகள், <u>அப்பா</u>, <u>அம்மா</u> போன்ற உறவுமுறைச் சொற்களுடன் இணைந்து சில உறவைக் காட்டுகின்றன.

பெரிய + அம்மா——'பெரியம்மா'
சின்ன + அம்மா——'சின்னம்மா'
பெரிய + அப்பா——'பெரியப்பா'
சின்ன + அப்பா——'சின்னப்பா' ( சித்தப்பா )

* உறவுமுறைச் சொற்கள் சமுதாயச் சிறப்பு வாய்ந்தன. இச்சமுதாயச் சிறப்பு பல்வேறு குறிப்புப் பொருள்கள் மூலம் வெளிக் காட்டப் பெறுகின்றது.
* உறவுமுறைச் சொற்கள் பல்வேறு சொற் பொருண்மைக் கூறுகளைக் கொண்டுள்ளன.
* உறவுமுறைச் சொற்களின் பொருள் பல்வேறு நிலையில் பொருள் விரிவு பெற்றுள்ளது.
* தமிழ் உறவுமுறைச் சொற்கள் பல அமைப்புகளில் காணக் கிடைக்கின்றன.
* முன்னொட்டு உறவுமுறைச் சொல் தமிழில் வழங்கப் பெற்று வரும் இன்றியமையாத ஒன்றாகும்.
* முன்னொட்டு உறவுமுறைச் சொல் திராவிடப் பண்பாக உள்ளது. இதுகுறித்த விளக்கங்கள் பின் இயல்களில் இடம்பெற்றுள்ளன.

# 3. பெற்றோர் உறவுமுறையும் உறவுமுறைச் சொற்களும்

## 3.0. முன்னுரை

சங்க நூற்கள் காட்டும் தமிழ்ச் சமுதாயம் அகம், புறம் என்ற இரண்டு நிலைகளில் இயங்கி வந்துள்ளது. புறவாழ்வில் சமுதாயத்திற்கு அடிப்படையான ஆனால் குடும்ப வாழ்வோடு அதிகம் தொடர்பில்லாத பல செய்திகள் இடம்பெற்றுள்ளன. அகப்பாடல்கள் தலைவன், தலைவி என்ற இருவருக்கும் இடையில் ஏற்படும் காதலை மையமாக வைத்துப் பாடப் பெற்றுள்ளன. இப்பாடல்களில் குடும்ப உறவு பற்றிய பல செய்திகள் இடம்பெற்றுள்ளன. உறவுமுறை பற்றிய செய்திகள் சங்கப் பாடல்களில் நேரடியாக இடம்பெறவில்லை எனினும், தலைவன்-தலைவி ஆகியோர் இடையே தோன்றி வளரும் காதலை விளக்கும் நிலையில் உறவுமுறை பற்றிய பல செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. தற்காலத்தைப் போல் அல்லாமல் சங்க காலத்தில் இரத்தவழி அடிப்படை உறவு முறைகளும், அவற்றிற்கான சொற்களும் மட்டுமே காணக் கிடைக்கின்றன. மரபுவழி அமையும் தலைமுறையை எடுத்துக் கொண்டால் பெற்றோருக்கு முந்திய பாட்டன், பாட்டி தலைமுறை பற்றிய குறிப்பு ஒரேஒரு இடத்தில் மட்டும் காணப்படுகிறது. கீழ்த் தலைமுறையை எடுத்துக்கொண்டால் குழந்தைகள் அதாவது தனியனின் ( Ego ) கீழ் தலைமுறையான குழந்தைகள் தலைமுறை பற்றிய செய்திகளே பெரும்பாலும் காணப்படுகின்றன. அதாவது தனியனின் முன்தலைமுறையான பெற்றோர் தலைமுறை ( தமு+1 ) பற்றிய செய்திகளும், தனியனின் தலைமுறை பற்றிய ( தமு0 ) செய்திகளும், தனியனின் கீழ் ஒரு தலைமுறை ( தமு-1 ) பற்றிய செய்திகளும் பெரும்பாலும் இடம்பெற்றுள்ளன. இத்தலைமுறையினரைக் குறிக்கவே உறவுமுறைச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதைக் கீழ்வரும் படத்தின் மூலம் தெரிந்து கொள்ளலாம்:




தனியனின் முன் பின் தலைமுறை பற்றிய உறவுகளும் அவற்றிற்குரிய சொற்களுமே சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. இந்நிலைகளுக்குரிய மண உறவோ, அவற்றிற்குரிய சொற்களோ இல்லை. தனியன் தலைமுறையைப் பொறுத்தமட்டில் மணம் மற்றும் இரத்த உறவுக்கான சொற்கள் காணப்படுகின்றன.

### 3.0.1. பாட்டன் தலைமுறை ( தமு+2 )

பாட்டன் தலைமுறையைக் குறிக்கத் தனிச்சொற்கள் பயன்படுத்தப்படவில்லை. எனினும் விளக்கமுறை உறவுமுறைச் சொற்களாகத் தந்தை தந்தை, நுந்தை தந்தை என்ற இரண்டு சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நுந்தை தந்தைக்கிவன் தந்தைதந்தை ( புறம். 290-3 )

பரிபாடலில் பாட்டி என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. எனினும் இச்சொல் உறவுமுறையைக் குறியாது வயதான கிழவி என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

மடநடைப் பாட்டியர்த் தப்பித்தடையிறந்து ( பரி. 10-37 )

### 3.0.2. பெற்றோர் தலைமுறை ( தமு +1 )

பெற்றோர் உறவுமுறையைப் பொறுத்தமட்டில் தாய்-தந்தை என்ற இரத்த உறவுக்கான உறவுமுறைச் சொற்களையே காண இயலுகிறது. பெற்றோரின் சகோதர,

சகோதரிகளைப் பற்றிய செய்திகளையோ, அதற்குரிய சொற்களையோ காண முடியவில்லை. அதாவது இன்று நம்மிடையே வழங்கும் பெரியப்பா, சித்தப்பா, அத்தை, மாமா என்ற உறவுமுறைகள் பற்றிய செய்தி இல்லை என்றே கூறலாம். அதாவது சங்க இலக்கிய சமுதாயத்தில் தனிக் குடும்ப வாழ்விற்குரிய அமைப்பே காணப்படுகிறது.

உறவுமுறைச் சொற்களின் மொழியமைப்பு மற்றும் சொற்பொருண்மையை நோக்கும்போது கீழ்வரும் பண்புகளைக் காணவியலும். அடிப்படையில் உறவுமுறைச் சொற்களாக உள்ள சில சொற்கள் உறவுமுறைப் பொருளில் அன்றித் தொடர்புடைய பிற பொருள்களிலும் கையாளப் படுகின்றன. இதற்கு மாறாக, அடிப்படையில் உறவுமுறைச் சொல் அல்லாத சில சொற்கள் பொருள் விரிவுபெற்று உறவுமுறைப் பொருளிலும் வருகின்றன. உறவுமுறைச் சொற்களின் மொழியமைப்பைப் பொறுத்தமட்டில் இரண்டு வகையான சொற்கள் காணக்கிடைக்கின்றன. முதல்வகைச் சொற்கள் பல்வேறு உருபன்களாகப் பிரிக்க முடியாதவாறு தனிச்சொல்லாக இயங்குகின்றன (அன்னை, அப்பா, அம்மா). இரண்டாவது வகைச்சொற்கள் தனிச்சொற்களாக வின்றி இரண்டோ இரண்டிற்கு மேற்பட்ட சொற்களோ உருபன்களோ இணைவதால் தோற்றம் பெறுகின்றன. அடிப்படை உறவுமுறைச் சொற்களில் முன்னொட்டாகச் சில அடைகளையோ, பெயர்களையோ இணைப்பதன் மூலம் இவ்வகை உறவுமுறைச்சொற்கள் ஆக்கப்படுகின்றன (அப்பா+ ஆயி ——— அப்பாயி, அம்மா + ஆயி ——— அம்மாயி, பெரிய+ அப்பா ——— பெரியப்பா). இவ்வகைச் சொற்கள் பேச்சு வழக்கிலே அதிகம் பயன்பாட்டிலுள்ளன. இரண்டாம் வகையைச் சார்ந்து ஆனால் மொழியமைப்பில் இவ்வகையி லிருந்து சிறிது மாறுபட்டு வழங்கப்பட்டுள்ள பல உறவுமுறைச் சொற்களைச் சங்கத் தமிழில் பரவலாகக் காண இயலுகிறது. இவ்வகை உறவுமுறைச் சொற்கள் மூவிடக் குறிப்புக்களை (தன்மை, முன்னிலை, படர்க்கை) அதாவது இச்சொற்கள் ஒரு பயன்பாட்டெல்லையைக் கொண்டே செயல்படுகின்றன. இம்மூவிடப் பெயர்ச்சொற்கள் உறவுமுறைச் சொற்களின் அடையாகப் பயன்படுமிடத்துச் சில சொற்களில் வெளிப்படை யாகப் பிரித்தறியும் வண்ணமும் சில சொற்களில் பிரித்தறிய

முடியாத வண்ணமும் மூவிடங்களைக் குறித்து சொல்லும் உறவுமுறைச் சொல்லுடன் இணைந்து இயங்குகின்றன (ஞாய், யாய்). இச்செய்திகளை அடிப்படையாகக் கொண்டு பெற்றோரைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படும் உறவுமுறைச் சொற்களை ஆராய்வோம்.

### 3.0.3. பிங்கல நிகண்டில் பெற்றோருக்குரிய சொற்கள்

சங்க நூற்களில் வழங்கப்படும் உறவுமுறைச்சொற்களை ஆராயும்முன் பிங்கல நிகண்டில் கொடுக்கப்பட்டுள்ள தாய், தந்தைக்குரிய சொற்களைக் காணலாம்.

தாதை, அத்தன், தந்தை, பிதா, ஐயன் (பிங். 907)

எனும் ஐந்து சொற்கள் தந்தையைக் குறிக்கவும்,

அம்மை, அன்னை, ஆய், அவ்வை, தம்மனை
மோய், ஈன்றாள், தன்னை (பிங். 912)

எனும் எட்டு சொற்கள் தாயைச் சுட்டவும் குறிப்பிடப் பட்டுள்ளன.

### 3.0.4. சங்க இலக்கியத்தில் தந்தையும் தாயும்

சங்க இலக்கியங்களில் தந்தையைக் குறிக்கப் பின்வரும் பத்து சொற்களும்,

தந்தை: 1. எந்தை 2. நுந்தை 3. தந்தை 4. தாதை
5. அத்தன் 6. ஐ 7. நும்முன் 8. முதல்வன்
9. என்னை 10. கோ.

தாயைக் குறிக்கப் பின்வரும் எட்டு சொற்களும் காணப்படுகின்றன.

தாய்: 1. அன்னை 2. ஞாய் 3. யாய் 4. அஞ்ஞை
5. அம்பா 6. தாய் 7. ஈன்றோள் / ஈன்றாள்
8. பயந்தோள்.

#### அம்மா-அப்பா

தற்காலத்தில் பேச்சு மற்றும் எழுத்து வழக்கில் பெரு வழக்குப் பெற்றுள்ள அம்மா, அப்பா என்ற சொற்கள் சங்கத் தமிழில் வழக்கில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. அம்ம, அம்மா எனும் சொற்கள் சங்க இலக்கியத்தில் காணப்படினும்

அவை முன்னிற்பவரை, ஆண், பெண் இருபாலரையும் விளித்துக்கூறும் நோக்கில் அசையாகப் பயன்படுத்தப்பட்டு உள்ளன (தொல். சொல். 277).

தந்தையைக் குறிக்கப் பிங்கல நிகண்டு வரிசைப்படுத்தியுள்ள சொற்களில் பிதா, ஐயன் என்ற சொற்களைத் தவிரப் பிற வழக்கிலுள்ளன. மேற்கண்ட சொற்களில் தந்தை, அத்தன் என்ற சொற்கள் மட்டுமே விளிச்சொற்களாகவும் பயன் படுத்தப்பட்டுள்ளன. தந்தையைக் குறிக்கும் சொற்களில் தந்தை என்ற சொல்லே அதிகமாக 64 இடங்களிலும், அதை அடுத்து எந்தை என்ற சொல்லும் 55 இடங்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளன. அத்தன் இரண்டு இடங்களிலும், தாதை மூன்று இடங்களிலும் காணப்படுகின்றன. பிற சொற்கள் மிகக் குறைந்த அளவிலே வழக்கிலுள்ளன.

### 3.1. தந்தையைக் குறிக்கும் சொற்கள்

#### 3.1.1. எந்தை-நுந்தை-தந்தை

எந்தை, நுந்தை, தந்தை என்பவை தன்மை (எம்) முன்னிலை (நும்) படர்க்கை (தம்) என்ற மூவிடப் பெயர்களைக் குறித்தே வழங்கப்பட்டுள்ளன. இதைப் பின்வரும் எடுத்துக்காட்டுகளில் காண்போம்.

எந்தையும் நுந்தையும், எம்முறை கேளிர் (குறு.40-2)

என்ற பாடல் அடியில் என் தந்தையும், நும் தந்தையும், என்ன உறவினை உடையவர் என்ற பொருள் பயின்று வருகின்றது. இதைப்போல் பின்வரும் எடுத்துக்காட்டுகளில் எந்தை, நுந்தை, தந்தை என்பன எம்/என் தந்தை, நும் தந்தை, அவன்/அவள் தந்தை எனப் பொருள்பட்டு நிற்பதைக் காணலாம்.

எந்தை அறிதல் அஞ்சி .... (ஐங். 261-3)
எந்தை எனக்கீத்த இடுவளை .... (பரி. 20-76)
எந்தையும் இல்லானாக .... (அகம். 158-17)
கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை... (நற்.202-8)
நுந்தையும் யாயும் கடியரோ நின்னை... (ஐங்.98-4)
நுந்தை பால் உண்டிசில .... (கலி. 85-25)
யார்மகள் கொல்லிவள் தந்தை வாழியர்... (நற்.8-4)

இவள் தந்தை காதலின் யார்க்கும் கொடுக்கும் ....
(கலி. 61-113)

ஈரமில்லாத இவள் தந்தை .... (கலி. 84-8)

எந்தை, நுந்தை எனும் சொற்கள் எம், நும் எனும் மூவிடப் பன்மைப் பெயர்களைக் கொண்டு வரினும், ஒருமை, பன்மை மயக்கமின்றியே பெரும்பாலான இடங்களில் வழங்கி வருகின்றன. எந்தை எனும் சொல் தந்தையைக் குறிக்க மட்டும் கையாளப்படாமல், அரசனையும், காதல் தலைவனையும் குறித்து ஏறத்தாழ 21 இடங்களில் காணப் படுகிறது. நுந்தை, தந்தை என்பவை இவ்வாறு பயன்படுத்தப் படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இதைக் கீழ்வரும் எடுத்துக்காட்டுகளில் காணலாம்.

ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ (குறு.325-4)
உண்கும் எந்தை நின் காண்கு வந்திசின் (புறம்.125-4)
வந்தனென் எந்தை யானே என்றும் (புறம்.135-10)
ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ
(புறம். 235-16)
ஈந்தோன் எந்தை (புறம். 386-9)

இப்பொருள் மாற்றத்தை விளக்கவந்த உரையாசிரியர்கள் முறை குறியாது தலைமைத்தன்மை குறித்து எம்பெருமான் எனப் பொருள்பட நின்றது என்பர். இத்தகைய பயன்பாட்டைப் புறநானூற்றில் 16 இடங்களில் காணலாம்.

தலைவன், புலவர் அல்லது இரவலர் அரசனை/ வள்ளலைப் பார்த்து எம்பெருமானே என அழைத்துப் புகழும்படியாக இச்சொல் அமைந்துள்ளது. இப்பாடல்களில் நற்றிணையில் ஓரிடத்தில் இச்சொல் எந்தாய் என்று தாய் புதல்வனை நோக்கி அழைப்பதாய்க் காணப்படுகிறது.

வந்தீக எந்தை என்னும்
அத்தீம் கிளவி கேட்க நாமே (நற். 221:21)

இவ்வாறாக மேற்கண்ட சான்றுகளின் மூலம் எந்தை எனும் உறவுமுறைச் சொல் என்/எம் தந்தை எனப் பொருள்பட்டு நிற்கச் சிலவிடங்களில் தலைவி அல்லது தோழி தலைவனை நோக்கி எந்தை (எம்/என் இறைவனே/பெருமானே) என அழைப்பது போலவும் புலவர்கள் அரசர்களை நோக்கி எந்தை

என்று குறிப்பிடுவது போலவும், வழங்கப்பட்டுள்ளது. தற்காலத்தில் பெரியவர்களையும், இறைவனையும், குழந்தையையும் 'அப்பா' என அழைக்கும் வழக்கத்தை இதனோடு ஒப்புநோக்குதல் சிறந்ததாகும்.

எந்தை, நுந்தை எனும் சொற்கள் பெரும்பாலான இடங்களில் தந்தையைக் குறிப்பதற்காகவே பயன்படுத்தப் பட்டுள்ளன. சிலவிடங்களில் தலைவியின் தந்தையைக் குறிப்பதற்கும் வழங்கப்பட்டுள்ளன. தலைவி மகனைப் பார்த்து உன் தந்தை எனக் குறிப்பிடும் சான்றுகளும் சில பாடல்களில் காணக்கிடைக்கின்றன.

உளமென்னா நுந்தை மாட்டெவ்வமுழப்பார்
( கலி. 80:12 )
உய்வின்றி நுந்தை நல்லுணச்சாய் ( கலி. 80:16 )
நுந்தை வாய் ... மாயச்சூள் ஏறி ... ( கலி. 85:26 )
செம்மல் வனப்பெல்லாம் நுந்தையை ஒப்பினும்
( கலி. 85:21 )
.... நுந்தையை நோவார் யார் ( கலி. 34:38 )

இவ்வகைப் பயன்பாட்டைக் கலித்தொகையில் அதிகம் காணமுடிகிறது. முன்னர்க் கண்டதுபோல் நுந்தை, எந்தை, தந்தை எனும் சொற்கள் ஒரு பயன்பாட்டு எல்லையைக் கொண்டு இயங்குகின்றன. எனினும் தந்தை எனும் சொல் என் தந்தை, உன் தந்தை என்ற பொருள்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் கீழ்வரும் எடுத்துக்காட்டுகளில் காணலாம்.

நும்மொடு வருவல் என்றி எம்மொடு
பெரும் பெயர்த் தந்தை நீடுபுகழ் நெடுநகர்
( நற். 162:7 )

இப்பாடலடி தலைவன் தலைவியைப் பார்த்துப் பெரிய கீர்த்தியையுடைய ( உன் ) தந்தையினது நீண்ட புகழ் பொருந்திய நெடிய மாளிகையின் கண்ணே... எனக் கூறுவதுபோல பொருள்பட்டு நிற்கிறது. இப்பாடல் அடி,

'பெரும்பெயர் நுந்தை நீடுபுகழ் நெடுநகர்'

என்று கையாளப்பட்டிருப்பின் பொருள் ஏற்றுக்கொள்ளக் கூடியதாய் இருந்திருக்கும். மேலும்,

'தந்தை வித்திய மென்தினைபைபயச்' ( நற்.306:1 )

என்ற பாடல் அடியில் தந்தை என்ற சொல் தோழியும் தலைவியும் சேர்ந்து 'எம் தந்தை' என்று அழைப்பதாகப் பொருள்பட்டு நிற்பதைக் காண இயலும். இவ்வடி 'எந்தை வித்திய மென்தினை பைபய' என அமைந்திருத்தல் வேண்டும்.

'நீ வாழியர் நின் தந்தை' (புறம்.137:14)

என்ற பாடலில் 'நின் தந்தை' என்ற தொடர் பயன்படுத்தப் பட்டுள்ளது. நின் தந்தை என்பதற்குப் பதில் 'நுந்தை' என்று கையாளப்பட்டிருக்க வேண்டும். அதாவது 'நீ வாழியற் நுந்தை' என்று இருத்தல் வேண்டும். இப்பயன்பாடுகளை விதி விலக்காகக் கொள்வதைவிட இலக்கிய வழக்கில் இப்பயன் பாட்டெல்லை நன்கு கடைபிடிக்கப் பட்டிருக்கப் பேச்சு வழக்கில் உறழ்நிலையில் இருந்ததாகக் கொண்டு பேச்சுவழக்கின் தாக்கத்தால் இப்பிறழ்வு ஏற்பட்டதாகக் கொள்ளலாம்.

### 3.1.2. தாதை

தந்தையைக் குறிக்கத் 'தாதை' எனும் சொல் பரிபாடலில் மூன்று இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. சதுரகராதியில் தாதை என்பதற்குப் பாட்டன் என்று பொருள் கொடுக்கப்பட்டுள்ளது இவண் குறிப்பிடத்தக்கது.

இருவர் தாதை இலங்கு பூண் மாஅல் (பரி.1:32)

தாமரைப் பூவினுள் பிறந்தோனுந் தாதையும்
(பரி. 3:13)

அலர்ந்த புகழோன் தாதையாகலின் (பரி.4:14)

மேற்கண்ட மூன்று இடங்களிலும் கடவுளரின் தந்தையைக் குறிக்கவே இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

தாதை என்ற சொல்லைப் பிராகிருத மொழிச் சொல்லாகக் கூறுவர். இச்சொல் இடைக்கால இலக்கியங்களில் சற்று அதிகமாக ஆளப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது

### 3.1.3. அத்தன்

அத்தன் எனும் உறவுமுறைச்சொல் தந்தையைக் குறிக்க 2 இடங்களில் கையாளப்பட்டுள்ளது.

அன்னையும், அத்தனும் அல்லரோ தோழி
( குறு. 93:3 )

அன்னையும் அத்தனும் இல்லராயாய் நாண
( கலி. 115:8 )

இச்சொல் 'அத்தத்தா' என அடுக்கி விளிப்பெயராய்க் கலித்தொகையில் இரண்டு இடங்களில் பயின்று வருகின்றது.

ஐய காமரு நோக்கினை அத்தத்தா என்றுநின்
தேமொழி கேட்டால் ... ( கலி.80:14 )

வோவோ - அடுத்தடுத்து அத்தா அத்தா என்பான்
( கலி. 81:19 )

மேற்கண்ட இரண்டு இடங்களிலும் மகன், தந்தையை அத்தத்தா என அழைப்பது போன்று காணப்படுகிறது.

அத்தன் ⟶ அத்தா ⟶ அத்தத்தா

'அத்தன்' எனும் இச்சொல் பிற்கால இலக்கியங்களில் மூத்தோன், உயர்ந்தோன் என்ற பொருள்களிலும் கடவுளர்களைப் பொதுநிலையில் குறிக்கும் வகையிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஐ, என்னை, நும்முன், முதல்வன், கோ என்ற சொற்களும் தந்தையைக் குறிக்கச் சில நூற்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவற்றுள் நும்முன், என்னை, என்பன நும்+முன், என்+ஐ எனப் பகுப்பாய்வு செய்யத்தக்கன. இச்சொற்கள் அடிப்படையில் உறவுமுறைச் சொற்கள் அல்ல. அவை மொழிச் சூழலுக்கு ஏற்பப் பொருள் விரிவு பெற்று உறவுமுறைப் பொருளைத் தந்து நிற்கின்றன எனலாம்.

### 3.1.4. முதல்வன்

முதல்வன் பெரும்பெயர் முறையுளிப்பெற்ற
( கலி. 75:24 )

என்ற அடியில் தன் தந்தையின் பெரிய பெயரைப் பெறுமுறையால் பெற்று என்று 'முதல்வன்' என்பதற்குத் தந்தை என்று பொருள் கொள்ளப்பட்டுள்ளது. இச்சொல்லின் அடிப்படைப் பொருள் முதன்மையானவன், தலைவன்/ எவரினும் மேலானவன் என்பதாகும். இச்சொல் மேற்கண்ட இடத்தில் மட்டுமே தந்தை என்ற பொருளில் வந்துள்ளது.

### 3.1.5. முன்

முன் எனும் பொதுச்சொல் நும், என்ற முன்னிலைப் பெயருடன் இணைந்து தந்தையைக் குறிக்க ஓரிடத்தில் பயன் படுத்தப்பட்டுள்ளது. முன், பின் என்பன முறையே அண்ணன், தம்பியைக் குறிக்கப் பிற்கால இலக்கியங்களில் பரவலாகப் பயன்படுத்தப்படுவது குறிப்பிடத்தக்கது.

சுரும்பார் கண்ணிப்பெரும் பெயர் நும்முன்
( புறம். 174:18 )

வண்டு ஆர்க்கப்பட்ட கண்ணிமையையும், பெரிய புகழினையும் உடைய நும் முன்னோனாகிய தந்தை என்று இச்சொல்லுக்குப் பொருள் கூறப்பட்டுள்ளது.

### 3.1.6. ஐ

ஐ எனும் சொல் தமிழ் நூற்களில் பல்வேறு தொடர்புடைய பொருள்களில் ஆளப்பட்டுள்ளது. தலைவன் என்ற பொருளில் 12 இடங்களிலும் இறைவன் என்ற பொருளில் 3 இடங்களிலும், மற்றும் வியப்பு, அழகு, மென்மை, விரைவு என்ற பொருள்களிலும் காணப்படுகின்றது. தந்தை என்ற பொருளில் இச்சொல் மூன்று இடங்களில் வந்துள்ளதைக் கீழ்வரும் எடுத்துக்காட்டுகள் மூலம் காண இயலும்.

என் ஐ வாழிய பலவே பன்னிய ( நற்.136:4 )

அன்னையும் அமர்ந்து நோக்கினளே என்னையும்
( நற். 389:3 )

இவள் தன் ஐ ....
யானை எறிந்து ( புறம்.279:3 )

மேற்கண்ட மூன்று எடுத்துக்காட்டுகளிலும் இச்சொல் மூன்று மொழிச்சூழலில் பயன்படுகிறது. முதல் இரண்டு எடுத்துக் காட்டுகளில் என் என்ற தன்மை இடப்பெயருடனும் இணைந்து இச்சொல் காணப்படுகிறது. எனினும் இரண்டாவது எடுத்துக் காட்டில் எந்தை என்ற சொல்லைப் போல ஒரு சொல் நிலையைப் பெற்று நிற்கின்றது. மூன்றாவது எடுத்துக்காட்டில் தன் என்ற படர்க்கைப் பெயருடன் இணைந்தும் செயல்படுகிறது. பொது நிலையில் பயன்படுத்தப்பட்ட இச்சொல்லைப் பிற

சொற்களைப் போன்று பயன்பாட்டு எல்லையுடன் வழங்க வேண்டும் என்ற எண்ணத்தின் தாக்கமே இவ்வாறு பயன்படுத்தப் பட்டுள்ளமைக்குக் காரணமாக அமைகிறது.

### 3.1.7. கோ

மேற்கண்ட சொற்களைத் தவிர 'கோ' என்ற சொல்லும், தந்தையைக் குறித்து வழங்கப்படுகிறது. அரசன் என்ற அடிப்படைப்பொருளில் இருந்து பொருள் விரிவு பெற்றுத் தந்தையைக் குறிக்கவும், ஓரிடத்தில் பயன்படுகிறது.

.....பிறர் வருக மற்றுநின்
கோவரினுமிங்கே வருக..... ( கலி. 116:111 )

பயன்பாட்டு எல்லையுடன் வழக்கிலுள்ள எந்தை, நுந்தை என்ற சொற்களின் சொல்லமைப்பு மற்றும் வேர்ச் சொல் பற்றிப் பல்வேறு கருத்துக்கள் நிலவி வருகின்றன.

### 3.1.8. சொல் வரலாறு

தாயம்மாள் அறவாணன் ( 1987:71 ) எந்தை, உந்தை, நுந்தை, தந்தை எனும் சொற்களைப் பின்வருமாறு பிரித்துக் காட்டுவர்:

எம் + ஐ ⟶ எந்தை
உம் + ஐ ⟶ உந்தை
நும் + ஐ ⟶ நுந்தை
தம் + ஐ ⟶ தந்தை

தாயம்மாள் கூற்றுப்படி எம், உம், நும், தம் என்பன மூவிடப் பெயர்களாகும். ஐ என்பது அடிப்படையில் விளிப்பெயராகவும் பின் உறவுமுறைப் பெயராகவும் மாறியது. தந்தை என்ற சொல்லை மேலும் பகுத்து தம் +( ந் ) +( த் ) +ஐ எனக் காட்டுவார். நுந்தை என்ற சொல்லை நும் > தை > நும்தை எனப் பிரித்து இச்சொல் 'தை' என்ற சொல்லின் அடியாகத் தோன்றியது என்றும் விளக்குவார் ( தாயம்மாள், 1987:71 ).

'தா' எனும் வினை அடியிலிருந்து இச்சொற்கள் தோன்றின என்பார் அருளி ( 1989:115 ).

தம் + தா ⟶ தந்தை
எம் + தா ⟶ எந்தை
நும் + தா ⟶ நுந்தை

இவர் கூற்றுப்படி, தா என்பது 'உலகிற்குத் தந்தவன்' என்ற பொருளில் எம்மை உலகிற்குத் தந்தவன், நும்மை உலகிற்குத் தந்தவன் என்று பொருள்பட்டு நிற்கின்றது.

பாலசுந்தரம் ( புள்ளி மயங்கியல், 52 ) தந்தை என்ற சொல் தொல்காப்பியர் காலத்திலே மூவிடத்திற்கும் உரிய பெயராக வழங்கலாயிற்று என்பார். இவர் கருத்துப்படி தந்தை, நுந்தை, எந்தை என்ற சொற்களில் தம், நும், எம் என்பவை 'தை' என்ற முறைப்பெயரோடு புணர்ந்து ஒரு சொல்லானது.

தொல்காப்பியர் 'நுந்தை' என்ற சொல்லை ஒருசொல் தன்மைத்து எனக் கருதினார் என்பது அவரது

குற்றியலுகர முறைப்பெயர் மருங்கின்
ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும் ( எழுத்.67 )

என்ற சூத்திரத்தின் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

கால்டுவெல் ( 1856:398 ) தந்தை என்ற சொல்லைத் தம்+ஐ எனப் பிரித்து 'தை' என்பது தந்தை என்று பொருள்படும் என்பார். அவர் கருத்துப்படி, 'தை' என்ற சொல் 'அத்தன்' என்ற சொல்லுடன் தொடர்புடையது. 'அத்தன்' என்பது ஒரு பழந்திராவிட மொழிச்சொல்.

உடைமைப்பொருளில் வரும் மூவிடப்பெயர்களுடன் இணைந்து தோன்றும் உறவுமுறைச் சொற்கள் தொல் திராவிட மொழிப் பண்பாகும் என்று கூறுவார் எமினோ ( 1953:123 ). இவ்வகை உறவுமுறைச் சொற்கள் கோதா, கொலாமி, கூவி, கொண்டி, குறுக் ஆகிய மொழிகளில் காணப்படுகின்றன. இவ்வாறு மூவிடப் பெயர்களைச் சேர்த்து வழங்கும் சொற்கள் தமிழ் கிளை மொழிகள் சிலவற்றில் காணப்படுவதாகக் ராஜா ( 1972:128 ) கூறுவார். இப் பண்புகள் தொல் திராவிட மொழியிலிருந்து வந்தவையாகக் கருத இடமுண்டு என்று கூறும் அவர் உடைமை உறவுமுறைப் பெயர்களாக வரும் உறவுமுறைச் சொற்கள் எல்லாம் உயிர் எழுத்துக்களை முதலாகக் கொண்டு வருவன என்றும் அவ்வாறு வராமல் உறவுமுறைச் சொற்கள் மெய்யெழுத்துக் களுடன் வந்தால் இடப்பெயரும் உறவுமுறைப் பெயரும் எம்மாற்றமும் இன்றிப் பயன்படுத்தப்படும் என்றும் விளக்குவார்.

எம்முறையில் சொற்பகுப்பாய்வு செய்யப் படினும் மூவிடப் பெயர்களைத் தாங்கி ஒரே சொல்லாகத் தோன்றும் இவற்றைத் தொல் திராவிடமொழிப் பண்புக்கூறுகள் எனக் கொள்ளலாம். இப்பண்பு தாய் தந்தையரைக் குறிக்கும் சொற்களில் மட்டுமின்றி சங்கத்தமிழில் சகோதர சகோதரியைக் குறிக்கும் சில சொற்களுக்கு விரிவு பெற்றுள்ளது. இச்சொற்களின் பயன்பாடு இடைக்காலத்தில் குறைந்து, தற்கால எழுத்து வழக்கில் முற்றிலும் வழக்கிழந்து உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

எம் + தந்தை ⟶ எந்தை — என்/எங்கள் தந்தை
நும் + தந்தை ⟶ நுந்தை — உன்/உங்கள் தந்தை
தம் + ( த் ) ( ந் ) தை ⟶ தந்தை — 'அவன்/அவள் அவர் தந்தை'

## 3.2. தாயைக் குறிக்கும் சொற்கள்

அன்னையைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் சொற்களில் ஞாய், யாய், தாய், அஞ்ஞை, அன்னை, அம்பா என்பன அடிப்படையில் உறவுமுறைச் சொற்கள். ஈன்றாள்/ ஈன்றோள், பயந்தோள் என்பன தாயைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் பிற சொற்கள். இவற்றுள் ஞாய், யாய், தாய் என்பன பயன்பாட்டெல்லையுடையன. இவை எந்தை, நுந்தை என்ற சொற்களைப் போன்று எளிதாகப் பிரித்தறிய இயலாத வண்ணம் தனிச்சொல் போல் தோற்றமளிக்கின்றன.

அன்னையைக் குறிக்கும் சொற்களில் அன்னை, யாய், ஞாய் என்பன பெரும் வழக்கிலுள்ளன. யாய் 62 இடங்களிலும், தாய் 53 இடங்களிலும் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

### 3.2.1. ஞாய்

'ஞாய்' எனும் சொல் 'உன்தாய்' என்ற பொருளில் 3 இடங்களில் சங்கத்தமிழில் பயின்று வந்துள்ளது.

யாயும், ஞாயும் யாராகியரோ ( குறு.40:1 )
ஞாயையும் அஞ்சுதியாயின் ( கலி.107:26 )
நுந்தையும், ஞாயும் கடியரோ நின்னை ( ஐங்.98-4 )

என்ற அடிகளில் 'ஞாய்' என்பது உன் தாய் என்ற பொருளைத் தந்து நிற்கிறது. இச்சொல்லின் அடியாக எழுந்த ஞாயர் எனும் சொல் 3 இடங்களில் காணப்படுகிறது.

ஞாயர்பால் உண்டி சில ( கலி.85:28 )
ஞாயர் மாட்டைப்பால் ( கலி.85:36 )

ஞாய் பெரும்பான்மையான இடங்களில் எம் தாய் எனப் பொருள்பெற்றே நிற்கின்றது. இச்சொல் அதிகமாகத் தலைவியின் தாயைக் குறித்துப் பயன்படுத்தப் பெற்றுள்ளது. தோழி, தலைவனிடம் தலைவியை முன்னிறுத்தி எம் தாய் எனக் குறிக்கும் பாடல்களும் உள்ளன. இச்சொல் உறவு முறையைக் குறியாது தோழி தலைவியைப் பார்த்துத் தாய் எம்பெருமாட்டி என அழைப்பது போன்று ஐங்குறுநூற்றில் 10 பாடல்களில் காணப்படுகின்றது.

### 3.2.2. யாய்

யான் யாய் அஞ்சுவல் எனினும் தானே ( நற்.72:6 )
வாரற்க தில்ல வருகுவள் யாயே ( குறு.198:8 )
யாயும் ஆயமோடு அயரும் நீயும் ( அகம்.240:9 )
வேட்டோளே யாயே யாமே ( ஐங்.10:3 )
( எம்பெருமாட்டி )

### 3.2.3. தாய்

தாய் என்னும் உறவுமுறைச்சொல் சங்க இலக்கியத்தில் 53 இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது என்று முன்னர்க் கண்டோம். தலைவன், தலைவி, புதல்வன் ஆகியோரின் தாயைக் குறிக்கும் வகையிலே படர்க்கையிடத்தில் 4 இடங்களில் காணப்படுகிறது. ஓரிடத்தில் செவிலித்தாயையும், மீதமுள்ள 9 இடங்களில் பறவை, விலங்குகளின் ஈன்ற பெண்ணினத்தையும் குறிக்கப் பயன்பெற்றுள்ளது. எனவே, இச்சொல் அடிப்படை உறவுமுறைப் பொருளிலிருந்து பொருள் விரிவு பெற்றுத் தாய்க்கு இணையான செவிலியையும் குஞ்சு, குட்டிகளை ஈன்ற பறவை/விலங்கு போன்ற அஃறிணைப் பொருளுக்கும் பொருள்விரிவு பெற்றுள்ளது. இச்சொல் "ஈன்ற தாயை மட்டுமே குறித்துத் தோன்றியதென்றாலும், படிப்படியாக ஊட்டும் தாயையும், முலைத்தாயையும் செவிலித் தாயையும் குறித்து வழங்கத் தலைப்பட்டது" என்ற அருளி ( 1989:76 ) அவர்களின் கூற்று குறிப்பிடத்தக்கது.

**தாய்**

தன் திறம் பெறுக இவள் ஈன்ற தாயே ( நற்.8:10 )
மறுவரும் சிறுவன் தாயே ( குறு.45:4 )
பொய்வல் காளையை ஈன்ற தாய்க்கே ( ஐங்.399:5 )

**செவிலி**

யானும், தாயும் மடுப்பத்தேனோடு (நற்.179:5)

**விலங்கு/பறவை**

தாய்காண விருப்பினன்
சாஅய் நோக்கினனே .... (குறு.132:56)
தாயின் முட்டை போலவுட்கிடந்து (குறு.152:2)

தாயம்மாள் அறவாணன் (1987:87) தாய், யாய், ஞாய் என்ற சொற்களைப் பின்வருமாறு பிரித்துக் காட்டுவார்.

த் + ஆய் ⟶ தாய்
ஞ் + ஆய் ⟶ ஞாய்
ய் + ஆய் ⟶ யாய்

இவர் கருத்துப்படி ஆய் என்ற சொல்லே தாயைக் குறிக்கும் சொல்லாகும். த், ஞ், ய் என்பன முறையே தனது, உனது, எனது எனப் பொருள்பட்டும் நிற்கும் இடைச்சொற்கள் ஆகும்.

தந்தை என்ற சொல்லைப் போல தாய் என்ற சொல்லையும் தா + ஆய் எனப் பகுத்துத் 'தா' என்பது தம்மைப் பிறப்பித்து உலகிற்குத் தந்தவள் என்ற பொருளில் தா + ஆய் ⟶ தாய் வளர்ந்தது என்பார் அருளி (1989:79). ஞாய் என்ற சொல்லுக்கு 'நின்தாய்' என்னும் பொருள் இதன் மூலக்கருவில் இல்லை என்றும் இச்சொல் யாய் (யா + ஆய்) என்பதின் அடியாகத் தோன்றிய மாற்று வடிவம் என்றும் கருதுவார் அருளி (1989:68). என் தாய் என்னும் ஒரே பொருளடியாகத் தோன்றிய இச்சொல் காலவட்டத்தில் முன்னிலையைக் குறிக்கும் எனவும் கொள்வார்.

தாயைக் குறித்து வழங்கிய மிகமுது தொடக்கப் பழஞ்சொல் ஆய். இது பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பதிவெய்தவில்லை என்றும், இச்சொல்லிலிருந்தே தாய், ஞாய், யாய் என்பன வளர்ச்சியுற்றன என்பார் அருளி.

ஆய் தா + ஆய் ⟶ தாய்
யா + ஆய் ⟶ யாய்
ஞா + ஆய் ⟶ ஞாய்

கால்டுவெல் (1836:395) தாய் என்ற சொல்லை தா + ஆ எனக்கொண்டு 'தா' என்பது தம் என்ற சொல்லின் அடியாக

எழுந்தது என்றும், 'ஆயி' என்பது 'ஆ' என்ற பழந்தமிழ் சொல் வடிவம் என்றும் விளக்கிக் காட்டுவார்.

எமினோ ( 1967 ) ஞாய் என்ற சொல்லின் அடிச் சொல் பற்றிய வெவ்வேறு கருத்துக்களை விளக்கி யாய்→ஆய் ஆகியது என்று காட்டுவார். மேலும் யூல்ஸ்பிளாக் ஞாய் என்பதிலுள்ள 'ஞ', 'நீ' என்பதுடன் தொடர்புடையது என்று கருதுவதாகக் கூறுவார். எமினோ கருத்துப்படி 'ஞாய்' என்பது ஒரு வேறுபட்ட சொல்லாகும்.

### 3.2.4. அன்னை

தாயைக் குறிக்கும் சொற்களில் மிக அதிகமாகப் பயன்படுத்தப்படும் சொல் அன்னை என்ற சொல்லாகும். இச்சொல் எந்தப் பயன்பாட்டு எல்லையையும் கொண்டிராமல் தன்மை, பன்மை, படர்க்கை ஆகிய மூன்று இடங்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்களில் காணலாம்:

ஆனாது புகழும் அன்னை ( புறம்.254:10 )
அன்னை அறியின் ( நின்தாய் ) ( நற்.4:3 )
( நம்தாய் )

எந்தை வந்துரைத்தனன் ஆக அன்னையும் ( நற்.206:6 )

அன்னை என்ற சொல் நீட்டம் பெற்று, அன்னாய் என விளிப் பெயராய்ச் சங்க நூற்களில் அதிகம் பயன்படுத்தப்படுகிறது.

அன்னை எனும் சொல் ஆய் எனும் மூலச் சொல்லில் இருந்து தோன்றியது எனப் பின்வருமாறு அருளி ( ப.83 ) விளக்கம் தருவார்.

ஆய் > அய் + ஐ ⟶ அய்யை
அய்யை > அஞ்ஞை ( ய > ஞ )
அஞ்ஞை > அன்னை ( ஞ < ன )

கால்டுவெல் ( 1856:613 ) அன்னை என்ற சொல்லை அன் ( ன் ) +ஐ எனக் கருதுவார். அன் என்பது /ம்/ என்பதன் அடியாக எழுந்தது என்றும் விளக்குவார்.

### 3.2.5. அஞ்ஞை

அஞ்ஞை எனும் சொல் தாயைக் குறிக்கும் சொல். இச்சொல், சங்க இலக்கியத்தில் இரண்டு இடங்களில் பயன் படுத்தப்பட்டுள்ளது. இவ்விரண்டு இடங்களிலும் தாய் தன்

மகளை அன்பு மிகுதியால் விளிப்பது போன்று விளிப் பெயராகவே பயன்படுகிறது.

மென்றோள் அஞ்ஞை சென்ற ஆறே ( அகம்.15-19 )

அமர்க்கண் அஞ்ஞையை யலைத்த கையே
( அகம்.145-22 )

இப்பாடல் அடிகளுக்கு உரையாசிரியர்கள் அன்பு மிகுதியால் தாய் மகளை 'அஞ்ஞை' என்று அழைப்பாள் என்பர். தற்காலத்தில் பெற்றோர், குழந்தைகளை அப்பா, அம்மா என்று அன்புடன் அழைப்பது ஒப்பு நோக்கத்தக்கது.

### 3.2.6. அம்பா

தாயைக் குறிக்கச் சங்க இலக்கியத்தில் பயன்படும் மற்றொரு சொல் 'அம்பா' ஆகும். கால்டுவெல் ( 1856:13 ) இச்சொல் ஒரு திராவிடச் சொல் எனக் காட்டுவார். இச்சொல் அம்பாவாடல் ( அம்பா + ஆடல் ) என்ற தொடரின் பிழைப் பிரிப்பால் ஏற்பட்டதாகும் என்பார் அருளி ( 1989:57 ). அவர் கருத்துப்படி 'அம்பாவை ஆடல்' என்ற தொடரே குறுகி அம்பாவாடல் ஆனது.

அம்பாவை ஆடல் → அம்பாவையாடல் → அம்பாவாடல்
→ அம்பா ஆடல்

வெம்பா நாக வியலில் வரைப்பென
அம்பா வாடலினாய் தொடிக் கன்னியர் ( பரி.11-81 )

என்ற அடிக்கு உரையாசிரியர் தாயொடு ஆடுதல் என அம்பா என்பதற்குத் தாய் எனக் குறிப்பிட்டுச் சொல்வர் என்பது அருளியின் கருத்து. தமிழ்ப் பேரகராதி இச்சொல்லை Amba என்ற வடமொழிச் சொல்லின் தமிழ்ச் சொல்லாகக் கொள்ளும்.

### 3.2.7. ஈன்றோர்-ஈன்றாள்-பயந்தோள்

மேற்கண்ட சொற்களைத் தவிர ஈன்றோள், ஈன்றாள், பயந்தோள் என்னும் சொற்களும் தாயைக் குறிக்கச் சில நூல்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. இச்சொற்கள் ஈனுதல், பயத்தல் என்ற வினைகளின் அடியாய்ப் பொருள் சிறப்புற்று நிற்கின்றன.

தாயைக் குறிக்கும் சொற்களில் 'ஆ' அல்லது 'அ' எனும் எழுத்துகள் அடிச்சொல்லாக நிற்பதால் இச்சொற்கள் பெரும்பாலும் ஒன்றிற்கு ஒன்று மூலத் திராவிட மொழியுடன்

தொடர்புடையனவாக இருந்திருக்க வேண்டும். மூலத் திராவிட மொழியின் பண்பான உடைமை உறவுமுறையை அடியொற்றி ஞாய், யாய், தாய் என்பனவும் பிற சொற்களும் பொதுப்பொருள் அடிப்படையிலும் வளர்ந்திருக்க வேண்டும். வரலாற்று நிலையில் பெரும்பான்மையான சொற்கள் வழக்கிழந்து தற்காலத்தில் தாய், அன்னை என்ற சொற்கள் மட்டும் எழுத்து வழக்கில் நிலைத்திருக்கின்றன. ஞாய், யாய் என்பன போன்ற உடைமை உறவுமுறைச் சொற்கள் இன்றும் பல்வேறு வட்டாரங்களில் பேச்சு வழக்காகப் பயன்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

மேற்கண்ட கருத்துக்களின் அடிப்படையில் பின்வருவனவற்றைத் தொகுத்து வழங்கலாம்:

* சங்க நூற்களில் பெற்றோரைக் குறிக்கத் தனி உறவுமுறைச் சொற்களும் முன்னொட்டு உறவுமுறைச் சொற்களும் வழக்கிலுள்ளன.

* யாய், ஞாய், எந்தை, நுந்தை எனும் சொற்கள் முன்னொட்டு உறவுமுறைச் சொற்களாகும்.

* புறந்தருதல் எனும் பொதுப்பொருளைக் கொண்ட சில சொற்கள் தாய் எனும் உறவுமுறையைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

* முதன்மை பெற்றவன் எனும் பொருளைக் கொண்ட சில பொதுச் சொற்கள் தந்தையைக் குறிக்கப் பொருள்விரிவு பெற்றுள்ளன.

* ஐ எனும் சொல் ஒன்றிற்கு மேற்பட்ட உறவுமுறைகளைக் குறித்து நிற்கின்றது.

# 4. கணவன்-மனைவி உறவுமுறையும் உறவுமுறைச் சொற்களும்

## 4.0. முன்னுரை

கணவன்-மனைவி என்னும் உறவுமுறை எல்லாத் தலைமுறைகளிலும் காணப்படும் ஓர் உறவுமுறையாகும். எடுத்துக்காட்டாகத் தனியனின் பாட்டன்-பாட்டி தலைமுறை (தமு+3), தாத்தா-ஆச்சி தலைமுறை (தமு+2), தந்தை-தாய் தலைமுறை (தமு+1), தனியன் தலைமுறை (தமு-0), தனியனின் பிள்ளைகள் தலைமுறை (தமு-1), பேரன்/பேத்தி தலைமுறை (தமு-2) எனப் பல்வேறு தலை முறைகளில் இவ்வுறவு இடம்பெறுகின்றது. இவ்வுறவு மூலம் தனியனின் முன், பின் தலைமுறைகளில் பல உயர்/கிடைநிலை உறவுகள் உருவாக்கம் பெறுகின்றன. பிற உறவுமுறைகளைப் போன்று பரம்பரை பரம்பரையாக நிலைபெற்றுத் தொடர்ந்து வராமல் தலைமுறைகளில் அவ்வப்போது ஏற்பட்டுப் பல்வேறு உறவுமுறைகளைத் தந்து நிற்கும் தன்மை கொண்டது இவ்வுறவுமுறையாகும். பெற்றோர் உறவுமுறையை எடுத்துக் கொண்டால் தந்தைக்குத் தாய் மனைவி உறவையும் தாய்க்குத் தந்தை கணவன் உறவையும் தருகின்றனர்.

சங்க இலக்கியத்தில் அகப்பொருள் பற்றிய பாடல்களில் கணவன்-மனைவி பற்றிய செய்திகள் பரவலாகக் காணக்கிடைக்கின்றன (காண்க: 2.12). சங்க நூற்களில் தலைவன்-தலைவியின் அகவாழ்க்கையில் இடம்பெறும் சுவையான செய்திகளைக் கூறும்பொழுது கணவன்-மனைவி பற்றிய செய்திகளும் கணவன்-மனைவிக்குரிய பல உறவுமுறைச் சொற்களும் இடம்பெறுகின்றன. அகப்பொருளில் களவை அடுத்துத் திருமணம் நடந்து தலைவனும் தலைவியும் கற்பு வழியில் வாழ முற்படும் பொழுதும் கணவன்-மனைவி உறவு பற்றிய செய்திகள் சங்க நூற்களில் காணக் கிடைக்கின்றன.

### 4.0.1. தொல்காப்பியத்தில் கணவன்-மனைவி குறித்த சொற்கள்

தொல்காப்பியத்தில் கணவன்-மனைவியைக் குறிக்கப் பல சொற்கள் கையாளப் பெற்றுள்ளன. இச்சொற்கள் பொருளதிகாரத்தில் பெரும்பாலும் அகத்திணை இயல் செய்திகளைக் கூறும் நிலையில் இடம்பெற்றுள்ளன. கணவனைக் குறிக்க நான்கு சொற்களும் மனைவியைக் குறிக்க ஏழு சொற்களும் தொல்காப்பியத்தில் வழங்கப்பெற்றுள்ளன. தொல்காப்பியத்தில் இடம்பெறும் இச்சொற்கள் பின்வருவன:

கணவன் → 1. கணவன்/கணவர் 2. கிழவன் 3. கிழவோன் 4. கொண்டோன்

மனைவி → 1. மனைவி 2. மனையோள் 3. மனைக்கிழத்தி 4. காதலி 5. நல்லோள் 6. கிழத்தி 7. கிழவோள்

கிழ எனும் சொல்லை அடிச்சொல்லாகக் கொண்டு கிழவன், கிழவோன், கிழத்தி, கிழவோள் எனும் சொற்கள் ஆக்கப் பெற்றுள்ளன.




தொல்காப்பியத்தில் பயின்றுவரும் உறவுமுறைச் சொற்களில் கணவன்/கணவர், மனைவி ( மனையோள், மனைக்கிழத்தி ) எனும் சொற்களே அடிப்படையில் உறவுமுறைச் சொற்களாக உள்ளன என்பது இவண் சிறப்பாக நோக்கத்தக்கது. கணவன், மனைவி எனும் இரு சொற்களும் பிற உறவுமுறைச் சொற்களைப் போன்று பொருள் விரிவு பெற்றுப் பிற பொருள்களில் பயன்படுவதில்லை. அதாவது உறவல்லாத பிற பொருள்களில் பயன்படுத்தப்படுவதில்லை. இதற்குக் காரணம் இவ்விரு சொற்களும் ஒரு சமுதாயக்கட்டுடன் பயன்பாட்டு வரையறையைக் கொண்டு வழங்கப்படுவனவாகும்.

### 4.0.2. நிகண்டுகளில் கணவன்-மனைவி குறித்த சொற்கள்

நிகண்டுகளில் கணவன்-மனைவியைக் குறிக்கப் பல சொற்கள் பட்டியலிடப்பெற்றுள்ளன. பிங்கலநிகண்டில் கணவனைக் குறிக்கப் பதினாறு சொற்களும் மனைவியைக்

குறிக்க ஏழு சொற்களும் தரப்பெற்றுள்ளன. இச்சொற்கள் பற்றிய செய்திகள் அவ்வப் பகுதிகளில் இடம்பெற்றுள்ளன (காண்க: 4.1, 4.2).

## 4.1. கணவன் உறவுமுறை

முன்னர்க் குறிப்பிட்டதுபோல் கணவன் எனும் உறவு முறை ஒரு தலைமுறைக்குரியது அன்று. கணவன் உறவுமுறை மூலம் பெண் தனியனுக்குப் பல உயர், கிடைநிலை உறவுகள் தோற்றம் பெறுகின்றன. இவ்வுறவு முறையைக் குறிக்க இரண்டு வகைச் சொற்களும் பயன்படுத்தப் பெற்றுள்ளன. கணவன்உறவுமுறையைக் குறிக்கப் பிங்கல நிகண்டில் பதினாறு சொற்கள் தரப்பெற்றுள்ளன. அவை:

1. கணவன் 2. கொழுநன் 3. காந்தன் 4 . கேள்வன்
5. மணமகன் 6. காதலன் 7. வல்லவன் 8. உரியோன்
9. பதி 10. தவன் 11. கொண்கன் 12. பத்தா
13. தலைமகன் 14. துணைவன் 15. தலைவன்
16. மணவாளன் (பிங். 916)

மேற்காணும் சொற்களில் அடிப்படையில் உறவுமுறைச் சொற்களாகக் காணப்படுபவை வகை ஒன்றிற்குரிய கணவன், கொழுநன் எனும் சொற்களாகும். 'காந்தன்', 'பதி', 'பத்தா' (< பர்த்தா) என்பன பிறமொழிச் சொற்கள். இவை இடைக்கால இலக்கியங்களில் வழக்குப் பெற்றுள்ளதைத் தமிழ்ப் பேரகராதியில் இடம்பெற்றுள்ள மேற்கோள்களின் வழிக் காண இயலும்.

கணவன் உறவுமுறையைக் குறிக்கப் பயன்படுத்தப் பெறும் கணவன், கொழுநன் எனும் சொற்களின் சிறப்பைத் தாயம்மாள் அறவாணன் (1987:133-35) பின்வருமாறு விளக்குவார்:

> "குடும்பத்தில் தலைமை வாய்ந்தவன் தலைவன். முதன்மை உடையவனும் குடும்பத்தை வழிநடத்திச் செல்பவனும் அவனே... பெண் கொடி போன்றவள். அவள் படர அமைந்த கொம்பே கொழுநன் பெண்ணைக் கொண்டவன் கொள்ளுநன் கொளுநன் கொள்நன் கொழுநன்... கொள்நன் என்றால் கொள்ளுபவன் அல்லது பெண்

கொள்ளுதலை; பெண்ணைப் பொருந்து-
தலைச் செய்பவன்"

என்றும்,

"பெண் முழுச் சமத்துவம் பெறா நாளில்
உலகையும் மணவாளனின் கண்வழியே
அவள் காண்பாள் என்பதையே
இச்சொற்கள் (கணவன், கொழுநன்)
விளக்குகின்றன"

என்றும் விளக்கம் அளிப்பார். மேற்கண்ட சொற்களைத் தவிரக் கொண்டோன், அடிகள், நாயகன், கிழவன், கேள்வன், காதலன், காந்தன், காவலன், அன்பன், வரன், மணமகன், கண்ணாளன், துணைவன், மகிழ்நன், அத்தான், மச்சான், மைத்துனன் எனும் சொற்களின் சொற்பொருள் சிறப்பைச் சமுதாயக் கூறுகளின் அடிப்படையில் விளக்கும் அவர், அவை கணவனைக் குறித்துக் கையாளப்படும் பாங்கினையும் எடுத்துரைப்பார்.

பிங்கல நிகண்டில் குறிப்பிடப்பெற்றவற்றுள் காந்தன், மணமகன், வல்லவன், உரியோன், பதி, தவன், கொண்கன், பத்தா, மணவாளன் என்பன சங்க நூற்களில் வழக்கில் இல்லை. எனினும் முன்னர்க் குறிப்பிட்டதுபோல் இவற்றுள் பல சொற்கள் பிற்கால இலக்கியங்களில் வழக்கிலுள்ளன.

சங்க நூற்களில் கணவனைக் குறிக்க இரு வகைகளிலுமாக மொத்தம் பத்தொன்பது சொற்கள் பயன்படுத்தப் பெற்றுள்ளன. அவை:

1. அண்ணல்
2. ஆடவர்
3. ஆள்
4. உரிமை மைந்தர்
5. ஐ
6. ஐயர்
7. கணவன்/கணவர்
8. காதலன்
9. கிழவன்
10. கேள்
11. கேள்வன்/கேள்வர்
12. கொழுநன்/கொழுநர்
13. சிறந்தான்
14. செல்வன்
15. துணை
16. துணைவன்
17. பெற்றார்
18. மகிழ்நன்
19. மைந்தன்/மைந்தர்

மேற்காணும் பத்தொன்பது சொற்களையும் வகை வாரியாகப் பகுத்துக் காணின் அவை பின்வருமாறு அமைகின்றன:

| வகை-1 | வகை-2 |
| --- | --- |
| 1. கணவன்/கணவர் | பிற சொற்கள் |
| 2. கொழுநன்/கொழுநர் | |

வகை ஒன்றிற்குரிய சொற்கள் அடிப்படையில் உறவுமுறைச் சொற்களாக அமைந்து உறவுமுறையை மட்டும் குறித்து வழங்கப் பெற்றுள்ளன. வகை இரண்டிற்குரிய சொற்கள் பொதுப் பொருள் சொற்களாக அமைந்து பொருள் விரிவு பெற்று உறவுமுறையைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. கணவனைக் குறிக்க வழங்கப்பெறும் சொற்களில் பெரும்-பான்மையானவை மிகக் குறைவான இடங்களிலேயே பயின்று வருகின்றன. முதல்வகைச் சொற்கள் விளிப்பொருளில் கையாளப் பெறும் தன்மை உடையன.

### 4.1.1. கணவன்/கணவர்

கணவன் உறவைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்களில் கணவன் என்ற சொல்லே பெருவழக்குச் சொல்லாக உள்ளது. இச்சொல் சங்க நூற்களில் இருபத்தொன்பது இடங்களில் பயன்பெற்றுள்ளது. இவற்றில் பதின்மூன்று இடங்களில் இச்சொல் விளிப்பொருளில் வந்துள்ளது. இரண்டு இடங்களில் -அர் விகுதி பெற்றுக் காணப் படுகின்றது. பின்வரும் எடுத்துக்காட்டுகளில் கணவன் எனும் சொல்லின் சங்க இலக்கியப் பயன்பாட்டைக் காணலாம்:

ஒலியிருங் கதுப்பின் ஆயிழை கணவன் ( புறம்.138-8 )
பாவை அன்ன நல்லோள் கணவன் ( பதி.61-4 )
நீயாகியர் என் கணவனை ( குறு.49-4 )
நறுநுதல் சேயிழை கணவ ( பதி.65-10 )
....... புரையோள் கணவ ( பதி.70-16 )
கணவர் உவப்ப புதல்வர் பயந்து ( மது. 600 )
தாம் வேண்டு காதல் கணவர் எதிர்ப்பட
( பரி.10-35 )

பெரும்பான்மையான இடங்களில் இச்சொல் அன்மொழித் தொகையுடன் பயன்படுத்தப்பெற்றுள்ளது.

ஆயிழை ------- கணவன்
நல்லோள் ------ கணவன்
புரையோள் ------ கணவ

பொருள் விரிவு ( மனிதன் - விலங்கு/பறவை )

மனித இனத்திற்கு மட்டுமே உள்ள கணவன் உறவுக்குரிய இச்சொல் விலங்குகளில் ஆண் விலங்கையும் பறவைகளில் ஆண் பறவையையும் குறித்துப் பொருள் விரிவு பெற்றுள்ளது. இருபத்தொன்பது இடங்களில் வரும் இச்சொல் ஐந்து இடங்களில் மேற்கண்டவாறு பொருள் விரிவு பெற்றுள்ளது.

பொருள் விரிவு

கணவன் = மனித உறவு ⟶ ⟶ விலங்கு/பறவை

ஆண்-பெண் உறவு

பின்வரும் எடுத்துக்காட்டுகளில் இப்பொருள் விரிவைக் காணலாம்:

ஆண் யானை ( களிறு )

வலிக்கு வரம்பாகிய கணவனோம்பு ( மலை.308 )

ஆண் குரங்கு ( கடுவன் )

மந்திக் கணவன் கல்லாக் கடுவ ( ஐங்.274.1 )

ஆண் செந்நாய்

மாயா வேட்டம் போகிய கணவன் ( நற்.103-7 )

ஆண் ஆமை

கணவன் ஓம்பும் கானல் அம் சேர்ப்பன் ( அகம்.160.8 )

சேவல் ( வங்கா )

..... ..... கணவற் காணாது

மனித இனத்திற்கு மட்டுமே உரிய கணவன்-மனைவி உறவை அதன் தூய்மை கருதி மனித இனம் அல்லாத, கட்டுப்பாடற்ற ஆண் விலங்கு/பறவைகளுக்கும் விரிவுபடுத்தும் வழக்கம் சங்க காலத்தில் நிலவியுள்ளதை இவ்வெடுத்துக்காட்டுகள் எடுத்தியம்புகின்றன.

கணவன் எனும் சொல் பிற திராவிட மொழிகளிலும் காணப்படுவதை எமினோ மற்றும் பர்ரோவின் திராவிட சொற்பிறப்பு அகராதி ( DED ) மூலம் தெரிந்து கொள்ள இயலும். தமிழ்ப் பேரகராதியில் கணவன் என்ற சொல்லுக்குக் கொழுநன் என்ற பொருள் மட்டும் தரப்பட்டுள்ளது.

கணவன் *kaṇavaṉ n.prob.* கண் *[M. kaṇavan] Husband;* கொழுநன்

### 4.1.2. கொழுநன்/கொழுநர்

கணவன் எனும் சொல்லை அடுத்துச் சங்க நூற்களில் அதிகம் பயன்படுத்தப்படும் சொல் 'கொழுநன்' எனும் சொல்லாகும். இச்சொல்லின் அடியாய்க் கொழுநர் என்ற சொல்லும் ஆக்கம் பெற்றுள்ளது. 'கொழுநன்' பத்து இடங்களிலும் 'கொழுநர்' நான்கு இடங்களிலும் வழக்கிலுள்ளன.

தமிழ்ப் பேரகராதி கொழுநன் எனும் சொல்லுக்குக் கணவன், இறைவன் என்ற இரு பொருள்களைத் தந்துள்ளது. இறைவன் எனும் பொருள் சங்க இலக்கியத்தில் காணப்பட வில்லை. கொழுநன் எனும் சொல்லின் சிறப்பைத் தாயம்மாள் அறவாணன் பண்பாட்டுடன் இணைத்து விளக்கியுள்ளதை முன்னர்க் கண்டோம் ( காண்க: 4.1 ). பின்வரும் எடுத்துக் காட்டுகளில் கொழுநன் எனும் சொல்லின் உறவுமுறைப் பொருளைக் காணலாம்:

> கொண்ட கொழுநன் குடி வறன் உற்றென
> ( நற்.110-10 )
>
> கொழுநற் காணிய வரும் ( குறு.293-8 )
>
> கொடுவரி பாய்ந்தென கொழுநர் மார்பில்
> ( மலை.302 )

தற்காலத்தில் கொழுநன் எனும் சொல் கொழுந்தன் கொழுந்தி என மாற்றம் பெற்று முறையே கணவனுடன் பிறந்த இளைய சகோதரனையும் மனைவியுடன் பிறந்த இளைய -சகோதரியையும் குறிக்கப் பயன்பெற்று வருகின்றது. கொழுநன் விளிப் பொருளில் கையாளப்பட்டதற்கான சான்றுகளைச் சங்க நூற்களில் காண இயலவில்லை.

## வகை-2. சொற்கள்

சொல் வகை இரண்டிற்குச் சங்க நூற்களில் பதினேழு சொற்கள் காணப்படுகின்றன. அவை:

1. அண்ணல்
2. ஆடவர்
3. ஆள்
4. உரிமை மாந்தர்
5. ஐ
6. ஐயர்
7. காதலன்
8. கிழவன்
9. கேள்
10. கேள்வன்/கேள்வர்
11. சிறந்தான்
12. செல்வன்
13. துணை
14. துணைவன்
15. பெற்றார்
16. மகிழ்நன்
17. மைந்தன்/மைந்தர்

மேற்கண்ட சொற்கள் பொதுநிலையில் ஒரு பொதுப் பொருளைக் குறித்து நிற்பினும், சிறப்பாக உறவுமுறைப் பொருளிலும் ஆங்காங்கே வழக்கிலுள்ளன. மேற்காணும் பதினேழு சொற்களில் அண்ணல், ஆடவர், ஆள், பெற்றார் செல்வன் என்பன தலா ஓரிடத்தில் மட்டும் பயன்படுத்தப் பெற்றுள்ளன. பிற சொற்கள் வகை-ஒன்று சொற்களைப் போன்று அதிகமாகப் பயன்படுத்தப்படவில்லை எனினும் இச்சொற்களின் உறவுமுறைப் பொருளை மொழிச் சூழல்களின் வழி தெரிந்துகொள்வதற்கு ஏற்ற வரவிடங்களைக் கொண்டுள்ளன.

மேற்காணும் பதினேழு சொற்களையும் ஒன்றன்பின் ஒன்றாகக் காண்போம்:

### 4.1.3. அண்ணல் ( தலைமை/பெருமை ⟶ கணவன் )

அண்ணல் எனும் சொல்லுக்குத் தமிழ்ப் பேரகராதியில் ஆறு பொருள்கள் தரப்பெற்றுள்ளன. அவை:

அண்ணல் ⟶ 1. பெருமை 2. தலைமை 3. அரசன்
4. பெருமையில் சிறந்தோன்
5. முல்லை நிலத் தலைவன் 6. கடவுள்

இச்சொல்லின் அடிப்படைப் பொருள் 'தலைமை' என்பதாகும். இப்பொருளிலிருந்தே பிற பொருள்கள் விரிவு பெற்றுள்ளன. 'தலைமைத் தன்மையுடைய அவர்' என்ற

சூழல் பொருள் மூலம் கணவன் என்ற உறவுமுறைப் பொருள் எழுந்துள்ளது.

அண்ணல் → தலைமை → தலைமைத்தன்மை → கணவன்
தலைமை ↓ பெருமை → பெருமைத்தன்மை → கணவன்

பின்வரும் பரிபாடல் அடியில் இச்சொல்லின் வரவைக் காணலாம்.

திகழ் கடுங் கடாக் களிற்று அண்ணல் அவரொடு
( பரி.திர.1.62 )

'ஆண் யானை போன்ற தலைமைத் தன்மையுடைய தத்தம் கணவன்மாரோடு கூடி' என்பது இவ்வடியின் உரைப் பொருளாகும். இச்சொல் ஓரிடத்தில் மட்டும் பயின்று வந்துள்ளது.

### 4.1.4. ஆடவர் ( ஆண் தன்மை —— கணவன் )

ஆண் என்ற பொருளைக் கொண்ட ஆடவர் எனும் சொல் குறுந்தொகையில் ஓரிடத்தில் கணவன் என்ற பொருளில் கையாளப் பெற்றுள்ளது.

மனை உறை மகளிர்க்கு ஆடவர் உயிரென
( குறு.135-2 )

மேற்கண்ட பாடல் அடிக்கு இல்லத்தில் வாழும் மகளிருக்கு அவருடைய கணவனே உயிர் என்பது பொருளாகும். இச் சொல்லின் பொருள்விரிவைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்:

ஆடவர் → ஆண்மகன் → கணவன்

( மொழிச் சூழல் = மனைஉறை மகளிர் )

### 4.1.5. ஆள் ( ஆண்தன்மை —— கணவன் )

ஆடவர் என்ற சொல்லைப் போன்று ஆள் என்ற சொல்லும் கணவரைக் குறித்து நற்றிணையில் ஓரிடத்தில் பயன்பாட்டில் உள்ளது.

ஆளில் பெண்டிர் தாளின் செய்த ( நற்.353-1 )

ஆளில் பெண்டிர் ( ஆள் + இல் + பெண்டிர் ) எனும் தொகைச் சொல்லுக்குக் 'கணவன் இல்லாத மகளிர்' என்பது

நேர்பொருளாகும். இத்தொகைச் சொல்லுக்குக் கைம்பெண் என்பது குறிப்புப் பொருளாகும்.

### 4.1.6. உரிமை மைந்தர் ( உரிமை + மைந்தர் )

உரிமை மைந்தர் எனும் தொகைச் சொல் பரிபாடலில் ஓரிடத்தில் கணவனைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

மணி அணிந்த தம் உரிமை மைந்த ரோடுஆடி
( பரி.தி.2-49 )

மகளிர் மணிகள் அணிந்த தம் கணவரோடு கூடி என்பது இவ்வடியின் பொருளாகும்.

### 4.1.7. ஐ ( என் + ஐ )

ஐ எனும் சொல் ஒரு பலபொருள் சொல்லாகும். இச்சொல்லுக்குத் தமிழ்ப் பேரகராதியில் பதின்மூன்று பொருள்கள் தரப்பெற்றுள்ளன. இவற்றுள் தந்தை, கணவன் எனும் இரு உறவுமுறைப் பொருள்களும் அடங்கும். சங்க நூற்களில் இச்சொல் தலைவன், வியப்பு, அழகு, அரசன், ஆசான் எனும் பொருள்களில் அதிகம் பயன்படுத்தப் பெற்றுள்ளது. இவற்றைத் தவிர தமையன் எனும் உறவுமுறையைக் குறிக்கவும் இச்சொல் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப் பெற்றுள்ளது. உறவு, நட்பு, சிறப்பு, வீரம், அன்பு எனும் பொருள்களின் அடிப்படையில் இச்சொல் பொருள் சிறப்புப் பெற்றுள்ளது.

சங்க நூற்களில் புறநானூற்றில் மூன்று இடங்களிலும் குறுந்தொகையில் இரண்டு இடங்களிலுமாக இச்சொல் ஐந்து இடங்களில் கணவனைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளது. பின்வரும் எடுத்துக்காட்டுகளில் இச்சொல்லின் பயன் பாட்டைக் காணலாம்.

என்னை மார்பில் புண்ணும் வெய்ய ( புறம்.280-1 )
( என் கணவன் மார்பில் .... )

விருந்தெதிர் பெறுகதில் யானே என்னையும்
( புறம்.306-5 )

வேந்துடன் றெறிந்த வேலே யென்னை
( புறம்.308-6 )

எனக்கும் ஆகாது என்னைக்கும் உதவாது
( குறு.27-3 )

ஓரீஇ ஒழுகும் என்னைக்கு ( குறு.203-5 )

மேற்கண்ட வருகை இடங்களை உற்றுநோக்கின் எல்லா சூழல்களிலும் இச்சொல் 'என்' எனும் தன்மை ஒருமைப் பதிலிடு பெயருடன் இணைந்து காணப்படுகின்றது.

என் + ஐ——என்னை ( என் கணவன் )

( ஒப்பு நோக்கு: எந்தை, நுந்தை )

என்னை ( என் + ஐ ) எனும் பயன்பாட்டிற்குப் பதிலாக, என் கணவன் எனும் சொல்லுடன் இணைந்து 'என் கணவனை' என்ற வழக்கும் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது.

நீ யாகியர் என் கணவனை ( குறு.49-4 )
( என் கணவனை = என்னை )

### 4.1.8. ஐயர் ( ஐ + அர் )

ஐ எனும் சொல்லின் அடியாகப் பிறந்த 'ஐயர்' எனும் சொல் கணவனைக் குறிக்கச் சங்க இலக்கியத்தில் ஓரிடத்தில் பயன்படுத்தப் பெற்றுள்ளது. மேலும் இச்சொல் சங்க நூற்களில் தமையனைக் குறித்தும் வழங்கப் பெற்றுள்ளது.

ஐயர் எனும் சொல்லின் ஆக்கத்தைப் பின்வருமாறு எழுதிக் காட்டலாம்:




'தலைமைத் தன்மைக்குரியவர்' கணவன் என்றும் அன்பிற்குரியவர் தமையன் என்றும் இச்சொற்கள் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.

தாம் பிழையார் கேள்வர்த் தொழுதெழலால்
தம்மையரும் ( கலி. 39-17 )

இப்பாடல் அடியில் இடம்பெறும் கேள்வர், தம்மையர் எனும் இரண்டு சொற்களும் கணவரைக் குறிக்கப் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

ஐ எனும் சொல்லைப் போன்று ஐயர் என்ற சொல்லும் பதிலிடு பெயருடன் இணைந்து தோன்றுகின்றது. இச்சொல் 'தம்' எனும் பன்மைப் பெயருடன் சேர்ந்து வழங்கப் பெற்றுள்ளது. என்னை, தம்மை எனும் சொற்களின் சொற்பிறப்பைப் பின்வருமாறு விளக்கலாம்:

என் + ஐ ⟶ என்னை
↓ ↑
தம் ⟶ தம்மை + அர் > தம்மையர்

### 4.1.9. காதலன் ( அன்புடையவன் ⟶ கணவன் )

காதல் எனும் சொல்லின் அடியாகக் காதலன் காதலி எனும் சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. இச்சொற்கள் சங்க நூற்களிலும் பிற்கால இலக்கியங்களிலும் காதல் தலைவரைப் பெற்ற ஆணையும் பெண்ணையும் குறிக்கப் பயன்படுத்தப் பெற்று வந்துள்ளன. எனினும் சங்க நூற்கள் சிலவற்றில் இவை கணவன், மனைவியைக் குறிக்கவும் வழங்கப் பெற்றுள்ளன.

சங்க நூற்களில் காதலன், காதலி எனும் சொற்கள் பொதுவாகத் திருமண வாழ்க்கைக்கு முன்னர்ப் பயன்படுத்தப் பட்டிருப்பின் காதலிக்கப்படுகின்ற ஆணையும் காதலிக்கப்படு கின்ற பெண்ணையும் குறித்து நிற்கின்றன. திருமணத்திற்குப் பின்னர்ப் பயன்படுத்தப்பட்டிருப்பின் அவை முறையே கணவனையும் மனைவியையும் குறித்து நிற்பதைக் காண முடியும். பின்வரும் எடுத்துக்காட்டுகளில் 'காதலன்' எனும் சொல் கணவன் எனும் பொருளில் வந்துள்ளது.

கலுழந்த கண்ணள் காதலன் கெடுத்த
ஆதி மந்தி போல் .... .... ( அகம். 236-19 )

'கணவனை இழந்த ஆதிமந்தி' என்பது இப்பாடல் அடியின் பொருளாகும்.

ஆதிமந்தி காதலற் காட்டி ( அகம். 222-10 )

எனும் அகநானூற்றுப் பாடல் அடியில் 'காதலன்' ஆதிமந்தியின் கணவனைக் குறிக்க வழங்கப் பெற்றுள்ளது.

காதலன் எனும் சொல் பிற்கால இலக்கியங்களில் சுற்றத்தாரையும் மகனையும் நண்பரையும் குறிக்க வழங்கப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| காதலர் | - | சுற்றத்தார் |
| காதலன் | - | நண்பன் |
| ” | - | மகன் |

காதலன் எனும் சொல்லின் பொருள் சிறப்பைப் பின்வருமாறு காட்டலாம்:




இச்சொல் சங்க இலக்கியத்தில் இரண்டு முறை பயின்று வந்துள்ளது.

### 4.1.10. கிழவன் ( உரியவன் → கணவன் )

கிழவன் எனும் சொல் உரியவன் எனும் பொருளில் சங்கநூற்களில் பல இடங்களில் வழங்கப் பெற்றுள்ளது. இரண்டு இடங்களில் இச்சொல் பொருள் மாற்றம் பெற்றுக் கணவனைக் குறிக்கவும் கையாளப் பெற்றுள்ளது. இதைக் கீழ்வரும் சான்றுகளின்வழி தெரிந்து கொள்ளலாம்:

<u>கிழவன்</u> சேட்புலம் படரின் ( புறம்.151-3 )

வருவிருந்தயரும் விருப்பினள் <u>கிழவனும்</u> ( புறம்.326-12 )

முதல் எடுத்துக்காட்டில் கணவன் நெடுந்தூரத்தே செல்லினும் என்ற பொருளையும், இரண்டாவது எடுத்துக்காட்டில் ‘ஒருசேர உண்பிக்கும் விருப்பமுடையவள் கணவன்’ என்ற பொருளையும் இச்சொல் பெற்றுள்ளது. இச்சொல்லின் பொருள் சிறப்பைப் பின்வருமாறு காட்டலாம்:




### 4.1.11. கேள் ( உறவு/நட்பு → கணவன் )

கேள் எனும் சொல்லிற்குத் தமிழ்ப் பேரகராதியில் 1. உறவு 2. நட்பு 3. நண்பன் 4. கணவன் என்ற நான்கு பொருள்கள் தரப்பெற்றுள்ளன. சங்க நூற்களில் இச்சொல் ஏழு பொருள்களில் வழங்கப் பெற்றுள்ளது. அவை:

கேள் 1. உறவினர் 2. உறவு 3. காதலன்
4. காதலி 5. கேண்மை 6. நண்பன்
7. தோழி

என்பனவாகும். மேற்கண்ட ஏழு பொருள்களில் காதலன் என்ற பொருளில் இச்சொல் ஐந்து இடங்களிலும்; உறவினர் என்ற பொருளில் நான்கு இடங்களிலும்; உறவு என்ற பொருளில் மூன்று இடங்களிலும்; காதலி என்ற பொருளில் இரண்டு இடங்களிலும்; கேண்மை, நண்பன், தோழி என்ற பொருள்களில் தலா ஓரிடத்திலும் பயன்படுத்தப் பெற்றுள்ளது. மேற்கண்ட பொருள்களிலிருந்து இச்சொல் இரண்டு அடிப்படைப் பொருள்களைக் கொண்டுள்ளதை உணரமுடியும்.




உறவு, நட்பு எனும் இப்பொருள்களின் அடிப்படையிலே பிற பொருள்கள் தோற்றம் பெற்றுள்ளன.




கேள் எனும் சொல்லின் அடியாய்க் கேளிர் என்ற சொல் ஆக்கம்பெற்று உறவினரைக் குறிக்க இலக்கியங்களில் பரவலாய்ப் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனும் புறநானூற்று அடியில் இச்சொல்லின் பயன்பாட்டைக் காணலாம்.

கேள் எனும் சொல்லின் அடியாய்ப் பிறந்த கேள்வன், கேள்வர் எனும் சொற்களும் கணவனைக் குறிக்கச் சில இடங்களில் வழக்கிலுள்ளன.




கேள், கேள்வன், கேள்வர் எனும் மூன்று சொற்களும் கணவரைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. இவற்றுள் கேள் இரண்டு இடங்களிலும் கேள்வன் பதிமூன்று இடங்களிலும், கேள்வர் மூன்று இடங்களிலும் வழங்கப் பெற்றுள்ளன. கணவன் எனும் சொல்லை அடுத்து அதிகம் வழக்கிலுள்ளவை இச் சொற்களாகும். பின்வரும் பாடல் அடிகளில் இச்சொற்களின் பயன்பாட்டைக் காணலாம்.

..... <u>கேள்</u> ஆகலின் ( ஐங். 271-4 )

தெரியிழாய் நீயும் நின் <u>கேளும்</u> புணர ( கலி. 39-26 )

கேள் எனும் பொதுச் சொல் கணவனைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளது என்பதைக் கலித்தொகையில் இடம்பெறும் 'நீயும் நின்கேளும் புணர' எனும் தொடர் மூலம் தெளிவாய்த் தெரிந்துகொள்ள முடியும்.

**4.1.12. கேள்வன் ( கேள் + அன் )**

.... .... .... குறுகார்
நுரைதார் மார்பின் நின் <u>கேள்வனை</u>ப் பிறரே
( புறம். 294-9 )

மீநீர் நிவந்த விறலிழை <u>கேள்வனை</u> ( பரி.21-40 )

நல்கிய <u>கேள்வன்</u> இவன் மன்ற மெல்ல ( கலி.142-62 )

எம் <u>கேள்வன்</u> தருதலும் தருகல்லாய் ( கலி.148-17 )

கலித்தொகை பாடல் அடியில் இச்சொல் தன்மை பன்மைப் பதிலீடுப் பெயரான 'எம்' என்ற பெயருடன் இணைந்து வந்துள்ளது ( எம் + கேள்வன் ).

**கேள்வர் ( கேள் + அர் )**

தாம் பிழையார் <u>கேள்வர்த்</u> தொழு தெழலால்
( கலி.39-17 )

ஈண்டுநீர் ஞாலத்துள் எங்<u>கேள்வர்</u> இல்லாயின்
( கலி.143-44 )

இகழினும் <u>கேள்வரை</u> ஏத்தி இறைஞ்சுவர்
( பரி.20-89 )

கேள்வன் எனும் சொல்லைப் போன்று கேள்வர் என்ற சொல்லும் 'எம்' எனும் தன்மைப்பன்மைப் பெயருடன் இணைந்து வருகின்றது.

மேற்கண்ட செய்திகளிலிருந்து 'கேள்' எனும் சொல்லும் அதன் அடியாகப் பிறந்த கேள்வன், கேள்வர் எனும் சொற்களும் தம் பொதுப் பொருளிலிருந்து மாறுபட்டுக் கணவன் உறவுமுறையைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ள பாங்கினை அறிந்துகொள்ள இயலும்.

### 4.1.13. சிறந்தான் ( பண்பு/வீரம் சிறப்பு → கணவன் )

.... .... .... இரும்பிடி
சேண வெரிநிற் சிறந் தானோ டேறினாள்
( பரி.1 45 )

சிறந்தானை வழிபடீஇச் சென்றனள் ( கலி.9-3 )

மேற்கண்ட இரண்டு பாடல் அடிகளிலும் சிறந்தான் எனு சொல் கணவனைக் குறித்துப் பொருள் விரிவு பெற்றுள்ளது தன் கணவருடன் ஏறினாள் என்பதும் சிறந்த கணவனை வழிபட்டுச் சென்றாள் என்பதும் இப்பாடல் அடிகளின் பொருளாகும். இங்குப் பண்பில் அல்லது வீரத்தில் சிறந்தோன் என்ற பொதுப்பொருள் சிறப்புப் பெற்றுக் கணவனைக் குறித்துப் பயின்று வந்துள்ளது. இப்பாடல் அடிகளில் இடம் பெறும் இச்சொல்லின் பொருள் மொழிச் சூழலில் மட்டுமே வெளிப்பட்டு நிற்கின்றது.

### 4.1.14. செல்வன் ( செல்வம் → கணவன் )

செல்வன் எனும் சொல்லுக்குச் செல்வமுள்ளவன், இறைவன், புத்தன், மகன் என்ற பொருள்கள் உண்டு. தனக்குச் செல்வமாகக் கிடைத்தவன் என்ற பொருளின் அடிப்படையில் இச்சொல் பொருள்விரிவு பெற்றுள்ளது. இச்சொல் புறநானூற்றில் ஓரிடத்தில் கணவனைக் குறிக்கக் கையாளப் பெற்றுள்ளது.

.... .... .... புதல்வற்றந்த
செல்வனூரு மாவாராதே ( புறம். 273-4 )

இவ்வடிக்குப் புதல்வனைப் பெற்ற செல்வனாகிய கணவன் என்பது பொருளாகும். இச்சொல் தற்காலத்தில் மகனைக் குறிக்க வழங்கப் பெறுகின்றது.

### 4.1.15. துணை ( உதவி → கணவன் )

சங்க நூற்களில் துணை எனும் சொல்லும் அதன் அடியாகப் பிறந்த துணைவன் எனும் சொல்லும் கணவனைக் குறிக்குமாறு பொருள் விரிவு பெற்றுள்ளன. சங்க நூற்களில் துணை நான்கு இடங்களிலும் துணைவன் ஓரிடத்திலும் பயின்று வருகின்றன. உதவி எனும் பொருளின் அடியாகவே இச்சொல் பொருள்விரிவு பெற்றுள்ளது.

துணைப்புணர்ந்த மடமங்கையர் ( பட்.106 )
தத்தம் துணையோடு ஒருங்குடனாடும் ( பரி.16-9 )
வீழ்துணை தழீஇ வியல் விசும்புகமழ ( மது.561 )
காதல் இன்துணை புணர்மார் ( மது.550 )

மேற்காணும் எடுத்துக்காட்டுகளில் இடம்பெறும் துணை எனும் பொதுச்சொல் புணர்ந்த, ஆடும், தழீஇ, புணர் எனும் விரிவுகளுடன் இணையும் நிலையில் கணவன் எனும் பொருள் தோற்றம் பெறுகின்றது.

| | |
|---|---|
| துணைபுணர் | ( மகளிர் ) |
| துணை.... ஆடும் | ( மகளிர் ) |
| துணை தழீஇ | ( மகளிர் ) |
| துணை புணர் | ( மகளிர் ) |

### 4.1.16. துணைவன் ( துணை + அன் )

துணைவன் எனும் சொல் கீழ்க்கண்ட எடுத்துக் காட்டில் கணவனைக் குறிக்குமாறு வழங்கப் பெற்றுள்ளது.

தான் அமர் துணைவன் ஊக்கஊங்கி ( அகம்.385-15 )

இப்பாடல் அடிக்குத் தன்னால் விரும்பப்பெற்ற கணவன் என்பது பொருளாகும். இச்சொல்லின் செயல்பாட்டைப் பின்வருமாறு எழுதிக் காட்டலாம்:




### 4.1.17. பெற்றார் ( < பெறு )

பெறு எனும் வினைச் சொல்லின் அடியாகத் தோன்றிய பெற்றார் எனும் சொல் பரிபாடலில் ஓரிடத்தில் கணவனைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

பெற்றாரும் பெற்றார்ப் பிழையாத பெண்டிரும்
( பரி.தி. 2-25 )

இப்பாடல் அடியில் இடம்பெற்றுள்ள முதல் பெற்றார் 'மக்களைப் பெற்றார்' என்றும், இரண்டாவது பெற்றார்

'தம்மைப் பெற்றவர்' என்ற பொருளில் கணவரைக் குறித்தும் வழங்கப் பெற்றுள்ளன. இச்சொல்லின் பொருள் விரிவைப் பின்வருமாறு காட்டலாம்:




4.1.18. மகிழ்நன் ( <மகிழ் ) ( மருதநிலத் தலைவன்---கணவன் )

'மகிழ்நன்', 'மகிழ்' எனும் வினைச் சொல்லின் அடியாக உருவாக்கப்பட்ட சொல்லாகும். சங்க இலக்கியத்தில் இச்சொல் பதினைந்து பொருள்களில் வழங்கப் பெற்றுள்ளது. இவற்றுள் கணவன் என்ற உறவுமுறைப் பொருளும் ஒன்றாகும். இச்சொல் கணவனைக் குறிக்க மூன்று இடங்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் அடிகளைக் காண்போம்:

மனை யோட்டேற்று மகிழ்நனாயின் ( அகம்.166-10 )

.... .... .... பண்பில்
மகிழ்நன் பரத்தைமை பாடிய ( அகம்.336-8 )

மாய மகிழ்நன் பரத்தைமை ( கலி.75-32 )

இச்சொல் முதல் அடியில் 'கணவனாகிய தலைவன் தன் மனைவியைத் தெளிவிப்பான்' என்றும் இரண்டாவது அடியில் 'பண்பில்லாத கணவன்' என்றும் மூன்றாவது அடியில் 'மாயம் செய்வதில் வல்லவனான கணவன்' என்றும் பொருள்பட்டு நிற்கின்றது. இரண்டு சூழல்களில் இச்சொல் பரத்தமை எனும் சொல்லுடன் இணைந்து வருகின்றது. மருதநிலத் தலைவனைக் குறிக்கும் இச்சொல் பொருள் சிறப்புற்றுக் கணவனைக் குறித்து வழங்கப் பெற்றுள்ளது.




4.1.19. மைந்தன்/மைந்தர் ( வலிமை/அழகு ⟶ கணவன் )

மைந்தன்/மைந்தர் எனும் மகனைக் குறிக்கும் உறவுமுறைச் சொற்கள் கணவனைக் குறிக்கவும் சங்க நூற்களில் சில இடங்களில் எடுத்தாளப் பெற்றுள்ளன.

மைந்தன் எனும் சொல்லுக்குத் தமிழ்ப் பேரகராதியில் எட்டு பொருள்கள் தரப்பெற்றுள்ளன.

மைந்தன் — 1. மகன் 2. இளைஞன் 3. விலங்கு, ஊர்வன போன்றவற்றின் குட்டி 4. மாணாக்கன் 5. ஆண்மகன் 6. திண்ணியன் 7. வீரன் 8. கணவன்

மேற்கண்ட பொருள்களில் மகன் (1) கணவன் (8) என்பன உறவுமுறைப் பொருள்களாகும். இச்சொல்லிற்கு மைந்து என்பது அடிப்படைச் சொல்லாகத் தரப்பெற்றுள்ளது (மைந்து = வலிமை, அழகு, விருப்பம்). மைந்தன் எனும் இச்சொல் வீரம்/வலிமை/அழகு பொருந்தியவன் என்று பொருள் சிறப்புற்றுக் கணவனைக் குறித்து வந்துள்ளது. அதவது பொது நிலையில் ஆண்மகனைக் குறித்த இச்சொல் வீரம்/வலிமை/அழகு பொருந்தியவன் என்று பொருள்பெற்று முதலில் மகனையும் பின்னர்க் கணவனையும் குறிக்கின்றது.

முப்பத்தைந்து இடங்களில் வரும் இச்சொல் நான்கு இடங்களில் மட்டும் உறவுமுறைப் பொருளில் வழக்கிலுள்ளது.

அடியோர் <u>மைந்தர்</u> அகலத்து அகலா (பரி.8-43)

<u>மைந்தர்</u> மார்வம் வழிவந்த (பரி.8-122)

<u>மைந்தர்</u> கண்ணி மகளிர் சூடவும் (பட்.108)

நான் மாடக்கூடல் மகளிரும் <u>மைந்தரும்</u> (கலி.92-65)

மைந்தர் எனும் சொல்லின் பொருள் சிறப்பைப் பின்வருமாறு எழுதிக் காட்டலாம்.

மைந்து ⟶ மைந்தன் ⟶ மைந்தர் ⟶ மகன் ⟶ கணவன்

வலிமை

### 4.1.20. கணவனைக் குறிக்கும் உறவுமுறைச் சொற்களின் வரவு எண்ணிக்கையும் சொற்பொருண்மை செயல்பாடும்

முன்னர்க் குறிப்பிட்டது போன்று கணவனைச் சுட்ட இரண்டு வகைச் சொற்களும் சங்க நூற்களில் வழக்கிலுள்ளன. முதல்வகையில் கணவன், கொழுநன் எனும் சொற்கள் அடங்கும். இவை சங்க நூற்களில் பரவலாக வழக்கிலுள்ளன.

கணவன் எனும் சொல் இரண்டு பொருள்களிலும் அதாவது விளிப்பொருளிலும் உறவுமுறைப் பொருளிலும் பயன்பட்டுள்ளது. முதல் வகையைக் காட்டிலும் இரண்டாவது வகையில் சொற்களின் எண்ணிக்கை அதிகமாகவுள்ளது. இரண்டாம் வகைச் சொற்கள் பொருள் விரிவுபெற்றுச் சிறப்புப் பொருளாகக் கணவனைக் குறிக்கப் பயன்பட்டுள்ளன.




இரண்டாம் வகைச் சொற்களில் பெரும்பாலானவை மிகக் குறைவான வரவிடங்களிலே காணப்படுகின்றன. அண்ணல், ஆடவர், ஆள், உரிமை மாந்தர், பெற்றார், செல்வன் போன்றன தலா ஓரிடத்தில் மட்டும் கணவனைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. காதலன், கிழவன், சிறந்தான் என்பன தலா இரண்டு இடங்களில் பயின்று வந்துள்ளன. துணை ( வன் ), மைந்தன் என்பன தலா நான்கு இடங்களில் பயன்பாட்டில் உள்ளன. மகிழ்நன் எனும் சொல் மூன்று இடங்களில் உறவுமுறைப் பொருளில் கையாளப் பெற்றுள்ளது. இரண்டாம் வகையில் கேள்/கேள்வன் எனும் சொற்களே பெருவழக்குப் பெற்ற சொற்களாகும்.

பண்பில்/வீரத்தில் சிறந்த ஆண்மகனைக் குறிக்கும் சொற்களும்; அன்புடையவன், உரிமையுடையவன், துணை யானவன் எனும் பொருள்தரும் சொற்களும் பொதுவாகக் கணவன் உறவுமுறையைக் குறிப்பிடப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. இச் சொற்களின் பொருள் விரிவைப் பின்வருமாறு சுட்டலாம்.

அன்பு → அன்புடையவர் → கணவன்

வீரம் → வீரமிக்கவன் → தலைவன் → கணவன்

சிறப்பு → சிறப்புடையவன் → கணவன்

துணை → துணையானவன் → கணவன்

இரண்டாம் வகைக்குரிய சொற்களின் பொதுப்பொருள்களை உற்றுநோக்கின் அவை பின்வருமாறு பொருள் சிறப்புற்றுக் கணவரைக் குறிக்க வழங்கப் பெற்றுள்ளன:




இரண்டாம் வகைச் சொற்களில் சில ஒன்றிற்கு மேற்பட்ட உறவுமுறைகளைக் குறிக்கவும் கையாளப் பெற்றுள்ளன.




பொதுநிலையில் ஆணைக் குறிக்கும் சொற்களான ஆடவர், ஆண் என்பன கணவரைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. இப்பயன்பாடு மொழிச் சூழலின் சிறப்பை எடுத்தியம்புவதாய் உள்ளது.



மேற்காணும் கருத்துக்களிலிருந்துப் பின்வரும் முடிவுகளைத் தொகுத்து வழங்கலாம்:

* கணவன், கொழுநன் எனும் சொற்கள் அடிப்படையில் உறவுமுறைச் சொற்களாகவுள்ளன.
* இரண்டாம் வகைச் சொற்கள் மிகக் குறைந்த வரவிடங்களில் காணப்படுகின்றன ( ஆடவன், அண்ணல் போன்றன )
* விளிப்பொருளில் கணவன் என்ற சொல் மட்டும் பயன்பாட்டில் உள்ளது.
* அன்பு/காதல்/வீரம்/வலிமை எனப் பொருள்படும் சொற்கள் சிறப்புப் பொருளாகக் கணவனைக் குறிக்கக் கையாளப் பெற்றுள்ளன.
* பொதுப்பொருள் தரும் சொற்கள் உறவுமுறையைக் குறிக்க மொழிச் சூழலும் ஒரு காரணமாய் உள்ளது.
* ஐ, செல்வன், மைந்தன் எனும் சொற்கள் உறவு முறையில் பலபொருள் சொற்களாக விளங்குகின்றன.

### 4.2.0.1. தொல்காப்பியத்திலும் நிகண்டுகளிலும் மனைவியைக் குறிக்கும் சொற்கள்

தொல்காப்பியத்தில் மனைவியைக் குறிக்கப் பின்வரும் ஏழு சொற்கள் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

1. மனைவி ( < மனை )
2. மனையோள் ( மனை + ஓள் )
3. மனைக்கிழத்தி ( மனை + கிழத்தி )
4. காதலி ( காதல் + இ )
5. கிழத்தி ( கிழ + ( த் ) + இ )
6. கிழவோள் ( கிழ + ஓள் )
7. நல்லோள் ( நல் + ஓள் )

மனை என்னும் சொல்லின் அடியாகப் பிறந்த மனைவி, மனையோள், மனைக்கிழத்தி என்பன முதல்வகைச் சொற்களாகும். 'கிழ' என்ற சொல்லின் அடியாகப் பிறந்த கிழத்தி, கிழவோள் என்பனவும் காதலி, நல்லோள் எனும் சொற்களும் இரண்டாம் வகைக்குரிய சொற்களாகும்.

தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள சொற்களில் மனைவி, மனையோள், காதலி என்பன சங்க நூற்களில்

காணக்கிடைக்கின்றன. தொல்காப்பியத்தில் இடம்பெறும் இச்சொற்களின் வரவிடங்களைப் பின்வரும் பாடல் அடிகளில் காணலாம்:

தொல்முறை மனைவி ( தொல்.118.2 )
மனையோள் கிளவியும் ( தொல்.1452.1 )
மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப ( தொல்.1119.2 )
காதலி இழந்த தபுதார நிலையும் ( தொல்.1025.28 )
உயங்குவளை கிடந்த கிழத்தியைக் குறுகி ( தொல்.1092.33 )
பிறவுமன்ன கிழவோள் மாண்புகள் ( தொல்.1098.4 )
நல்லோள் கணவனோடு நனியழல் புகீஇச் ( தொல்.1025.30 )

பிங்கல நிகண்டில் மனைவியைக் குறிக்கப் பத்தொன்பது சொற்கள் வரிசைப்படுத்தப் பெற்றுள்ளன. அவை பின்வருவன:

1. மணமகள், 2. உரிமை, 3. வல்லவி, 4. தாரம், 5. துணைவி, 6. வாழ்க்கைத் துணை, 7. மணவாட்டி, 8. பாரி, 9. இல்லாள், 10. பன்னி, 11. விருந்தனை, 12. இல்லவள், 13. குடும்பினி, 14. களம், 15. காந்தை, 16. இல், 17. மனை, 18. காதலி, 19. நாயகி. ( பிங். 919 )

பிங்கல நிகண்டில் குறிப்பிடப் பெற்றுள்ள சொற்களில் பெரும்பான்மையானவை வகை-2ஐச் சார்ந்த சொற்களாக வுள்ளன. இவற்றுள் பெரும்பகுதி சங்க நூற்களில் வழங்கப் பெறவில்லை. மேற்காணும் பத்தொன்பது சொற்களில் மனை, துணைவி, காதலி என்பன மட்டும் சங்க நூற்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளன. பெரும்பான்மையான சொற்கள் இடைக்காலத் தமிழில் வழங்கப் பெறுகின்றன.

தொல்காப்பியத்தில் வழங்கப் பெற்றனவற்றுள் காதலி என்ற சொல் மட்டும் பிங்கல நிகண்டில் குறிப்பிடப் பெற்றுள்ளது. மனைவி எனும் சொல் பிங்கல நிகண்டில் தரப்பெறவில்லை. அதற்கு மாறாக 'மனை' என்ற சொல் குறிக்கப் பெற்றுள்ளது.

'மண' ( மணத்தல் ) எனும் சொல்லின் அடியாக 'மணவாட்டி' 'மணமகள்' எனும் சொற்களும் 'இல்' எனும்

சொல்லின் அடியாய் 'இல்லாள்', 'இல்லவள்' எனும் சொற்களும்; துணை எனும் சொல்லின் அடியாய்த் 'துணைவி' எனும் சொல்லும் தோற்றம் பெற்றுள்ளதைப் பிங்கல நிகண்டின் பட்டியலிலிருந்து தெரிந்துகொள்ள இயலும். குடும்பம் என்ற சொல்லின் அடியாய்க் 'குடும்பினி' எனும் சொல் தோற்றம் பெற்றுள்ளது.

மண ——→ மணவாட்டி; மணமகள்

இல் ——→ இல்லாள் ——→ இல்லவள்

துணை ——→ துணைவி; வாழ்க்கைத்துணை = மனைவி

களம், தாரம், காந்தை என்பன வடமொழிச் சொற்களாகும். இவை பிற்கால இலக்கியங்களில் வழங்கப் பெற்றுள்ளன.

### 4.2.0.2. சங்க நூற்களில் மனைவியைக் குறிக்கும் சொற்கள்

சங்க நூற்களில் மனைவியைக் குறிக்க இருவகைச் சொற்களும் வழக்கிலுள்ளன. மொத்தம் இருபத்திரெண்டு சொற்கள் காணப்படுகின்றன. அவை:

1. மனை
2. மனைவி
3. மனைமுதல்
4. மனைவியர்
5. மனையாள்
6. மனையோள்
7. மனையவர்
8. மனையுறை மகளிர்
9. பெண்
10. பெண்டிர்
11. பெண்டு
12. தையல்
13. மகடூ
14. மடந்தை
15. செல்வி
16. துணை
17. துணைவி
18. துணைவியர்
19. இற்கிழத்தி
20. காதலி
21. நகர்
22. முதலாட்டி

சங்க நூற்களில் பயன்படுத்தப்படும் சொற்களை அவற்றின் தோற்றம் மற்றும் பொருள் அடிப்படையில் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

i. 'மனை' என்னும் சொல்லை அடியாகக் கொண்டு ஆக்கம் பெற்ற சொற்கள்.

மனை ⟶ மனை, மனைவி, மனைவியர், மனை-யோள், மனையாள், மனையவர், மனை முதல் ( மனை + முதல் ), மனையுறை மகளிர் ( மனை + உறை + மகளிர் )

இவற்றுள் மனைமுதல், மனையுறை மகளிர் என்பன கூட்டுச் சொற்களாகும்.

ii. 'பெண்' எனும் பொருளை அடிப்படையாகக் கொண்டு வழங்கப் பெறும் சொற்கள்

பெண் ⟶ பெண், பெண்டு, பெண்டிர், மகடூ, தையல், செல்வி.

iii. 'இல்' எனும் சொல்லின் அடியாகப் பிறந்த சொல்

இல் ⟶ இற்கிழத்தி

நிகண்டுகளில் குறிப்பிடப் பெற்றுள்ள சொல் விரிவுகளான 'இல்லவள்', 'இல்லாள்' என்பன சங்க நூற்களில் மனைவி உறவுமுறையில் கையாளப் பெறவில்லை. இற்கிழத்தி ஒரு கூட்டுச் சொல்லாக உள்ளது.

iv. 'துணை' எனும் சொல்லின் அடியாகத் தோன்றிய சொற்கள்

துணை ⟶ துணை, துணைவி, துணைவியர்

v. பிற சொற்கள்: - காதலி, நகர் முதலாட்டி,

### 4.2.1. 'மனை' தொடர்பான சொற்கள்

மனை என்னும் சொல்லின் அடிப்படைப் பொருள் 'இல்'/'வீடு' என்பதாகும். இச்சொல்லை அடியாகக் கொண்டு சங்க நூற்களில் எட்டு சொற்கள் வழங்கப் பெற்றுள்ளன. இச் சொற்களின் ஆக்கத்தைப் பின்வருமாறு காட்டலாம்:

மனை= வீடு, இல் ...........

மனை — + இ ⟶ மனைவி
மனை — + அர் ⟶ மனைவியர்
மனை — + ஆள் ⟶ மனையாள்
மனை — + ஓள் ⟶ மனையோள்
மனை — + அவர் ⟶ மனையவர்
மனை — + முதல் ⟶ மனைமுதல்
மனை — + உறை + மகளிர் ⟶ மனையுறை மகளிர்

இவற்றுள் மனையவர், மனையுறை மகளிர் என்பன பன்மையாக வழங்கப் பெற்றுள்ளன.

மனை எனும் சொல்லிற்குத் தமிழ்ப் பேரகராதியில் எட்டுப் பொருள்கள் தரப்பெற்றுள்ளன. அவை:

மனை[1] -தல் manai 4 v.tr prob வனை ----- சிருட்டித்தல்

மனை[2] manai prob மன்னு ( k.mana. M. mana )

1. வீடு, 2. ---- வீடு கட்டுதற்குரிய வெற்றிடம், 3. ---- நில அளவு வகை, 4. ---- மனைவி, 5. ---- குடும்பம், 6. ---- இல்வாழ்க்கை, 7. ---- சூதாடு பலகையினறை, 8. ---- நற்றாய்.

இச்சொல் 'வீடு', 'இல்வாழ்க்கை', 'குடும்பம்' எனும் பொருள்களைப் பெற்றிருப்பதால், வீட்டிற்குரியவள், குடும்பத்திற்குரியவள், இல்வாழ்க்கைக்குரியவள் என்பவையே மனைவி எனும் பொருள் விரிவிற்குக் காரணமாய் அமைந்துள்ளன.




சங்க நூற்களில் மனைவி என்ற சொல் நான்கு இடங்களிலும் மனையோள் எனும் சொல் இருபத்திமூன்று இடங்களிலும் வழங்கப் பெற்றுள்ளன.

### 4.2.1.1. மனைவி

மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்
( புறம்.191-3 )

அல்லி உணவின் மனைவியொடு ( புறம்.250-5 )

...... ...... ..... மனைவியும்
...... ...... .... குறுந்தாள் உடும்பின்
( புறம்.326.7 )

எல்விருந்தயரும் மனைவி ( நற்.121.11 )

4.2.1.2. மனையோள்

புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்கு
எவ்வம் சுரக்கும் பைதல் மக்களொடு ( புறம்.41-14 )
..... ..... ..... என்
மனையோள் .... ..... ( புறம்.164-7 )

இன்புறு புணர்நிலை கண்ட மனையோள்
( புறம்.320-6 )

.......................................... சென்றுநின்
மனையோட்கு உரைப்பல் ( நற்.100-7 )

மனை, மனையாள், மனையவர், மனையுறை மகளிர் எனும் சொற்கள் தலா ஓரிடத்தில் கையாளப் பெற்றுள்ளன.

4.2.1.3. மனை

வினை நயந்தமைந்தனை ஆயின் மனைநக
( அகம். 21-7 )

4.2.1.4. மனையாள்

சேக்கை இனியார்பாற் செல்வான் மனையாளால்
( பரி. 20-86 )

4.2.1.5. மனையவர்

மடமயிலோடு மனையவரொடும் ( பரி. 19-21 )

4.2.1.6. மனைமுதல்

மனைமுதல் வினையொடும் உவப்ப ( அகம்.51-13 )

4.2.1.7. மனையுறை மகளிர்

மனையுறை மகளிர்க் காடவர் உயிரென
( குறு. 135.2 )

மனையோள் எனும் சொல் சங்க நூற்களில் பெருவழக்காகக் காணப்படும் நிலையில், பிற்கால இலக்கியங்களில் மனைவி என்ற சொல்லே நிலைபெற்ற சொல்லாக விளங்குகின்றது. இது குறிப்பிடத்தக்க ஒரு பண்பாகும்.

4.2.1.8. மனைவியர்

மனைவியர் ( மனைவி + அர் ) எனும் சொல் பன்மைப் பொருளில் பரிபாடலில் இரண்டு இடங்களில் பயின்று வருகின்றது.

<u>மனைவியர்</u> நிறைவயின் வசிதடி சமைப்பின்
( பரி. 5-39 )

மறுமறு கற்பின் மாதவர் <u>மனைவியர்</u> ( பரி. 5-46 )

மனை எனும் சொல்லின் அடியாகப் பிறந்த சொற்களின் வரவிடங்களை நோக்கின் மனையோள் என்ற சொல்லே சங்கநூற்களில் பெருவழக்கு பெற்ற சொல்லாக உள்ளது. முதல் வகையைச் சார்ந்த இச்சொல் குறிசொல்லாக மட்டும் பயன்படுத்தப்பட்டுள்ளது. மனை எனும் சொல்லி-லிருந்து தோற்றம் பெற்ற பிற சொற்கள் தலா ஓரிடத்தில் பயன்படுத்தப் பெற்றுள்ளன. மனைவி உறவுமுறையில் பன்மையைக் குறிக்க மனைவியர் எனும் சொல் சங்கநூற்களில் வழங்கப் பெற்றுள்ளது.

### 4.2.2. பெண் எனும் பொருளை அடிப்படையாகக் கொண்ட சொற்கள்

இப்பிரிவில் இரண்டு வகைச் சொற்கள் அடங்குகின்றன. அவை:

1. பெண் ⟶ பெண்டு ⟶ பெண்டிர்

2. மகடூஉ, மடந்தை, தையல், செல்வி.

பெண்டு, பெண்டிர் என்பன பெண் எனும் அடிப்படைச் சொல்லிலிருந்து உருவானவையாகும். இரண்டாம் பிரிவில் காணப்படும் சொற்கள் பெண் எனும் அடிப்படைப் பொருளைக் கொண்ட சொற்களாகும். இவ்விரண்டு வகைச் சொற்களும் அடிப்படைப் பொருளிலிருந்து விரிவுபெற்று மனைவியைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

#### 4.2.2.1. பெண்

......பெண் ஈற்று உற்றென ( புறம்.82-1 )

( தன் மனைவி பிள்ளை பெறுதலைப் பொருந்தினவளாக )

#### 4.2.2.2. பெண்டு

<u>பெண்டு என</u> அறிந்தன்று பெயர்த்தலோ அரிதே
( நற். 74-11 )

மனைகெழு <u>பெண்டு</u> யான் ஆகுக ( அக. 203-18 )

தன்துறை ஊரன் பெண்டினை ஆயின் ( குறு.91-3 )

ஊரார் பெண்டு என் மொழிய என்னை ( ஐங்.113-3 )

4.2.2.3. பெண்டிர்

நறவு நாட்செய்த குறவர்தம் பெண்டிரொடு
( மலை.320 )

..... உன் கணவன் பெண்டிர்கான ( அக.276-8 )

பெண்டிர் ஊர் இறை கொண்டனன் ( ஐங்.40.3 )

மனைகெழு பெண்டிர்க்கு நோவுமார் பெரிதே
( ஐங். 382-3 )

பெண் எனும் சொல் புறநானூற்றில் ஓரிடத்தில் பயன் படுத்தப்பெறப் பெண்டு எனும் சொல் சங்க நூற்களில் பத்து இடங்களிலும், பெண்டிர் ஒன்பது இடங்களிலும் பயன்படுத்தப் பெற்றுள்ளன. பெண்டிர் பன்மைப் பொருளில் மனைவியர் எனும் சொல்லுக்கு இணையாக வழங்கப் பெற்றுள்ளது ( பெண்டிர் = மனைவியர் ).

சங்க நூற்களில் பெண், பெண்டு, பெண்டிர் என்பன பல்வேறு பொருள்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

பெண் = 1. பெண் தன்மை 2. பெண் 3. மனைவி

பெண்டு = 1. பெண் தன்மை 2. பெண் 3. மனைவி 4. பரத்தை 5. விறலி

பெண்டிர்= 1. மகளிர் 2. மனைவியர் 3. பரத்தையர்

மேற்காணும் மூன்று சொற்களுக்கும் பெண் என்ற பொருளே அடிப்படைப் பொருளாகவும் பெருவழக்குப் பெற்ற பொருளாகவும் உள்ளது.




பெண் எனும் சொல்லைப் பெண்சாதி என்ற தற்காலச் சொல்லுடன் இணைத்துக் கூறுவார் தாயம்மாள் அறவாணன் ( 1987:156 ).

மடந்தை, மகடூஉ, தையல், செல்வி எனும் சொற்கள் சங்க நூற்களில் பல்வேறு பொருள்களில் பயன்படுத்தப்

பெற்றுள்ளன. எனினும் இவை மனைவியைக் குறித்தும் சில இடங்களில் வழங்கப் பெற்றுள்ளன. இதைப் பின்வரும் சங்கப்பாடல் அடிகளில் காணலாம்.

4.2.2.4. மகடூஉ

கழிகல மகடூஉப்போல (புறம். 261-18)

(= ஒழிக்கப்பட்ட அணிகலத்தையுடைய அவன் மனைவி)

இற்பொலி மகடூஉப்போலச் சிற்சில (புறம்.331-9)

(= இல்வாழ்க்கையில் சிறந்த மகளைப் போல)

4.2.2.5. மடந்தை

சீர்கெழு மடந்தை ஈரிமை பொருந்த (நற்.40.9)

நும்மனை மடந்தை யொடு தலைப்பெய்தீமே (ஐங். 86.4)

இரண்டாவது அடியிலுள்ள நும்மனை மடந்தை எனும் தொடர், சூழல் மூலம் மனைவியைக் குறிக்கின்றது.

(நும்மனை மடந்தை = நும் வீட்டிலுள்ள பெண் = மனைவி)

4.2.2.6. செல்வி

செம்மீனனையளின் தென்னகர்ச் செல்வி (பதி.31-28)

(பெருமனையிடத்து உள்ளவளாகிய நின்தேவி)

4.2.2.7. தையல்

தையலவரொடும் தந்தாரவரொடும் (பரி.15-46)

மகடூஉ, மடந்தை எனும் சொற்கள் தலா இரண்டு இடங்களிலும், செல்வி, தையல் எனும் சொற்கள் தலா ஓரிடத்திலும் வழக்கிலுள்ளன.

4.2.3. இல் > இற்கிழத்தி (இல்+கிழத்தி)

'மனை' 'இல்' என்பன ஒருபொருட் பன்மொழிகளாகும். மனை எனும் சொல்லும் அதன் அடியாகப் பிறந்த சொற்களும் மனைவியைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளதைப் போன்று 'இல்' எனும் சொல்லின் அடியாகப் பிறந்த சில சொல் விரிவுகளும் மனைவியைக் குறிக்கக் கையாளப் பெறுவதுண்டு. பிங்கல நிகண்டில் 'இல்' 'இல்லவள்' என்பன

மனைவிக்குரிய சொற்களாகத் தரப்பெற்றிருப்பினும், சங்க இலக்கியத்தில் 'இற்கிழத்தி' என்ற சொல் மட்டும் ஓரிடத்தில் காணப்படுகின்றது.

'இற்கிழத்தி' எனும் கூட்டுச் சொல்லில் இடம்பெறும் 'கிழத்தி' மனைவியைக் குறிக்கத் தொல்காப்பியத்தில் வழங்கப்பட்டுள்ளது ( காண்க: 4.2.0.1. )

பேர் இற்கிழத்தி ஆக எனத்தமர்தர ( அகம்.86-19 )

( = பெரிய மனைக்கிழத்தி ஆவாய் என்று கூறிக்காட்ட.... )

இற்கிழத்தி, மனைக்கிழத்தி என்பன ஒருபொருட் பன்மொழிகளாகும்.

### 4.2.4. துணை துணைவி, துணைவியர்

கணவனைக் குறிக்கத் துணை எனும் சொல் வழங்கப் பெற்றுள்ளதைப் போன்று, மனைவியைக் குறிக்கவும் வழங்கப் பெற்றுள்ளது.

#### 4.2.4.1. துணை

தொடுத்த வாளியர் துணை புணர் கானவர் ( மலை.17 )

( = தொடுத்த அம்பினையுடையராய்த் தம் மனைவியோடு கூடியிருக்கும் கானவர் )

குறு நெடுந் துணையோடு ( புறம். 393.2 )

அருளும் அன்பும் நீக்கித் துணை துறந்து ( குறு.20.1 )

( = மனைவியைத் துறந்து )

எள்ளார் அம்ம துணைப் புரிந்தோரே ( குறு.147.5 )

( = மனைவியைப் பிரிந்தோர் நின்னை இகழ்வர் )

பாவை யன்ன நின் துணைப் பிரிந்து... ( ஐங். 307 )

#### 4.2.4.2. துணைவி > துணைவியர்

துணைவி எனும் சொல் 'துணைவியர்' எனும் நிலையில் 'மனைவியர்' எனும் பொருளில் புறநானூற்றில் ஓரிடத்தில் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

நிலைக் கொத்த நின் துணைத் துணைவியர்
( புறம்.166.17 )

'துணைத் துணைவியர்' என்பதற்கு நின் துணையாக உள்ள துணைவியர் என்பது பொருளாகும். துணை ஐந்து இடங்களிலும் துணைவி ( யர் ) ஓரிடத்திலும் சங்க நூற்களில் வழக்கிலுள்ளன.

மனையோடுணை வியாகப் புதல்வன் ( ஐங்.410.2 )

மேற்கண்ட ஐங்குறுநூற்றுப் பாடல் அடியில் 'மனையோள் துணைவியாக' என்ற தொடர் காணப்படுகின்றது. இதற்குக் கழக உரையில் ( பொ.வே. சோமசுந்தரனார், பாடல் 410, ப.575 ) "தன்னுயிர்க் காதலியே உசாத்துணைவியாகப் பக்கத்தே இருப்ப" என்று பொருள் கூறப்பட்டுத் "துணைவி என்றது ஈண்டு தன் மகிழ்ச்சியைச் சொல்லிப் பின்னும் மகிழ்தற்குரிய துணைவி எனப்பட நின்றது" என விளக்கம் தரப் பெற்றுள்ளது என்பதால் இரண்டு சொற்களும் மனைவியையே குறித்து நிற்பனவாகக் கொள்ளலாம்.

தற்காலத்தில் துணைவி, துணைவியார் என்பன பரவலாக மனைவியைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

### 4.2.5. காதலி, நகர், முதலாட்டி

#### 4.2.5.1. காதலி

காதல் எனும் சொல்லின் அடியாக ஆக்கப் பெற்றுள்ள காதலன், காதலி எனும் சொற்கள் முறையே கணவனையும் மனைவியையும் குறிக்கச் சங்க நூற்களில் வழங்கப் பெற்றுள்ளன ( காண்க: 4.1.9 ) . சங்க நூற்களின் உரைகளில் பெரும்பான்மையான இடங்களில் காதலி என்ற சொல்லுக்கு 'மனைவி' என்று பொருள் கூறப்படவில்லை என்றாலும் தலைவன்-தலைவியின் திருமண வாழ்விற்குப் பின் வழங்கப்படும் சூழல்களில் இச் சொல் மனைவியையே குறிப்பதாகக் கொள்ளலாம். பின்வரும் சங்கப் பாடல் அடிகளில் இச்சொல்லின் பயன்பாட்டைக் காணலாம்:

திதலையல்குல் <u>என்காதலி</u>
புதல்வர் பொய்க்கும் .... ( அகம். 54.22 )

தன்னமர் <u>காதலி</u> புன்மேல் வைத்த ( புறம்.234.3 )

புணர்ந்த <u>காதலியின்</u> புதல்வன் றலையும்
( ஐங். 403.1 )

சங்க நூற்களில் இச்சொல் 'அன்புடையவள்' என்ற பொருளிலே அதிகம் வழங்கப் பெற்றுள்ளது எனினும் மூன்று இடங்களில் மனைவியைக் குறிக்கும் வண்ணம் தெளிவான மொழிச் சூழல்களைப் பெற்றுள்ளது.

காதல் = அன்பு
↓ ↓
காதலி ⟶ அன்புடையவள் ⟶ மனைவி

### 4.2.5.2. நகர்

நகர் எனும் சொல்லுக்கு நகரம், கோயில், அரண்மனை, மாளிகை, மண்டபம் என்ற பொருள்கள் உள்ளன.

எனினும் இச்சொல்லிற்கு 'மனைவி' என்ற உறவு முறைப் பொருளும் ஏற்பட்டுள்ளது வியந்து நோக்கத்தக்கது. கலித்தொகையில் ஓரிடத்தில் இச்சொல் மனைவியைக் குறிக்கக் கையாளப்பெற்றுள்ளது.

மன்னவன் புறந்தர வருவிருந்தோம்பித்
<u>தன்னகர்</u> விழையக் கூடி ( கலி.8.21 )

( = மனைவியை விரும்பக் கூடி )

இல் ( இல்லாள் ) வீடு ( வீட்டுக்காரி ) என்பன மனைவியைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளதைப் போல நகர் ( இடப் பொருள் ) என்ற சொல்லும் மனைவியைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

### 4.2.5.3. முதலாட்டி

முதல் + ஆட்டி என்ற சொற்களைக் கொண்ட இக் கூட்டுச்சொல் குறுந்தொகையில் ஓரிடத்தில் மனைவி என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

யாயாகியளே விழவு <u>முதலாட்டி</u> ( குறு.10.1 )

தலைவியானவள் தலைவன் செல்வம் பெற்று மகிழ்ந்து குலாவுவதற்குக் காரணமாக உள்ளவள் என்பது இப்பாடல் அடியின் பொதுப் பொருளாகும். காரணமானவள் என்பது மனைவியைக் குறிப்பதாக உள்ளது. மேற்காணும் கருத்துக் களிலிருந்து பின்வருவனவற்றைத் தொகுத்து வழங்கலாம்:

* மனை எனும் சொல்லின் அடியாக எழுந்த சொற்களே மனைவியைக் குறிக்கச் சங்க நூற்களில் அதிகம் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

* மனையோள் என்ற சொல்லே பெருவழக்குப் பெற்ற சொல்லாகும்.

* பெண் எனும் அடிப்படைப் பொருளைக் கொண்ட பல சொற்கள் மனைவியைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

* அன்புடையவள் (தலைவி) துணையுடையவள் (துணைவி) எனும் பொருள்படும் சொற்கள் சில மனைவியைக் குறிக்கப் பயன்பெற்றுள்ளன.

* மனையுறைமகளிர், மனைமுதல், முதலாட்டி, இற்கிழத்தி எனும் கூட்டுச்சொற்கள் மனைவியைக் குறிக்க வழங்கப் பெற்றுள்ளன.

# 5. உடற்பிறப்பு உறவுமுறையும் உறவுமுறைச் சொற்களும்

## 5.0. முன்னுரை

ஒரு தாயின் வயிற்றில் பிறந்த ஆண், பெண் உடன்பிறப்புகள் உடன்பிறப்பு உறவுமுறை அல்லது சகோதர, சகோதரி உறவுமுறைக்குரியவர்கள். இவ்வுறவு முறை மூலம் ஒரு தலைமுறைக்குரிய கிடைநிலை உறவினர்கள் தொடர்பு படுத்தப்படுகின்றனர். உடன்பிறப்பு உறவுமுறையில் வயதும் பாலும் இன்றியமையாத பங்காற்றுகின்றன. தனியனுடன் பிறந்த ஆண்கள் ஆண் உடன்பிறப்பு என்றும், தனியனுடன் பிறந்த பெண்கள் பெண் உடன்பிறப்பு என்றும் குறிக்கப் பெறுவர்.

தனியனுக்கு முன்பிறந்த ஆண், பெண் உடன் பிறப்புகள் முறையே அண்ணன், அக்கா (ள்) என்றும் தனியனுக்குப் பின் பிறந்த ஆண், பெண் உடன்பிறப்புகள் முறையே தம்பி, தங்கை என்றும் அழைக்கப்பெறுவர். அண்ணன்-தம்பி, அக்காள்-தங்கை என்ற உறவுமுறைகளில் வயதும் அண்ணன்-அக்காள் தம்பி-தங்கை எனும் உறவு முறைகளில் பாலும் வேறுபாட்டுக் கூறுகளாக விளங்குகின்றன.

| | |
|---|---|
| அண்ணன்-தம்பி<br>அக்காள்-தங்கை | வயது வேறுபாடு |
| அண்ணன்-அக்காள்<br>தம்பி-தங்கை | பால் வேறுபாடு |

பால்வேறுபாட்டைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்:




உறவுமுறை வரைபடத்தில் அண்ணன்-தம்பி, அக்காள்-தங்கை எனும் வயது வேறுபாட்டைக் காட்டத் தனியான வழிமுறை எதுவும் இல்லை என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும்.

ஆண், பெண் தனியன்களின் தந்தையின் உடன்பிறந்த சகோதரர்களின் பிள்ளைகளும்; தாயின் உடன்பிறந்த சகோதரிகளின் பிள்ளைகளும் சகோதர-சகோதரி உறவுமுறைக்குரியவராவர். எனினும் இவ்வுறவு நேரடி இரத்த உறவாக அமைவதில்லை. தமிழில் இவ்வுறவுமுறைக்கும் அண்ணன், அக்காள், தம்பி, தங்கை என்ற சொற்களே வழங்கப் பெறுகின்றன.

உடன்பிறப்பு உறவுமுறையைக் குறிப்பிடுவதில் மொழி களுக்கு இடையே வேறுபாடு காணப்படுகின்றது. ஆங்கில மொழியில் வயது வேறுபாடு உறவுமுறைச் சொல்லில் இடம் பெறுவதில்லை. மாறாக வயது வேறுபாட்டைக் காட்டப் பெயரடைகள் பயன்படுத்தப் பெறுகின்றன. எடுத்துக்காட்டாகப் பின்வரும் சொற்களைக் காண்போம்:




மேலும் ஆங்கில மொழியில் பெரியப்பா/சித்தப்பா, பெரியம்மா/சின்னம்மாவின் பிள்ளைகள் 'cousin' என்ற சொல்லால் மட்டும் அழைக்கப்பெறுகின்றனர். ஆண், பெண் வேறுபாடற்ற இச்சொல்லில் ஆண், பெண் வேறுபாட்டைக் காட்ட வேண்டுமெனில் சொல்லுடன் brother, sister என்ற உறவுமுறைச் சொற்கள் இணைக்கப்படுகின்றன. வயது வேறுபாட்டைக் குறித்திட 'elder', 'younger' எனும் பெயரடைகள் cousin எனும் சொல்லுடன் இணைக்கப் பெறுகின்றன.

| | | |
|---|---|---|
| Cousin brother | - | அண்ணன்/தம்பி |
| Cousin sister | - | அக்காள்/தங்கை |
| Elder cousin sister | - | அக்காள் |
| Elder cousin brother | - | அண்ணன் |
| Younger cousin brother | - | தம்பி |
| Younger cousin sister | - | தங்கை |

பேச்சுத் தமிழில் அண்ணன்/தம்பி, அக்காள்/தங்கை வயதை வேறுபடுத்திக் காட்ட மேற்கண்டவற்றிற்கு இணையான அமைப்பு முறை காணப்படுகின்றது. தனியனுக்கு மூன்று அண்ணன்கள் காணப்படின் மூத்தவன் மூத்த அண்ணன் என்றும், அடுத்தவன் நடுஅண்ணன் என்றும் மூன்றாமவன் கடைசி அண்ணன் என்றும் குறிக்கப் பெறுவர். இதைப் போன்றே அக்காள், தம்பி, தங்கை என்ற உறவுமுறைச் சொற்களும் வேறுபடுத்திக் குறிக்கப்பெறுகின்றன.




| மூத்த அண்ணன் | மூத்த அக்காள் |
|---|---|
| நடு அண்ணன் | நடு அக்காள் |
| இளைய அண்ணன் | இளைய அக்காள் |




| மூத்த தம்பி | மூத்த தங்கை |
|---|---|
| நடுத்தம்பி | நடுத்தங்கை |
| இளைய தம்பி | இளைய தங்கை |

சங்கத் தமிழில் உடன்பிறப்பு உறவுமுறையில் அண்ணன், அக்காள், தம்பி, தங்கை எனும் உறவுகளுக்குரிய உறவுமுறைச் சொற்கள் வழக்கிலுள்ளன. இதுவரை விளக்கப் பெற்ற உறவுமுறைச் சொற்களைப் போலின்றி உடன்பிறப்பு உறவுமுறையில் மிகக் குறைவான சொற்களே வழக்கிலுள்ளன.

## 5.1. அண்ணன் உறவுமுறை

### 5.1.0. தொல்காப்பியத்திலும் நிகண்டுகளிலும் அண்ணன்

தொல்காப்பியத்தில் அண்ணனைக் குறிக்கத் 'தன்னை' எனும் சொல் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப
(தொல். 1080)

பிங்கலநிகண்டில் அண்ணனைக் குறிக்க ஏழு சொற்கள் தரப்பெற்றுள்ளன. அவை அண்ணல், தமையன், தம்முன், தோன்றல், முன்னவன், சேட்டன், மூத்தோன் என்பனவாகும்.

அண்ணல் தமையன் தம்முன் தோன்றல்
முன்னவன் சேட்டன் மூத்தோன் பெயரே (பிங். 910)

திவாகரநிகண்டில் முன், ஐ, முன்னிளவல், முன்தோன்றல் எனும் நான்கு சொற்கள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

முன்னை முன்னிளவல் முன் தோன்றலாகும்
(திவாகரம் மக்கட் பெயர்த் தொகுதி, ப.41)

நாமதீபநிகண்டில் ஐயன், சேட்டன், தமையன், அண்ணன், முன்னோன், தம்முன், மூத்தோன் எனும் சொற்கள் குறிக்கப் பெற்றுள்ளன.

ஐயன் சேட்டன் தமையன் அண்ணன் முன்னோன்
செய்ய தம்முன் மூத்தோன் (நாமதீப. 191)

### 5.1.1. சங்க நூற்களில் அண்ணன்

சங்க நூற்களில் அண்ணனைக் குறிக்க ஐந்து சொற்கள் வழக்கிலுள்ளன. அவை:

1. முன் 2. ஐ 3. ஐயர் 4. ஐயன்மார் 5. இறை என்பனவாகும்.

மேற்காணும் ஐந்து சொற்களும் இரண்டாம் வகைக்குரிய சொற்களாகும். இச்சொற்கள் பொதுப் பொருளைக் கொண்டு சூழல் மூலம் அண்ணனைக் குறிக்கப் பயன்படுத்தப் பெறுவனவாகும். இவ்வைந்து சொற்களுள் ஐ, ஐயர், ஐயன்மார் என்பன ஒரே அடிச்சொல்லுக்குரியனவாகும்.

### 5.1.1.1. முன்

முன் எனும் சொல் கால, இடப்பொருளைக் கொண்ட ஒரு பொதுச் சொல்லாகும். இடத்தின் முன்னால் எனும் பொழுது ‘front’ என்ற பொருளையும், காலத்தின் முன்னால் என்னும்பொழுது ‘before’ என்ற பொருளையும் இச்சொல் கொண்டுள்ளது. பொதுப்பொருளைக் கொண்ட இச்சொல் உறவுமுறைப் பொருளைக் குறிக்கும் நிலையில் எம், தன், தம் எனும் பதிலீடுப் பெயர்களுடன் இணைந்துவரும் தன்மையைக் காணமுடிகின்றது. பின்வரும் எடுத்துக்காட்டு களில் இச்சொல்லின் பயன்பாட்டைக் காணலாம்.

எம்முன் தப்பியோன் தம்பியோடு (புறம்.304.5)

சா'மனார் தம்முன் செலவு காண்க (கலி.94.34)

.... கயந்தலைத் தம்முன் மார்பின் (பரி.15.19)

பூவிரி கச்சைப் புகழோன் தன்முன் (சிறு. 239)

‘எம் அண்ணனைக் கொன்றவனுடனும் அவன் தம்பியுடனும் போர் புரிவேன்’ என்பது புறநானூற்று அடியின் பொருளாகும். இரண்டாவது அடி ‘சாமனாரின் அண்ணன்’ என்றும், மூன்றாவது அடி ‘அருச்சுனன் அண்ணனாகிய வீமசேனன்’ என்றும் பொருள் பட்டு நிற்கின்றன.

தன், தம் எனும் பெயர்களை அடுத்துவரும் பொழுது (தன்+முன், தம்+முன்) இச்சொல் படர்க்கைப் பொருளையும் ‘எம்’ எனும் பெயரை அடுத்து வரும்பொழுது தன்மை இடத்தையும் தந்து நிற்கின்றது. எம், தம் எனும் சொற்கள் பன்மைச் சொற்களாக இருப்பினும் சங்கநூலில் ஒருமைப் பொருளிலேயே வழங்கப் பெற்றுள்ளன.

எம்முன், தன்முன் எனும் சொற்கள் தலா ஓரிடத்திலும், தம்முன் எனும் சொல் இரண்டு இடங்களிலும் சங்க நூற்களில் வழங்கப் பெற்றுள்ளன.

[தன் / எம் / தம்] + முன் = [தன்முன் / எம்முன் / தம்முன்] = அண்ணன்

### 5.1.1.2. ஐ, ஐயர் ( ஐ + அர் )

ஐ எனும் சொல்லும் அதிலிருந்து பெறப்பட்ட ஐயர் எனும் சொல்லும் என், தன், நின் எனும் பெயர்களுடன் இணைந்த சொற்களும் அண்ணன் உறவுமுறையைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

'ஐ' எனும் சொல் ஒரு பலபொருள் சொல்லாகும். இச்சொல் சங்க நூற்களில் பின்வரும் பொருள்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

ஐ = 1. ஐந்து 2. தலைவன் 3. இறைவன் 4. தந்தை 5. வியப்பு 6. அழகு 7. மென்மை 8. விரைவு 9. ஒலிக்குறிப்பு

ஐந்து எனும் பொருளில் பதிமூன்று இடங்களிலும் தலைவன் எனும் பொருளில் பன்னிரெண்டு இடங்களிலும் இச்சொல் சங்கநூற்களில் வழங்கப் பெற்றுள்ளது. தமிழ்ப் பேரகராதியில் இச்சொல்லிற்குப் பதிமூன்று பொருள்கள் தரப்பெற்றுள்ளன. அவை:

1. வியப்பு 2. அழகு 3. மென்மை 4. நுண்மை 5. கோழை 6. கபவியாதி 7. ஐந்தாம் இசையின் எழுத்து 8. தலைவன் 9. கணவன் 10. அரசன் 11. ஆசான் 12. பிதா 13. சவ்வீர பாஷாணம்

இச்சொல்லிற்கு உறவுமுறைப் பொருள்களாகக் கணவன், தந்தை என்பன குறிப்பிடப்பெற்றுள்ளன ( காண்க:3.1.6, 4.1.7 ) .

மேற்காணும் பொருள்களில் அண்ணன் எனும் பொருள் இடம்பெறவில்லை. தலைமைத் தன்மை எனும் பொருளை அடிப்படையாகக் கொண்டு இவ்வுறவுமுறைப் பொருள் தோன்றியுள்ளது எனக் கொள்ளலாம்.

'தன்', 'என்' எனும் பெயர்களுடன் இணைந்து இரண்டு இடங்களில் இச்சொல் வழங்கப்பெற்றுள்ளது. இதைப் பின்வரும் பாடல் அடிகளில் காணலாம்.

மாக்கண் மலர்ந்த முலையள் <u>தன்னையும்</u>
( புறம்.352-14 )

இனத்துளான் <u>என்னைக்குக்</u> கலத்தோடு செல்வதோ
( கலி. 108-32 )

( = என் தமையனுக்கு உணவைக் கொண்டு கொடுக்கும் )

ஐயர் எனும் சொல் என்னையர், நின்னையர், தன்னையர் எனும் வடிவங்களில் சங்கத் தமிழில் வழக்கிலுள்ளது.

என் + ஐயர் ( ஐ+அர் ) ⟶ என்னையர்

நின் + ஐயர் ( ஐ+அர் ) ⟶ நின்னையர்

தன் + ஐயர் ( ஐ+அர் ) ⟶ தன்னையர்

**என்னையர்**

இருங்கல் அடுக்கத்து என்னையர் உழுத ( நற்.122-1 )

( = பெரிய மலையின் பக்கத்தில் என்தமையன் மார் உழுத.... )

பன்மீன் வேட்டத்து என்னையர் திமிலே ( குறு.123-5 )

( = நம் தமையனாருடைய படகுகள்... )

என்னையர்க்குய்த் துரைத்தாள் யாய் ( கலி.39-21 )

( = என் தமையன்மார்க்குத் தாய் உரைத்தாள் )

பன்மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய ( அகம்.240-6 )

( = என் அண்ணன்மார்க்குக் காட்டிய )

இருங்கல் அடுக்கத் தென்னையர் உழுத ( அகம்.302-9 )

( = என் தமையன்மார் உழுத )

என்னையர் எனும் சொல் எல்லா இடங்களிலும் தோழியின் அண்ணனைக் குறித்து வழங்கப்பெற்றுள்ளது இவண் குறிப்பிடத்தக்கது. இச்சொல் சங்க நூற்களில் ஐந்து இடங்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

**நின்னையர்**

அன்னையலல் தாங்கி நின்னையர் ( அகம்.259-16 )

( = நின்னுடைய தமையன்மாருடைய )

மேற்கண்ட அகநானூற்றுப் பாடல் அடியில் மட்டும் இச்சொல் வழங்கப் பெற்றுள்ளது.

**தன்னையர்**

இச்சொல் சங்க நூற்களில் எட்டு இடங்களில் வழங்கப்பெற்றுள்ளது.

வருதலானார் வேந்தர் தன்னையர் ( புறம்.337-16 )

( = இவள் உடன்பிறந்தவர்கள்..... )

அடுமுரண் முன்பில் தன்னையர் ஏந்திய
( புறம்.350-8 )

( = வலிமையுடைய தமையன்மார் )

எண்ணாமையலன் தந்தை தன்னையர்
( புறம்.355-4 )

மால் இருள்நடுநாள் போகி தன்னையர்
( அகம்.126-17 )

( = தன் அண்ணன்மார் நள்ளிரவில் கரிய இருளில்... )

வரிஅணி பனைதோள் வார்செவி தன்னையர்
( அகம்.393-8 )

கல்லாக்கதவர் தன்னையர் ஆகவும் ( நற்.127-5 )

( = தன் ஐயன்மார் தமது தொழில் இன்றி... )

கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
( ஐங். 365-1 )

( = தன் தமையன்மார் கொண்டு வந்த... )

புன்கண் மடமான் நேர்படத் தன்னையர்
( குறு. 272-4 )

( = அவள் தமையன்மார் )

என்னையர், நின்னையர், தன்னையர் எனும் மூன்று சொற்களும் பன்மைப்பொருளிலே பயன்படுத்தப் பெற்றுள்ளன.

**தன்னைமார்**

தன்னையர் எனும் சொல்லுக்கு இணையாக தன்னைமார் எனும் சொல்லும் அண்ணனைக் குறிக்கச் சங்கநூற்களில் வழங்கப் பெற்றுள்ளது. அர் எனும் பன்மை விகுதிக்குப் பதிலாக மார் எனும் பன்மை விகுதி தன்னை ( தன்+ஐ ) எனும் சொல்லுடன் இணைந்து வந்துள்ளது.

தன்+ஐ+அர் ⟶ தன்னையர்



மார் ⟶ தன்னைமார்

பின்வரும் எடுத்துக்காட்டுகளில் தன்னைமார் பயின்று வந்துள்ளதைக் காண இயலும்.

மாட்சியர் மற்றிவள் <u>தன்னைமாரே</u> ( புறம். 342-15 )

( = இவள் உடன்பிறந்தோர்கள் )

அளியர் தாமே இவள் <u>தன்னைமாரே</u> ( புறம்.345-12 )

அஞ்சுதகவுடையர் இவள் <u>தன்னைமாரே</u>
( புறம். 353-17 )

மூன்று வரவிடங்களும் புறநானூற்றில் பயின்று வந்துள்ளன. மூன்று இடங்களிலும் இச்சொல் பெண்பால் பெயருடன் ( இவள் ) இணைந்து காணப்படுகின்றது.

இவள் ..... தன்னைமார்

**5.1.1.3. ஐயன்மார்**

ஐ எனும் சொல் அன் எனும் ஆண்பால் விகுதியுடனும் மார் எனும் பன்மை விகுதியுடனும் இணைந்து 'ஐயன்மார்' தோற்றம் பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் கலித் தொகையில் இச்சொல் ஓரிடத்தில் வழங்கப் பெற்றுள்ளது.

..... .... .... தந்தையோடு
<u>ஐயன்மார்</u> எல்லாம் ஒருங்கு ( கலி.107-34 )

( = தந்தையோடு தமையன்மாரெல்லாம் சேரக் கூடியிருந்து )

**5.1.1.4. இறை**

பொதுப்பொருளைக் கொண்ட இறை தமையனைக் குறித்தும் ஓரிடத்தில் வழங்கப்பட்டுள்ளது.

இல்லத்துணைக்குப் பால் எய்த <u>இறை</u>யமன் ( பரி.11-8 )

( = எமனைத் தமையனாகக் கொண்ட சனிக்கோள் )

வருகை இடங்கள்:

அண்ணன் உறவைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ள ஐந்து சொற்களில் ஐயர் எனும் சொல் மட்டும் பரவலாக வழங்கப் பெற்றுள்ள ஒரு சொல்லாக விளங்குகின்றது. இச்சொல் சங்கநூற்களில் பதினான்கு இடங்களில் காணப்படுகின்றது ( தன்னையர்-8, என்னையர்-5,

நின்னையர்-1). இதை அடுத்து 'ஐ' ஐந்து இடங்களில் வழங்கப்பெற்றுள்ளது (என்னை-1, தன்னை-1, தன்னைமார்-3). பொதுச் சொற்களான 'முன்' 'இறை' என்பன தலா நான்கு இடங்களிலும் ஓரிடத்திலும் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

ஐ எனும் சொல்லின் அடியாகத் தோன்றிய ஐயர் எனும் சொல்லே அண்ணன் உறவுமுறைக்குரிய சொல்லாகும். ஐயர் எனும் சொல் முதலில் இறைவனைக் குறித்து நின்றது. பின்னர் இச்சொல் தலைமைத் தன்மையுடைய பெரியவரைக் குறித்து வழங்கும் சொல்லாகப் பொருள் சிறப்புப் பெற்றுள்ளது. ஆண்டவன் அடியாரை ஐயர் என்பது மரபு என்று தாயம்மாள் அறவாணன் (ப.206) குறிப்பிடுவார்.

தற்பொழுது வழக்கிலுள்ள தமையன் எனும் உறவுமுறைப் பெயரிலுள்ள (தம்+ஐயன்) ஐயன் என்பதே பண்டைய வழக்காக உள்ளது இவண் குறிப்பிடத்தக்கது. கன்னடம் (அண்ணா), தெலுங்கு (அண்ணா/ அண்ணையா), கொடகு (அண்ணே), துளு (அண்ணெ), கோலாமி (அண்ணாக்) ஆகிய மொழிகளில் காணப்படும் அண் ஒரு திராவிடமொழிச் சொல்லாக மீட்டுருவாக்கம் செய்யப் பெறுகின்றது. மீட்டுருவாக்கம் செய்யப்பெற்ற இச்சொல் சங்க நூற்களில் வழங்கப்படாதது ஆராய்ந்து நோக்கத்தக்க ஒன்றாகும்.

இதுவரை கண்ட கருத்துக்களின் அடிப்படையில் பின்வருவனவற்றைத் தொகுத்து வழங்கலாம்.

* சங்க நூற்களில் அண்ணனைக் குறிக்கத் தனி உறவுமுறைச் சொற்கள் வழக்கில் இல்லை.
* ஐ எனும் சொல்லும் அதன் அடியாகத் தோன்றிய சொற்களுமே அண்ணன் உறவைக் குறிக்கும் உறவுமுறைச் சொற்களாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.
* 'முன்', 'இறை' எனும் பொதுச் சொற்களும் அண்ணன் உறவைக் குறிக்கும் வண்ணம் பொருள் சிறப்புற்றுள்ளன.
* அண்ணன் உறவுமுறைக்குரிய சொற்கள் பின்வரும் சொல்லமைப்பைப் பெற்றுள்ளன.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| என் | + ஐ + | அர் | → | என்னை | - | என்னையர் |
| நின் | | மார் | → | - | - | நின்னையர் |
| தன் | | அர் | → | தன்னை | - | தன்னையர் |
| | | | | | - | ஐயன்மார் |
| | | | | | - | தன்னைமார் |




## 5.2. தம்பி உறவுமுறை

உடன்பிறப்பு உறவுமுறையில் ஆண், பெண் தனியன்களின் பின் பிறந்த ஆண் தம்பி உறவுமுறைக்குரியவர். இது தவிரத் தாய், தந்தையின் உடன்பிறந்தவர்களின் ஆண் பிள்ளைகளும் தம்பி உறவுமுறைக்குரியவர் ஆவார்கள் ( காண்க: 5.0 ).

### 5.2.1. நிகண்டுகளில் தம்பி

பிங்கல நிகண்டில் தம்பியைக் குறிக்க ஏழு சொற்கள் தரப்பெற்றுள்ளன.

> பின்னவன் இளவல் பின்தோன்றல் கனிட்டன்
> எம்பியும் அனுசனும் இளையோன் பெயரே ( பிங்.911 )

பின்னவன், இளவல், பின்தோன்றல், கனிட்டன், எம்பி, இளையோன், அனுசன் என்பன அவ்வேழு சொற்களாகும். நாமதீப நிகண்டில்,

> தம்பி பின்னோன் மூளுமனிச்சன் கனிட்டன்
> ஏத்திளவ லைந்து மிளையோன் ( நாமதீப.191 )

பிங்கலநிகண்டில் இடம்பெறாத தம்பி எனும் சொல் நாமதீப நிகண்டில் இடம்பெற்றுள்ளது. மேற்காணும் இரண்டு நிகண்டுகளிலும் இடம்பெற்றுள்ள சொற்களில் பெரும்பாலானவை சங்க நூற்களில் வழக்கில் இல்லை எனினும் பிற்கால இலக்கியங்களில் இவற்றின் ஆளுமையைக் காண இயலுகின்றது.

பின் எனும் சொல்லின் அடியாகப் 'பின்னவன்', 'பின்னோன்', 'பின்தோன்றல்' எனும் சொற்கள் நிகண்டுகளில் தரப்பெற்றுள்ளன. 'கனிட்டன்' என்பது 'கனிஷ்டன்' எனும்

சொல்லின் தற்பவ வடிவமாகும். இளையோன் இளை எனும் சொல்லின் அடியாகத் தோன்றிய சொல்லாகும். தம்பி எனும் சொல்லைத் தவிர பிற சொற்கள் இரண்டாம் வகையைச் சார்ந்த சொற்களாகும்.

### 5.2.2. சங்க இலக்கியத்தில் தம்பி

பிற உறவுமுறைச் சொற்களைப் போல் இல்லாமல் தம்பி உறவுமுறையைக் குறிக்க இரண்டு சொற்கள் மட்டுமே சங்க இலக்கியத்தில் வழங்கப்பெற்றுள்ளன. அவை: 1. தம்பி 2. இளையன் என்பனவாகும்.

#### 5.2.2.1. தம்பி

உடன்பிறந்தவரில் இளைய உறவுமுறையைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் சொல்லான தம்பி பரவலாக ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்ற ஒரு சொல்லாகும். சங்க நூலான புறநானூற்றில் மட்டும் தம்பி எனும் சொல் மூன்று இடங்களில் பயின்று வந்துள்ளது. இதைப் பின்வரும் எடுத்துக் காட்டுகளில் காணலாம்:

தேர்வண் கிள்ளி தம்பி வார்கோல் ( புறம்.43-10 )

கிள்ளியின் தம்பி எனும் பொருளில் பயன்படுத்தப் பெற்றுள்ள இச்சொல் மேற்காணும் புறநானூற்று அடியில் விளிப்பொருளில் வழங்கப் பெற்றுள்ளது.

நெருநல் எல்லை நீ எறிந்தோன் <u>தம்பி</u> ( புறம்.300-3 )

( = நேற்றுப் பகலில் நின்னால் கொல்லபட்டவன் உடைய தம்பி )

எம்முன் தப்பியோன் <u>தம்பியொடு</u> ஓராங்கு ( புறம்.304-5 )

( = எம் தனையனைக் கொன்றவனுடைய தம்பியுடன் ஒருபடியாக )

'தம்பி' எனும் சொல் பிற்காலத்தில் பரவலாக வழங்கப்பெறும் ஒரு சொல்லாகத் திகழ்கின்றது. அண்ணனைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ள சொல்லான முன் ( காண்க: 5.1.1.1 ) எவ்வாறு எம், தம், தன் எனும் பெயர்களுடன் இணைந்து செயல்படுகின்றதோ அதைப் போன்று பின் எனும் சொல் தம் எனும் படர்க்கைப் பெயருடன் இணைந்து தம்பி ஆக்கம் பெற்றுள்ளதாகக்

கூறுவர். எம்பி, உம்பி, நும்பி எனும் சொற்கள் சங்க நூற்களில் வழக்கில் இல்லை எனினும் பிற்கால இலக்கியத்தில் இச்சொற்களைக் காண இயலும் (எம்+பி, நும்+பி, உம்+பி). தம்பி எனும் சொல் அவர்தம்+பின் > அவர்தம்பின் என்ற அமைப்பில் உள்ள சாரியையை முறைப்பெயராகக் கொண்டதன் விளைவாகத் தோன்றியது என்பார் தாயம்மாள் அறவாணன் (1987, ப.219). மேலும் தம்+பின் என்பதன் வழக்கில் ஈற்றிலுள்ள மெய்யெழுத்துக் கெட்டு 'தம்பி' ஆயிற்று என்பார் அவர்.

அவர்+தம்+பின் ⟶ அவர்தம்பின் ⟶ அவர்தம்பி

தெலுங்கில் தம்மடு, தம்முகு, தம்முண்டு என்ற சொற்களும், கன்னடத்தில் தம்மா என்பதும், கொடகு மொழியில் தம்மையன் என்பதும், துளுவில் தம்மைய்யா என்ற சொல்லும், தம் எனும் அடிச்செல்லைக் கொண்டுள்ளது இவண் சிறப்பாக நோக்கத்தக்கது.

### 5.2.2.2. இளையன்

இளை எனும் சொல்லின் அடியாகத் தோன்றிய இளையன் சங்க நூலான பரிபாடலில் ஓரிடத்தில் தம்பியைக் குறிக்க வழங்கப்பெற்றுள்ளது.

> ............ வாலியோற்கவன்
> இளையன் என்போர்க் கிளையை ஆதலும் (பரி.2-21)
>
> 'வெண்மை நிறமுடைய பலதேவனுக்கு இவன்
> (கண்ணன்) தம்பி ஆதலும்'

என்பது இவ்வடியின் பொருளாகும். தம்பி என்பது இங்கு கண்ணனைக் குறிக்க வழங்கப்பெற்றுள்ளது.

'பிறங்கடை' எனும் சொல்லும் தம்பியைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளதாகத் தாயம்மாள் அறவாணன் குறிப்பிடுவார். அவர் குறிப்பிடும் 'முந்நீர் வண்ணன் பிறங்கடை' (பெரும். 30) எனும் அடியில் பிறங்கடை தம்பி என்பதைவிடப் பின்னிடத்து உள்ளவன் என்ற பொருளையே பெற்று நிற்கின்றது.

மேற்கண்ட கருத்துக்களின் அடிப்படையில் பின்வருவனவற்றைத் தொகுத்து வழங்கலாம்:

* தம்பி எனும் சொல் சங்க இலக்கியத்தில் புறநானூற்றில் மட்டும் வழக்கிலுள்ளது.

* பொதுச் சொல்லான இளையன் ஓரிடத்தில் தம்பி உறவைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

### 5.3. அக்காள்

உடன்பிறப்பு உறவுமுறையில் தனியனுக்கு முன்பிறந்த பெண் அக்காள் உறவுமுறைக்குரியவர் ஆவார். முன்னர்க் குறிப்பிட்டது போல் ஆண், பெண் தனியன்களின் தந்தையின் உடன்பிறந்த ஆண்களின் வயதில் மூத்த பெண்களும் தாயின் உடன்பிறந்த சகோதரிகளில் வயதில் மூத்த பெண்களும் அக்காள் உறவுமுறைக்குரியவர் ஆவார்கள் ( காண்க: 5.0 ). ஓர் ஆணுக்கு மனைவியின்வழியும் ஒரு பெண்ணுக்குக் கணவர் வழியும் அக்காள் உறவுமுறை ஏற்படுவதுண்டு.

### 5.3.0. நிகண்டுகளில் அக்காள்

பிங்கல நிகண்டில் அக்காள் உறவுமுறையைக் குறிக்க ஏழு சொற்கள் தரப்பெற்றுள்ளன.

அன்னை செவிலி தௌவை சேட்டை
முன்னவள் மூத்தவள் முன்பிறந்தாள் பெயர் ( பிங். 913 )

அன்னை, செவிலி, தௌவை, சேட்டை, முன்னவள், முன் பிறந்தாள், மூத்தவள் என்பன அச்சொற்கள் ஆகும்.

திவாகர நிகண்டில் தௌவை, சேட்டை, முன் பிறந்தாள் எனும் மூன்று சொற்கள் குறிக்கப் பெற்றுள்ளன.

தௌவை முன்பிறந்தாள் சேட்டையாகும்
( திவா.மக்கட்.பெயர்த் தொகுதி, ப.43 )

நிகண்டுகளில் குறிப்பிடப்பட்டவற்றுள் தௌவை, சேட்டை ( ஜியேஸ்டா ) என்பன வடமொழிச் சொற்களாகும். முன்னவள், முன்பிறந்தாள் என்பன முன் எனும் சொல்லிலிருந்து தோன்றியவையாகும். மூத்தவள் எனும் சொல் வயதில் மூத்த பெண்ணைக் குறிக்கும் பொதுச் சொல்லாகும். தாய் உறவுமுறைக்குரிய சொற்களான அன்னை, செவிலி என்பன அக்காள் உறவுமுறையிலும் இடம் பெற்றுள்ளது சிந்தித்து நோக்கத்தக்கது. சங்க நூற்களில்

இத்தகைய வழக்காறுகளைக் காண இயலவில்லை. நிகண்டுகளில் குறிக்கப் பெற்றுள்ள சொற்களில் பெரும்பான்மையானவை சங்கநூற்களில் வழங்கப்பெறவில்லை. பிற்கால இலக்கியங்களில் பயன்படுத்தப்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாகத் தன்னை, மூத்தாள், அக்காள், அக்கை, தமக்கை எனும் சொற்களைக் கூறலாம்.

### 5.3.1. சங்க இலக்கியத்தில் அக்காள்

சங்க இலக்கியத்தில் அக்காள் உறவுமுறையைக் குறிக்கும் சூழல்கள் அதிகம் இல்லை எனலாம். எவ்வை எனும் சொல் மட்டும் அக்காள் உறவுமுறையில் வழங்கப்பெற்றுள்ளது. சங்க இலக்கிய ஐங்குறுநூற்றில் இரண்டு இடங்களில் இச்சொல்லின் பயன்பாட்டைக் காண இயலுகின்றது.

தண்டுறையூரனை எவ்வை எம்வயின்
வருதல் வேண்டுதும் ( ஐங். 88-2 )

அம்ம வாழி பாண எவ்வைக்
கெவன் பெரிதளிக்கும் என்ப.... ( ஐங். 89-1 )

மேற்கண்ட இரண்டு இடங்களும் காதற்பரத்தைத் தலைவியை நோக்கி அக்காள் என்று குறிப்பிடுவது போன்று அமைந்துள்ளன. இவண் 'எவ்வை' இரத்த உறவைக் குறியாது சக்களத்தி உறவைக் குறிப்பது போன்று கையாளப் பெற்றுள்ளது. பரத்தை பாணனிடமும் ( ஐங்.89-1 ) பாங்காயினாரிடமும் ( ஐங்.98-2 ) தலைவியை அக்காள் என்று குறிப்பிடுகின்றார். பெண் தனியன் தனது கணவரின் வழி பெறும் அக்காள் உறவை இச்சூழல் குறிப்பிடுகின்றது.

அக்காள் உறவுமுறையைக் குறிக்கச் சங்க நூற்களில் வழங்கப்பெற்றுள்ள உறவுமுறைச் சொற்களைத் தாயம்மாள் அறவாணன் பின்வருமாறு விளக்குவார்.

"அக்கா என்பது தமிழிலக்கிய வழக்கு.....

தம் + அப்பன் > தமப்பன் ஆனதுபோல் தம்+அக்கை தமக்கை ஆயிற்று. தவ்வை என்றால் தமக்கை என்று பொருள். இரண்டாம் இராசேந்திரன் கல்வெட்டில் அவ்வை, குந்தவ்வை என்பனவும்....... அவ்வை என்று அம்மாவைக் குறிக்கும் முறைப்பெயருக்கும் தவ்வை என்று தமக்கையைக் குறிக்கும் முறைப் பெயருக்கும் ஊடே இருந்த ஒலி நெருக்கத்தால்

நேரும் குழப்பத்தைத் தவிர்க்க வேண்டி அக்கா என்ற புதுச் சொல் தோன்றினது போலும்.... அக்கை என்பதே பழஞ் சொல். அச்சொல்லே விளி ஏற்கும்போது ஈற்றயல் திரிந்து அக்கா என நீண்டது எனலாம். தமக்கை எனும் சொல் தம்+அக்கை என்பதாகும். தமக்கை என்பது பிறழ் பிரிப்பே..." (பக்.260-61)

அக்கை —விளி→ அக்கா —ள்→ அக்காள் அக்கா
(விளி/குறிசொல்)

எவ்வை, தவ்வை என்பது போல் நுவ்வை என்பதும் வழக்காக இருக்கலாம்.

எம் / என் + அவ்வை → எவ்வை

தம் + அவ்வை → தவ்வை

நும் + அவ்வை → நுவ்வை

மேற்கண்ட பகுப்பாய்விலிருந்து அவ்வை என்பதே அக்கா உறவுமுறைக்குரிய சொல்லாகத் தோற்றமளிக்கின்றது. அவ்வை என்பது தாயைக் குறிக்கும் சொல்லாகும். தாயைக் குறிக்கும் சொற்கள் (அன்னை, செவிலி) அக்காள் உறவுமுறைக்கும் உரிய சொற்களாக நிகண்டுகளில் தரப்பெற்றுள்ளது இக்கருத்தை மேலும் வலுப்படுத்துகிறது.

கன்னடம், துளு, மராத்தி, கோலாமி, கோத்தா போன்ற மொழிகளில் வழங்கும் அக்கா எனும் சொல் திராவிடச் சொல்லின் ஆட்சியை நினைவுறுத்துவதாக உள்ளது. திராவிடச் சொற்பிறப்பு அகரமுதலி மூத்தாள் எனும் சொல்லை அக்காள் உறவுமுறைச் சொல்லாகக் குறிப்பிட்டுள்ளது (DED 4057).

மேற்கூறிய கருத்துக்களிலிருந்து பின்வருவனவற்றைத் தொகுத்தளிக்கலாம்:

* சங்க இலக்கியத்தில் அக்காள் உறவுமுறையைக் குறிக்கும் சூழல்கள் அதிகம் இல்லை.
* அக்காள் உறவுமுறையைக் குறிக்க எவ்வை என்ற சொல் வழங்கப்பெற்றுள்ளது.
* எவ்வை இரத்த உறவைக் குறிக்கப் பயன்படுத்தப் பெறவில்லை.

## 5.4. தங்கை உறவுமுறை

தனியனுடன் பிறந்த வயதில் குறைந்த பெண் தங்கை உறவுமுறைக்குரியவராவார். அதாவது சகோதரிகளில் இளைய சகோதரி தங்கை என்று அழைக்கப் படுகின்றார். அப்பாவுடன் பிறந்த ஆண்களின் மற்றும் அம்மாவுடன் பிறந்த பெண்களின் தனியனுக்கு இளைய பெண் பிள்ளைகள் தங்கை உறவுமுறைக் குரியவர் ஆவர் ( காண்க: 5.0 ).

### 5.4.1. தொல்காப்பியத்திலும் நிகண்டுகளிலும் தங்கை

தொல்காப்பியத்தில் தங்கை உறவுமுறையைக் குறிக்க எங்கை எனும் சொல் வழங்கப் பெற்றுள்ளது.

எங்கையர்க்கு உரையென இரத்தற் கண்ணும்
( தொல்.1093-16 )

காதல் எங்கையர் காணின் நன்றென
( தொல்.1093-30 )

மேற்கண்ட இரண்டு இடங்களிலும் தலைவி காதற் பரத்தையரைத் தங்கை எனும் உறவுமூலம் குறிப்பிடுகின்றார். இரண்டு இடங்களிலுமே எங்கை எனும் சொல் நேரடியாக உறவுமுறையைக் குறிக்கப் பயன்படுத்தப் பெறவில்லை என்பது சிறப்பாக நோக்கத்தக்கது. எங்கையர், எம்+கை+அர் எனும் சொல்லமைப்பைக் கொண்டது. 'எம்' தன்மைப் பன்மைப்பெயராகவும் 'அர்' பன்மை விகுதியாகவும் உள்ளன. 'கை' எனும் சொல்லே தங்கையைக் குறிக்கும் சொல்லாக உள்ளது. இதுபற்றிப் பின்னர் விரிவாகக் காணலாம்.

நிகண்டுகளில் குறிப்பாகப் பிங்கலநிகண்டில் பின்னை, கையை, தங்கை எனும் சொற்களும் திவாகரநிகண்டில் மேற்கண்ட சொற்களுடன் கூடுதலாக எங்கை எனும் சொல்லும் தரப்பெற்றுள்ளன. நாமதீப நிகண்டில் கை, அனிச்சை, அனிட்டை எனும் சொற்கள் குறிக்கப் பெற்றுள்ளன.

பின்னை கையை தங்கை பின் பிறந்தாள் ( பிங்.914 )
தங்கை பின்னை எங்கையாகும் ( திவா.ப.4 )
கை அனிச்சை தங்கை அனிட்டை ( நாமதீப.191 )

பின்னை பின்+ஐ எனும் சொல்லமைப்பைக் கொண்டது. கை, கையை, எங்கை, தங்கை என்பன தம்முள் தொடர்புடையன.

எல்லாச் சொற்களும் கை எனும் பொதுச்சொல்லைக் கொண்டு விளங்குகின்றன.

எம் + கை ⟶ எங்கை

தம் + கை ⟶ தங்கை

கை + யை ⟶ கையை

அனிச்சை, அனிட்டை என்பன வடமொழிச் சொற்களாகும்.

'இளை' எனும் சொல்லின் அடியாகத் தோன்றிய இளங்கிளை, இளைச்சி, இளையாள் என்பன இடைக்கால இலக்கியத்தில் பரவலாக வழங்கப் பெற்றுள்ளன. நிகண்டுகளின் பட்டியலில் இச்சொற்கள் இடம்பெறவில்லை என்பது இவண் குறிப்பிடத் தக்கது.

### 5.4.2. சங்க இலக்கியத்தில் தங்கை

சங்க நூற்களில் இரத்த உறவுடைய தங்கையைப் பற்றிய குறிப்புக்கள் எதுவும் இல்லை. எனினும் தங்கை உறவைக் குறிக்கும் சில சொற்கள் சங்க நூற்களில் வழங்கப்பெற்றுள்ளன. அவற்றின் பயன்பாட்டையும் சொல்லமைப்பையும் சுருக்கமாகக் காண்போம். சங்க நூற்களில் 1. நுங்கை, 2. நுவ்வை, 3. தங்கை எனும் மூன்று சொற்கள் வழங்கப் பெற்றுள்ளன.

#### 5.4.2.1. நுங்கை

நுங்கை, நும் எனும் முன்னிலைப் பன்மைப் பெயருடன் இணைந்த சொல்லாகும். ( நும் + கை > நுங்கை ).

<u>நுங்கை</u> யாகுவன் என .... ( அகம்.386-12 )

மேற்காணும் அகநானூற்றுப் பாடல் அடியில் பரத்தை தலைவியை நோக்கி 'நான் உனக்குத் தங்கை ஆவேன்' என்ற பொருள்பட உரையாடியதாகத் தோழி குறிப்பிடுவாள். இங்குத் தலைவிக்கும் பரத்தையருக்கும் இடைப்பட்ட உறவு தங்கை உறவாகக் கொள்ளப்பட்டுள்ளது.

#### 5.4.2.2. நுவ்வை

நுவ்வை எனும் சொல் நும் எனும் பன்மைப் பெயரைப் பெற்றுள்ளது. இச்சொல்லின் பயன்பாடு ஊன்றி நோக்கத்தக்கது.

நும்மினும் சிறந்தது நுவ்வை ஆகுமென்று
அன்னை கூறினள் புன்னையது சிறப்பே ( நற்.172:4-5 )

இப்பாடலில் நுவ்வை உன் தங்கை எனும் பொருளில் வழங்கப் பெற்றுள்ளது. தாய் தன் மகளிடம் நீ வளர்த்து வரும் புன்னை உன்னைவிடச் சிறந்தது என்றும் அது உனக்குத் தங்கை ஆகும் தன்மையது என்றும் கூறுகின்றாள். இங்குத் தங்கை உறவு புன்னை மரத்திற்கு விரிவு செய்யப்பெற்றுள்ளது. கணவன் உறவு முறை குறித்த சொற்கள் ஆமை, செந்நாய் போன்றவற்றிற்கு விரிவு பெற்றுள்ளது இங்கு ஒப்புநோக்கத்தக்கது. இச்சொல்லின் சொல்லமைப்பை இரண்டு வழிகளில் விளக்கலாம்.

நும் + அவ்வை ⟶ நும்மவ்வை ⟶ நுவ்வை

நும் + வை ⟶ நுவ்வை

நும் + கை > நுங்கை என்பது போல் நும்+கை > நுவ்வை என்றாயிற்று என்பார் சுப்பிரமணியன் என்று குறிப்பிடுவார் தாயம்மாள் அறவாணன் ( ப.276 ). தாயைக் குறிக்கும் 'அவ்வை' மொழிச் சூழல் மூலம் தங்கையைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளது எனக் கொள்ளலாம்.

### 5.4.2.3. தங்கை

தங்கை எனும் சொல் சங்க இலக்கியத்தில் ஆறு இடங்களில் காணப்படுகின்றது. இச்சொல்லின் பொருள் சிறப்பாக ஆராய்ந்து நோக்கத்தக்கது. பின்வரும் பாடல் அடிகளில் இச்சொல்லின் பயன்பாட்டைக் காணலாம்:

கானவர் தங்கை ( அகம்.132-5 )
முளமா வல்சிஎயினர் தங்கை ( ஐங்.364-1 )
கொலை வில் எயினர் தங்கை ( ஐங்.363-2 )
வல்வில் கானவர் தங்கை ( குறு.335-6 )
துளர்எறி நுண்துகள் களைஞர் தங்கை ( குறு.392.5 )
உரன் கெழு நோன் பகட்டுழவர் தங்கை ( சிறு.190 )

ஓரிடத்தில் தங்கை, அர் எனும் பன்மை விகுதியுடன் இணைந்து தங்கையர் என்ற அமைப்பில் பன்மைப் பொருளில் வழங்கப் பெற்றுள்ளது.

தழையணி அல்குல் செல்வத் தங்கையர் ( அகம்.320.3 )

தங்கை, உறவுமுறைப் பொருளைக் குறித்து நிற்கின்றது என்றும் உறவுமுறையைக் குறியாது பொதுநிலையில் மகளிரைக்

குறித்து நிற்கின்றது என்றும் இருவேறு கருத்துக்கள் நிலவுகின்றன. இச் சொல்லின் மொழிச்சூழல்களைக் காணின் அவை எயினர், கானவர், உழவர், கஜைஞர் எனும் பொது குலப்பெயர்களைக் கொண்டு வந்துள்ளன.

எயினர்தங்கை, கானவர்தங்கை, உழவர்தங்கை என்பன எயினர் குலத்தில் பிறந்த பெண், கானவர் குலத்தில் பிறந்த பெண் என உரைகளின்வழி பொருள் வெளிப்பட்டு நிற்கின்றன. மேலும் உரையாசிரியர்கள் இவ்வாறு கூறுவது பண்டைத் தமிழர் தம் தனி நாகரிகம் என்றும் குறிப்பிடுவர். தங்கை எனும் சொல் இடம்பெறும் பாடல் அடிகளின் சூழல்களை உற்றுநோக்கின் அவை உறவுமுறைப் பொருளைப் பெறாது பொதுப் பொருளிலேயே பயன்படுத்தப் பெற்றுள்ளதைக் காண இயலும்.

தற்காலத்தில் தங்கை எனும் சொல் உறவுமுறைப் பொருளுடன் பொதுப் பொருளையும் கொண்டு நிற்கின்றது. பேசுபவரின் வயதைவிடக் குறைந்த வயதுடைய பெண்ணைத் தங்கை என்று அழைக்கும் முறை இன்று வழக்கிலுள்ளது. சங்க இலக்கிய வரவிடங்களை நோக்கின் தங்கை எனும் சொல் பொதுப்பொருளை மட்டும் கொண்டுள்ள நிலையைக் காண இயலும். தற்காலப் பயன்பாட்டிற்கு எதிரான பயன்பாட்டைச் சங்க நூற்களின்வழி கண்டு கொள்ளலாம்.

தங்கை = உறவு ⟶ பொதுப் பொருள்/தற்காலம்
தங்கை = பொதுப் பொருள் ⟶ உறவு/சங்ககாலம்

தங்கை எனும் சொல்லின் சொற்பிறப்பை ஆராயும் 'எமினோ' (ப.124) தம்+கை எனப் பகுத்து தம் என்பதைத் தன்மைப் பன்மைப் பெயராகவும் கை என்பதை உறவுமுறைச் சொல்லாகவும் கொள்வார். இதற்கு நுங்கை, எங்கை எனும் சொற்களை எடுத்துக்காட்டாகவும் கூறுவார். கை எனும் சொல்லின் நிலையைக் குறிப்பிடும் எமினோ நிகண்டுகளில் குறிப்பிடப்பெற்றுள்ள கையை எனும் சொல்லுடன் ஒப்பிடுவார்.

நுங்கை, நுவ்வை, தங்கை எனும் சொற்கள் நும், தம் எனும் பெயர்களைக் கொண்டுள்ளன. மூன்று சொற்களுமே இரத்த உறவல்லாதவரைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. நுங்கை, நுவ்வை எனும் சொற்கள் முன்னிலைப் பொருளைக் குறிப்பிட்டாலும் (நும்+தங்கை) தங்கை எனும் சொல் படர்க்கைப் பொருளிலே பயன்படுத்தப் பெற்றுள்ளது.

தற்காலத்தில் இச்சொல் எவ்வித வரையறையும் இன்றித் தன்மை, முன்னிலை, படர்க்கை எனும் பெயர்களுடன் இணைந்து வழங்கப்படுகின்றது.

கன்னடம் ( தங்கி ), கொடகு ( தங்கெ ), துளு ( தங்கி, தங்கடி ), கூய் ( தங்கி ), கூலி ( துங்கி ), மலையாளம் ( தங்கா, தங்கச்சி ) மொழிகளில் வழங்கப்படும் சொற்கள் தங்கை எனும் சொல்லை ஒலியமைப்பில் ஒத்துள்ளன. மேற்காணும் ஒப்புமையின் அடிப்படையில் தங்கை எனும் சொல்லையே பெருவழக்குச் சொல்லாகக் கொள்ளலாம். எனினும் சங்க இலக்கியப் பயன்பாடு தற்கால வழக்கிலிருந்து மாறுபட்டுள்ளது.

மேற்காணும் கருத்துக்களின் அடிப்படையில் பின்வருவனவற்றைத் தொகுத்து வழங்கலாம்:

* தங்கை உறவுமுறையைக் குறிக்கும் உறவுமுறைச் சொற்கள் சங்க இலக்கியத்தில் பொதுப் பொருளில் வழங்கப் பெற்றுள்ளன.

* நுவ்வை, நுங்கை, தங்கை என்பன பன்மைப்பெயர்களுடன் இணைந்து காணப்படுகின்றன.

* நுங்கை, நுவ்வை எனும் சொற்கள் பிற்கால இலக்கியத்தில் வழக்கிழக்கத் தங்கை எனும் சொல் மட்டும் தற்காலம் வரை பயன்பாட்டில் உள்ளது.

# 6. மகன்-மகள் உறவுமுறையும் உறவுமுறைச் சொற்களும்

6.0. ஒரு தலைமுறைக்குக் கீழ் இரத்த உறவு மூலம் பெறப்படும் தலைமுறை, பிள்ளைகள் அல்லது மகன்/மகள் உறவுமுறையாகும். பெற்றோர் தலைமுறைக்கும் பேரன்-பேத்தி தலைமுறைக்கும் இடைப்பட்டது இத்தலைமுறையாகும். கணவனும் மனைவியும் இல்லற வாழ்வில் ஈடுபட்டு அதன் விளைவாய்ச் சந்ததிகளை உருவாக்கிக் கொள்ளும் நிலையில் பிள்ளைகள் உறவு தோற்றம் பெறுகின்றது. பெற்றோர் தலைமுறை தனியனின் முன் தலைமுறை எனின் தனியன் தலைமுறை பிள்ளைகள் தலைமுறையாகும். கணவன்-மனைவி இருவருக்கும் பிறக்கும் ஆண்பிள்ளை மகன் உறவையும் பெண்பிள்ளை மகள் உறவையும் ஏற்படுத்தும். மகன், மகள் உறவுகள் இணைந்து பெற்றோர் தலைமுறையை உருவாக்கும். மகன்-மகள் உறவு உயர்நிலை உறவுக்கு எடுத்துக்காட்டாக விளங்க, உயர்நிலை உறவு மட்டுமின்றிக் கிடைநிலை உறவு மூலமும் பிள்ளைகள் உறவு ஏற்பட வாய்ப்புண்டு. ஆண் தனியன்களின் சகோதரர்-களின் பிள்ளைகளும், பெண் தனியன்களின் சகோதரிகளின் பிள்ளைகளும் மகன்-மகள் உறவுமுறைக் குரியவர் ஆகுகின்றனர்.




### 6.1. தொல்காப்பியத்திலும் நிகண்டுகளிலும் மகன்

தொல்காப்பியத்தில் மகனைக் குறிக்க மக, மகன், மகவு, புதல்வன் எனும் நான்கு சொற்கள் பயன்படுத்தப் பெற்றுள்ளன. இவற்றுள் முதல் மூன்று சொற்களும் ஒரே அடிச்சொல்லைக் கொண்டன. பின்வரும் எடுத்துக்காட்டுகளில் இச்சொற்களின் பயன்பாட்டைக் காணலாம்:

மகப்பெயர் கிளவிக்கு இன்னே சாரியை ( தொல்.218 )

பெண்மை அரசே மகவே கிளவி ( தொல்.540 )

புதல்வற் பயந்த புனிறுநீர் பொழுதின்
( தொல்.1093 )

மகன் தாய் உயர்பும் துன்னுயிர் பாகும்
( தொல்.1120 )

பிங்கலநிகண்டில் மகனைச் சுட்டப் பத்தொன்பது சொற்கள் குறிப்பிடப் பெற்றுள்ளன.

சந்ததி மதலை தனையன் காதலன்
நந்தன் சிறுவன் மெய்யன் தோன்றல்
செம்மல் முளை சுதன் கால்பொருள் புதல்வன்
புத்திரன் பிறங்கடை எச்சம் சேய் மைந்தன்
( பிங்.920 )

1. சந்ததி 2. மதலை 3. தனையன் 4. காதலன் 5. நந்தன் 6. சிறுவன் 7. மெய்யன் 8. தோன்றல் 9. செம்மல் 10. முளை 11. சுதன் 12. கால் 13. பொருள் 14. புதல்வன் 15. புத்திரன் 16. பிறங்கடை 17. எச்சம் 18. சேய் 19. மைந்தன் என்பன அப்பத்தொன்பது சொற்களாகும்.

உறவுமுறைச் சொற்களில் பிற உறவுமுறைகளைவிட மகனைக் குறிக்கவே அதிகச் சொற்கள் வழங்கப் பெற்றுள்ளன என்பதை பிங்கலநிகண்டின் நூற்பாவிலிருந்து கண்டுகொள்ள முடியும். மேற்கண்டவற்றில் தனையன், புத்திரன், புதல்வன் என்பன அடிப்படையில் உறவுமுறைச் சொற்களாகும். பிங்கலநிகண்டில் மகன் எனும் சொல் குறிக்கப்பெறவில்லை என்பது சிந்தித்து நோக்கத்தக்கது.

திவாகரநிகண்டில் பதினைந்து சொற்கள் குறிக்கப் பெற்றுள்ளன.

மைந்தர் புதல்வர் மதலை புத்திரர்
சந்ததி கான்முளை மருமான் பிறங்கடை
எச்சம் வழி சேய் தோன்றல் செம்மல்
( ஒத்த ) சிறுவன் தனயன் மகன் பெயர்
( திவா. மக்கட்பெயர் 319 )

பிங்கலநிகண்டில் குறிப்பிடப்பெறாத மருமான், வழி, மகன் எனும் சொற்கள் திவாகரநிகண்டில் தரப்பெற்றுள்ளன.

மேலும் புதல்வன், புத்திரன் என்பன இந்நிகண்டில் புதல்வர், புத்திரர் என்று மாற்றப்பட்டுள்ளன.

### 6.2. சங்க நூற்களில் மகன்

சங்க நூற்களில் தலைவன் - தலைவியின் மகனைப் பற்றிப் பல செய்திகள் காணக் கிடைக்கின்றன. தலைவனின் மகனைக் காதற்பரத்தை மகன் என்று அன்புடன் அழைப்பது போன்றும், அன்பு பாராட்டுவது போன்றும் பல சொற்கள் வழங்கப் பெற்றுள்ளன. சங்க நூற்களில் மகன் உறவுமுறைக்கு 12 சொற்கள் வழங்கப்பெற்றுள்ளன. அவை:

1. புதல்வன்/புதல்வர்
2. மகன்
3. சிறாஅன்
4. சிறுவன்/சிறுவர்
5. செல்வன்
6. செம்மல்
7. மைந்தர்
8. சேய்
9. சேஎய்
10. பெயரன்
11. இளையோர்
12. மகாஅன்

மேற்காணும் பன்னிரெண்டு சொற்களையும் ஒலி ஒப்புமையின் அடிப்படையில் பின்வருமாறு வகைப்படுத்தலாம்:

1. புதல்வன் - புதல்வர்
2. மகன் - மகாஅன்
3. சிறுவன் - சிறுவர் - சிறாஅர்
4. சேய் - சேஎய்
5. பெயரன்
6. செல்வன்
7. செம்மல்
8. இளையோர்
9. மைந்தர்

புதல்வன்/புதல்வர், மைந்தர் என்பன முதல் வகைக்குரிய சொற்களாகும். மற்றவை இரண்டாம் வகைக்குரியன. அதாவது இரண்டாம் வகைச் சொற்கள் அடிப்படையில் உறவுமுறைச் சொல்லாக இல்லாமல் பொதுப் பொருளிலிருந்து விரிவுபெற்று உறவுமுறைப் பொருளைக் காட்டுவனவாகும். முதல்வகைச் சொற்கள் மட்டும் ( புதல்வன்-புதல்வர் ) சங்க நூற்களில் பரவலாக வழங்கப் பெற்றுள்ளன.

### 6.2.1. புதல்வன்-புதல்வர்

புதல்வன் எனும் சொல் அடிப்படையில் உறவுமுறைச் சொல்லாகும். இச்சொல்லின் பன்மை அல்லது உயர்வு சிறப்பு வடிவமே புதல்வர் என்னும் வடிவமாகும். இவ்விரு சொற்களிலும் புதல்வன் எனும் சொல்லே அதிகம் வழக்கிலுள்ளது. சங்க நூற்களில் புதல்வன் 53 இடங்களிலும் புதல்வர் 20 இடங்களிலும் வழங்கப் பெற்றுள்ளன. பின்வரும் எடுத்துக்காட்டுகளில் இச்சொற்களின் பயன்பாட்டைக் காணலாம்.

**புதல்வன்**

புல்லுளைக்குடுமிப் புதல்வன் பன்மாண்
( புறம்.160-18 )

மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே
( குறு.8-6 )

புனிறுநாறு செவிலியொடு புதல்வன் துஞ்ச
( நற்.40-6 )

எம்மொடு புலக்குமவன் புதல்வன்தாயே
( ஐங்.90-4 )

**புதல்வர்**

பெருமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்
( நற்.58-1 )

இளந்துணைப் புதல்வர் நல்வளம் பயந்த
( பதி.57-10 )

கணவருப்பப் புதல்வர்ப் பயந்து ( மது. 600 )

புதல்வன் எனும் சொல் விளிப்பொருளில் புதல்வ என மாற்றம் பெற்றுள்ளதைப் பின்வரும் பாடல் அடியின் மூலம் தெரிந்துகொள்ளலாம். 'ஆல்கெழு கடவுள் புதல்வ' ( திரு.256 ) அடிப்படையில் உறவுமுறையைக் குறிக்கும் இச்சொல் பொருள் விரிவு பெற்று மாணவனையும் குடியையும் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளது என்பதைத் தமிழ்ப் பேரகராதியின்வழி உணர்ந்துகொள்ள இயலும். எனினும் சங்க நூற்களில் இத்தகைய பொருள்விரிவைக் காண இயலவில்லை.

### 6.2.2. மகன்-மகாஅன்

மகன் எனும் சொல் ஒரு பொதுச் சொல்லாகும். இச்சொல் பொது நிலையில் ஆண்மகனைக் குறித்துச் சங்க நூற்களில் வழங்கப் பெற்றுள்ளது. இச்சொல் பொருள் விரிவு பெற்றுப் பெற்ற மகனைக் குறிக்கவும் வழங்கப்பட்டுள்ள நிலையைச் சங்க நூற்களின்வழி கண்டுகொள்ள இயலும்.

மகன் ஆண்மகன்/ஆடவன்/ஆண் ⟶ பெற்ற மகன்

பின்வரும் எடுத்துக்காட்டுகளில் இச்சொல்லின் வழக்காற்றைக் காணலாம்.

சிறு இல் நல்தூண்பற்றி நின் மகன் (புறம்.86-1)
கடும் தேர் செல்வன் காதல் மகன் ஏ (நற்.45-5)
மகன் தாய் ஆதல் புரைவது ஆங்குஎன (அகம்.16-19)
நீயார் மகன் ஐ பற்றியோய் ஏ (ஐங். 79-4)
கான் அகல் நாடன் மகன் (கலி.39-10)

மகன் எனும் சொல் சங்க நூற்களில் மொத்தம் ஐம்பத்தொன்பது இடங்களில் வழக்கிலுள்ளது. முப்பது இடங்களில் மகன் என்ற உறவுமுறைப் பொருளிலும் இருபத்தொன்பது இடங்களில் ஆடவன்/ஆண்மகன் என்ற பொதுப் பொருளிலும் சங்க நூற்களில் இச்சொல் பயின்று வருகின்றது என்பது இவண் குறிப்பிடத்தக்கது. இச்சொல் விளியேற்கும்பொழுது மகாஅன் என மாற்றம் பெற்று வந்துள்ளதைப் பின்வரும் பரிபாடல் அடி சுட்டும்.

சான்றாளர் ஈன்ற தகாஅத் தகாஅ மகாஅன்
ஈன்றாட்கொரு பெண் இவள் (பரி.8-57,58)

மகன் எனும் சொல்லிலுள்ள இடைக்குறில் நெடிலாக அளபெடுத்து இசைநிறையாக மகாஅன் என மாற்றம் பெற்றுள்ளது. இச் சொல் சங்க இலக்கியத்தில் மேற்கண்ட ஓரிடத்தில் மட்டும் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

### 6.2.3. சிறுவன்-சிறுவர்-சிறாஅன்

சிறு எனும் சொல்லின் அடியாகத் தோன்றிய சிறுவன் எனும் சொல் இரண்டாம் வகையைச் சார்ந்த ஒரு பொதுச்

சொல்லாகும். வயதில் இளையவன் என்ற பொருள் கொண்ட இச்சொல் மகன் எனும் உறவுமுறைப் பொருளிலும் சங்க நூற்களில் சில இடங்களில் வழங்கப் பெற்றுள்ளது. இச்சொல்லின் பன்மை வடிவமான சிறுவர் எனும் சொல்லும், அளபெடை வடிவமான சிறாஅன் எனும் சொல்லும் சில இடங்களில் மகன்உறவுமுறையைக் குறித்து வழங்கப் பெற்றுள்ளன. இச் சொற்களின் பயன்பாட்டைப் பின்வரும் பாடல் அடிகளில் காணலாம்:

**சிறுவன்**

சிறுவனை நோக்கியும் சிவப்பானாவே ( புறம்.100-11 )
முளரி மருங்கின் முதியோள் சிறுவன் ( புறம்.278-2 )
மறுவரும் சிறுவன் தாயே ( குறு.45-4 )
நின்னயந்துறைவி கடுஞ் சூற் சிறுவன் ( ஐங்.309-3 )
வென் வேல்..உருவம் பல்தேர் இளையோன் சிறுவன் ( பொரு. 130 )

இச்சொல்லின் ஏழு வருகை இடங்களில் நான்கு இடங்கள் புறநானூற்றில் உள்ளன. மீதமுள்ள மூன்று வருகை இடங்கள் பிற நூற்களில் காணப்படுகின்றன ( குறு.1, ஐங்.1, பொரு.1 ).

**சிறுவர்**

சிறுவர் எனும் சொல் நற்றிணையில் ஓரிடத்தில் வழக்கிலுள்ளது.

பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப்பயந்து ( நற்.330-9 )

இப்பாடல் அடிக்கு ‘வளையணிந்த புதல்வியரையும் புதல்வரையும் பெற்று’ என்பது பொருளாகும்.

**சிறாஅன்**

செம்முது பெண்டின் காதலஞ் சிறாஅன் ( புறம்.276-3 )

செம்மைப் பண்பு பொருந்திய முதியவருடைய அன்புடைய மகன் என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். இச்சொல் புறநானூற்றில் மட்டும் ஓரிடத்தில் காணப்படுகின்றது.

சிறுவன் எனும் சொல் ஓரிடத்தில் சிறுவ என விளிப்பொருளிலும் வழங்கப் பெற்றுள்ளது.

வெற்றிவேல் போர் கொற்றவை சிறுவ ( திரு.258 )

### 6.2.4. சேய்-சேஎய்

இளமைப் பெயரைப் பொதுப் பொருளாகக் கொண்ட 'சேய்' மகன் என்ற பொருளில் இரண்டு இடங்களில் சங்க இலக்கியத்தில் வழங்கப் பெற்றுள்ளது.

நன்னன் <u>சேய்</u> ( மலை. 64 )

<u>சேய்</u> பயந்தனமே ( ஐங். 70-5 )

சேய் எனும் சொல்லின் அளபெடை வடிவமான சேஎய் பரிபாடலில் ஓரிடத்தில் மகனைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

காஅய் கடவுள் <u>சேஎய்</u> செவ்வேள் ( பரி.5-13 )

இப்பாடல் அடிக்குச் சிவபெருமானுடைய திருமகனாகிய முருகன் என்பது பொருளாகும்.

### 6.2.5. பெயரன்

பெயர் எனும் சொல்லின் அடியாகத் தோன்றிய பெயரன் எனும் சொல் மகனைக் குறிக்கச் சங்க நூற்களில் மூன்று இடங்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

அகன் பெருஞ்சிறப் பிற்றந்தை <u>பெயரன்</u> ( ஐங்.403-3 )

எந்தை <u>பெயரனை</u> யாம் கொள்வேம் ( கலி.81-35 )

சிறந்தோன் <u>பெயரன்</u> பிறந்தமாறே ( நற்.40-12 )

மேற்காணும் பாடல் அடிகளில் தந்தை எனும் பெயருடன் இணைந்து இரண்டு இடங்களிலும்,

தந்தை - பெயரன்
எந்தை - பெயரன்
சிறந்தோன் - பெயரன்

சிறந்தோன் எனும் சொல்லுடன் இணைந்து ஓரிடத்திலும் இச்சொல் காணப்படுகின்றது. முதல் பாடல் அடிக்குத் 'தந்தையின் பெயரைத் தாங்கும் உரிமையுடைய அரும்பெறல் மகன்' என்று பொருள் தரப்பட்டுள்ளது.

தலைவன்/தலைவியின் தந்தையின் பெயரினை மகனுக்குச் சூட்டுவதையும் அதனால் மகன் 'தந்தை பெயரன்' என அழைக்கப்படுவதையும் இதன்வழி உணரலாம் என்று தாயம்மாள் அறவாணன் ( ப.168 ) குறிப்பிடுவார்.

தற்காலத்தில் பெயரன் என்பது பேரன் என்று மாற்றம் பெற்றுத் தனியனின் மகன்/மகளின் ஆண் பிள்ளையைக் குறிப்பதாக உள்ளது.

பெயரன் - மகன் ⟶ மகன்/மகளின் மகன் = பேரன்

### *6.2.5. செல்வன்*

செல்வன் எனும் சொல் ஒரு பொதுச் சொல்லாகும். இச்சொல் பெருஞ்செல்வம் உடையவன், தலைவன் என்ற பொருள்களைக் கொண்டது. பெருஞ்செல்வன் என்ற பொதுப் பொருளே பொருள் விரிவுபெற்று மகனைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றிருக்கின்றது. நிகண்டுகளில் மகனைக் குறிக்கப் 'பொருள்' எனும் சொல் தரப்பட்டுள்ளது இவண் ஒப்புநோக்கத்தக்கது. செல்வம், பொருள் என்பன ஒருபொருள் பன்மொழிகளாகும். இச்சொல்லின் பொருள் விரிவைப் பின்வருமாறு எழுதிக் காட்டலாம்.

செல்வன் ⟶ செல்வம் உடையவன் ⟶ மகன்

செல்வன் எனும் இச்சொல் சங்க இலக்கியத்தில் இரண்டு இடங்களில் கையாளப் பெற்றுள்ளது.

செல்வக் கொண்கன் <u>செல்வன</u> ஃதூரே ( ஐங்.104-4 )

<u>செல்வற்கு</u> ஒத்தனம் யாம் என மெல்ல ( அகம்.26-20 )

செல்வனஃதூரே என்றவிடத்து 'எம்பெருமானுடைய மகனுடைய ஊர்' என்றும் செல்வற்கு ஒத்தனம் என்றவிடத்து 'எம் மகனுக்குத் தாயாதற்கு' என்றும் பொருளாகும்.

### *6.2.7. செம்மல்*

கலித்தொகையில் ஓரிடத்தில் மகனைக் குறிக்கச் செம்மல் எனும் சொல் வழங்கப் பெற்றுள்ளது. மேலும், சங்க நூற்களில் இச்சொல் தலைமைத் தன்மை, செம்மாப்பு, தலைவன், காதலன் எனும் பொருள்களில் காணக் கிடைக்கின்றது.

குடைநிழல் தோன்று நின் <u>செம்மலை</u>க் காணூஉ
( கலி.84-11 )

இப்பாடல் அடிக்குப் பச்சைக் குடையின் கீழ் தோன்றுகின்ற நின் புதல்வன் என்பது பொருளாகும். செம்மாப்பு எனும்

பொதுப் பொருளிலிருந்து இவ்வுறவுமுறைப் பொருள் விரிவு பெற்றிருக்க வாய்ப்புண்டு.

செம்மல் ⟶ இறுமாப்பு ⟶ மனை

### 6.2.8. இளையோர்

இளை எனும் அடியாகத் தோன்றிய இளையோர் எனும் பொதுச் சொல் புறநானூற்றில் ஓரிடத்தில் மகனைக் குறிக்குமாறு வழங்கப் பெற்றுள்ளது.

எண்ணில் காட்சி இளையோர் தோற்பின் ( புறம்.213-15 )

இப்பாடல் அடிக்கு 'சூழ்ச்சியில்லாத அறிவையுடைய நின் புதல்வர் தோற்பின்' என்பது பொருளாகும்.

இளை ⟶ இளையோர் = இளமைத்தன்மையுடையவர் ⟶ மகன்

### 6.2.9. மைந்தர்

மைந்து எனும் சொல்லின் அடியாகத் தோன்றிய மைந்தர் எனும் சொல் புறநானூற்றில் ஓரிடத்தில் மகனைக் குறித்து வழங்கப் பெற்றுள்ளது.

.... .... மைந்தர் தந்தை
இரும்பனை யன்ன பெருங்கை யானை ( புறம்.340-6 )

மைந்தர்களுக்குத் தந்தையானவன் என்பது இப் பாடல் அடியின் பொருளாகும். இச்சொல் சங்க நூற்களில் ஆண், வலிமையுடையோர், வீரர், காதலர், கணவர் எனும் பொருள்களில் வழங்கப் பெற்றுள்ளது. கணவனைக் குறிக்கவும் இச்சொல் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

### வரவு இடங்கள்

மகன் உறவுமுறையைக் குறிக்கச் சங்க நூற்களில் பயன்படுத்தப்பெற்றுள்ள பன்னிரெண்டு சொற்களில் இரண்டு வகை உறவுமுறைச் சொற்களும் இடம்பெற்றுள்ளன. இரண்டாம் வகைச் சொற்களாக உள்ளவை சொல் எண்ணிக்கையில் அதிகம் காணப்படுகின்றன. எனினும் வரவு இடங்களை நோக்கின் முதல்வகைச் சொற்களே மிகுதி. சங்க இலக்கியத்தில் புதல்வன் எனும் சொல்லே பெருவழக்குப் பெற்ற ஒரு சொல்லாகும். அதனை அடுத்து மகன் எனும்

சொல் பெருவாரியாகச் சங்க நூற்களில் பயின்று வந்துள்ளதைக் காண இயலும். இவ்விரு சொற்களையும் அடுத்துச் சிறுவன் எனும் பொதுச் சொல் பரவலாகச் சங்க நூற்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளது. பெயரன் எனும் சொல் சங்க இலக்கியத்தில் மூன்று இடங்களில் கையாளப் பெற்றுள்ளது. இவற்றைத் தவிரப் பிற சொற்கள் ஓரிரு இடங்களில் மட்டும் காணப்படுகின்றன. பொதுநிலையில் ஆண்/ஆண்தன்மை/வீரம் எனும் பொருள் தரும் சொற்கள் பொருள் விரிவு பெற்று மொழிச் சூழல் மூலம் மகன் உறவைக் குறிக்க வழங்கப் பெற்றுள்ள நிலையைச் சங்க இலக்கியப் பயன்பாட்டின்வழி உணர்ந்துகொள்ள இயலும்.

மகன் எனும் சொல் மக- எனும் அடியைக் கொண்டது. அத்துடன் -ன் எனும் விகுதி இணைந்து மகன் ஆக்கம் பெற்றறுள்ளது என்பார் தாயம்மாள் அறவாணன் ( ப.174 ). திராவிட மொழிகளில் ‘மகன்’ எனும் சொல்லின் ஒலியமைப்பை ஒத்த பல சொற்கள் காணப்படுகின்றன. மலையாளம் ( மொவன், மோன் ), கன்னடம் ( மகவு, மகு, மகுவு, மொகவு ), தெலுங்கு ( மக, மொக ), துளு ( மக, மோனு ) என்பன இதற்கு எடுத்துக் காட்டுகள் ஆகும்.

மேற்கூறப்பட்டனவற்றின் அடிப்படையில் பின்வரும் கருத்துக்களைத் தொகுத்து வழங்கலாம்:

* சங்க நூற்களில் மகன் உறவைக் குறிக்கப் புதல்வன், மகன் எனும் இரண்டு சொற்கள் மிகுதியாக வழங்கப் பெற்றுள்ளன.
* இவ்வுறவுமுறையில் பொதுச் சொல் நிலையிலிருந்து உறவுமுறைப் பொருளைக் குறிக்கும் வண்ணம் வழங்கப் பெற்ற சொற்களே அதிகம் காணப்படுகின்றன.
* ஆண்/ஆண்தன்மை/வீரம் எனும் பொருள் கொண்ட சொற்களே மகனைக் குறிக்கப் பொருள்விரிவு பெற்றுள்ளன.

### 6.3. மகள்

#### 6.3.1. தொல்காப்பியத்திலும் நிகண்டுகளிலும் மகள்

தொல்காப்பியத்தில் மகள் எனும் சொல் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

தோழி தானே செவிலி மகளே ( தொல்.1071 )

பிங்கலநிகண்டில் எட்டு சொற்கள் தரப்பெற்றுள்ளன. அவை:

புதல்வி சிறுமி புத்திரி தனையை சுதை ஐயை
பந்தனை மகள் என் பனவாகும் (பிங்.921)

புதல்வி, சிறுமி, புத்திரி, தனையை, சுதை, ஐயை, பந்தனை, மகள் என்பன அவ்வெட்டு சொற்களாகும். திவாகரநிகண்டில் புதல்வி, ஐயை, தனையை, சிறுமி, மகள் எனும் ஐந்து பெயர்கள் குறிக்கப் பெற்றுள்ளன.

புதல்வியையும் தனையையும் சிறுமியும் மகள்பெயர்
(திவா. மக்கட்பெயர்த் தொகுதி - 160)

பிங்கலநிகண்டில் குறிப்பிடப்பெற்றுள்ள புத்திரி, சுதை, பந்தனை எனும் சொற்கள் திவாகரநிகண்டில் இடம்பெற வில்லை. மகளைக் குறிக்கக் கொடுக்கப்பெற்றுள்ள சொற்களில் புதல்வி, சிறுமி, புத்திரி என்பன புதல்வன், சிறுவன், புத்திரன் எனும் சொற்களின் பெண்பால் பெயர்களாகும். பந்தனை, தனையை, சுதை என்பன வடமொழிச் சொற்களாகும். இச்சொற்கள் பிற்கால இலக்கியங்களில் மட்டுமே வழக்குப் பெற்றுள்ளன.

### 6.3.2. சங்க நூற்களில் மகள்

சங்க நூற்களில் மகள் உறவுமுறையைக் குறிக்க மகள் எனும் சொல் பரவலாகக் கையாளப்பெற்றுள்ளது. இதையடுத்து இளையோள் எனும் பொதுச் சொல் ஓரிடத்தில் காணப்படு கின்றது.

#### 6.3.2.1. மகள்

மகள் எனும் சொல் ஒரு பொதுச் சொல்லாகும். இச் சொல் மொத்தம் 98 இடங்களில் சங்கநூற்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளது. இச்சொல்லின் பொருள்களுள் பெண், தலைவி, விறலி, தோழி என்பன அடங்கும். மகள் உறவுமுறையில் 18 இடங்களில் இச்சொல் வழங்கப் பெற்றுள்ளது. எடுத்துக் காட்டாக இச்சொல்லின் வரவிடங்களைக் காண்போம்:

தொல்குடி மன்னன் <u>மகளே</u> முன்னாள் (புறம்.353-11)

அல்லாய் வாழி வேண்டு அன்னை நின் <u>மகள்</u>
(அகம்.48-7)

யார் <u>மகள்</u> கொல்லிவள் தந்தை வாழியர் (நற்.8-4)

நாரை மிதிக்கும் என் <u>மகள்</u> நுதலே (குறு.114-5)

வலை வல் பாண்மகள் வாலெயிற்று மட<u>மகள்</u>
( ஐங்.48-1 )

வரையகலத் தவனை வானவன் <u>மகள்</u> ( பரி.9-58 )

என் <u>மகளொரு</u>த்தியும் பிறன் மகனொருவனும்
( கலி.9-6 )

### 6.3.2.2. இளையோள்

இளை எனும் பெயரை அடியாகக் கொண்ட இளையோள் எனும் சொல் நற்றிணையில் ஓரிடத்தில் மகளைக் குறித்து வழங்கப் பெற்றுள்ளது.

கிள்ளையுங் கிளையெனக் கூஉம் <u>இளையோள்</u>
வழுவிலள் அம்ம .... .... ( நற்.143-5 )

அவள் வளர்த்த கிளியும் ... கூவா நிற்கும் ... என் இளம்புதல்வி தானும் குற்றம் உடையவள் அல்லள் என்பது இப்பாடல் அடியின் பொருளாகும்.

'மக' எனும் சொல்லுடன் -'ள்' எனும் பெண்பால் விகுதி இணைந்து மகள் எனும் சொல் தோற்றம் பெற்றது என்பார் தாயம்மாள் அறவாணன் ( ப.174 ). திராவிட மொழிகளில் இச்சொல்லிற்கு ஒத்த பல சொற்கள் வழக்கிலுள்ளன. மலையாளம் ( மொவள், மோள் ), கன்னடம் ( மகள், மகளு ), துளு ( மகளு, மகளாடுலு ) என்பன சிலவாகும்.

மேற்கூறிய கருத்துக்களிலிருந்து பின்வருவனவற்றைத் தொகுத்து வழங்கலாம்:

* மகள் உறவுமுறையில் இரண்டு சொற்கள் மட்டுமே காணப்படுகின்றன.

* மகள் எனும் பொதுச்சொல் பொருள் விரிவுபெற்றுப் பெற்ற மகளைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

# முடிவுரை

இந்நூலில் இடம்பெறும் இயல்களின் இறுதியில் தொகுப்புரை ஒவ்வொன்று தரப்பெற்றுள்ளது. இத்தொகுப்புரைகளில் அவ்வவியல்களுக்குரிய இன்றியமையாத கருத்துக்கள் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. முடிவுரை எனும் இப்பகுதியில் சங்கத் தமிழில் இடம்பெற்றுள்ள உறவுமுறைச் சொற்களின் வகை, பொருள், பொருள் விரிவு மற்றும் பல இன்றியமையாத சொற்பொருண்மைப் பண்புகள் ஒட்டுமொத்தமாகவும் சுருக்கமாகவும் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன.

* சங்கத் தமிழில் பாட்டன் தலைமுறை ( தமு+2 ). பெற்றோர் தலைமுறை ( தமு+1 ), தனியன் தலைமுறை ( தமு0 ), குழந்தைகள் தலைமுறை ( தமு-1 ) எனும் நான்கு தலைமுறைகளுக்குரிய உறவுமுறைச் சொற்கள் காணப் படுகின்றன.

* சங்க நூற்களில் உறவுமுறைகளைக் குறிக்க இரண்டு வகையான உறவுமுறைச் சொற்கள் கையாளப் பெற்றுள்ளன. முதல் வகைச் சொற்கள் அடிப்படையில் உறவுமுறைச் சொற்களாக உள்ளன. இரண்டாம் வகைச் சொற்கள் பொதுச் சொற்களாகத் திகழ்ந்து பொருள் விரிவுபெற்று உறவுமுறையைக் குறிக்கப் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

* முதல் வகை உறவுமுறைச் சொற்களைவிட இரண்டாம் வகை உறவுமுறைச் சொற்களே சங்கப் பாடல்களில் அதிகமாக வழக்கிலுள்ளன.

* சங்கத் தமிழ் உறவுமுறைச் சொற்களில் முன்னொட்டு உறவுமுறைச் சொல், தனி உறவு முறைச் சொல், அடுக்கு உறவுமுறைச்சொல், ஆக்க உறவுமுறைச்சொல் எனும் நான்கு உருபன் அமைப்புகளைக் காண முடிகிறது.

* முன்னொட்டு உறவுமுறைச் சொல் தொல்-திராவிட மொழிக்குரிய ஒரு பண்பாக கண்டறியப்பட்டு

உள்ளது. இப்பண்பு சங்க நூற்களில் சில உறவு முறைகளில் தக்கவைத்துக் கொள்ளப் பெற்றுள்ளது.

* தன்மை, முன்னிலை, படர்க்கை எனும் மூவிட முன்னொட்டுக்களுடன் கூடிய உறவுமுறைச் சொற்கள் சங்க நூற்களில் பரவலாக வழக்கில் உள்ளன.

* முன்னொட்டுக்கள் பெரும்பாலும் தெளிவாகப் பிரித்தறியும் வண்ணம் அமைந்திருக்கும். ( எந்தை என்+தந்தை, நுந்தை>நும்+தந்தை, நின்னை>நின்+ஐ, தன்னை>தன்+ஐ.... ) எனினும் தாயைக் குறிக்கப் பயன்படுத்தப்பெறும் யாய், ஞாய் எனும் சொற்களில் இடம்பெறும் முன்னொட்டுக்கள் பிரித்தறிய முடியா வண்ணம் அமைந்துள்ளன.

* சங்க நூற்களில் ஓர் உறவைக் குறிக்கப் பல உறவு முறைச் சொற்கள் அதாவது ஒருபொருட் பன்மொழிகள் வழங்கப்பெற்றுள்ளன. இவை பெரும்பாலும் பயன்பாட்டு வரையறை உடன் செயல்படுகின்றன.

* சங்க இலக்கியத்தில் ஓர் உறவுமுறைச் சொல் ஒன்றிற்கு மேற்பட்ட உறவுமுறைகளைக் குறிக்கப் பயன்படுத்தப்பெற்றுள்ள நிலையைக் காண முடிகின்றது ( என்னை, தன்னை, முன் ).

* இரண்டாம் வகைச் சொற்கள் மொழிச்சூழலின் மூலம் பொருள்விரிவு பெற்று உறவுமுறையைக் குறிக்கும் தன்மையைப் பெற்றுள்ளன.

* உறவுமுறைச் சொற்கள் பல இடங்களில் உறவல்லாப் பிற பொருள்களைக் குறித்தும் கையாளப்பெற்றுள்ளன ( கணவன், தாய், தம்பி... ).

* சங்க நூற்களில் அன்பு, துணை, வலிமை, உரிமை, விருப்பம், முதன்மை, இளமை, சிறப்பு, பெருமை, உறவு எனும் பொருள் தரும் சொற்கள் பொருள் விரிவுபெற்று உறவுமுறைப் பொருளிலும் ஆட்சியில் உள்ளன.

* சங்க நூற்களில் பாட்டன் தலைமுறை பற்றிய குறிப்பு ஓர் இடத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது.

பாட்டனைக் குறிக்க அடுக்கு உறவுமுறைச் சொல்லும் ( தந்தை தந்தை ) ஆக்க உறவுமுறைச் சொல்லும் ( நுந்தை தந்தை ) கையாளப் பெற்றுள்ளன.

* பெற்றோர் தலைமுறையில் இன்று வழக்கிலுள்ள அம்மா, அப்பா எனும் உறவுமுறைச் சொற்களைச் சங்க நூற்களில் காண இயலவில்லை எனினும் 'அம்ம' எனும் சொல் விளிப்பெயராகவும், அசை-யாகவும் பல இடங்களில் வழங்கப் பெற்றுள்ளது மொழி வரலாற்று ஆய்வின் தேவையை உணர்த்துவதாய் உள்ளது.

* தாயைக் குறிக்கும் உறவுமுறைச் சொற்களில் அன்னை, யாய், தாய் என்பன பெருவழக்குச் சொற்களாகும். இவை வகை ஒன்றிற்குரிய சொற்கள் ஆகும். வகை இரண்டிற்குரிய சொற்கள் இவ்வுறவு முறையில் குறைவாகவே இடம் பெற்றுள்ளன.

* தாயைக் குறிக்கும் ஞாய், யாய் என்பன தமிழ் மொழிக்கே உரிய தனிப்பண்பாக உள்ளன. பெற்றுத்தருதல் ( ஈனுதல் ) எனும் பொருள் தரும் பொதுச் சொற்கள் இரண்டிடங்களில் தாயைக் குறித்துப் பொருள் விரிவு பெற்றுள்ளன ( ஈன்றாள், பயந்தோள் ).

* தாயைக் குறிக்கும் அஞ்ஞை, அம்பா எனும் சொற்களின் சொற்பிறப்பு குறித்துப் பல கருத்துக்கள் நிலவி வருகின்றன. இவற்றின் சொற்பிறப்பு முடிவு செய்யப்பட வேண்டிய ஒன்றாக உள்ளது.

* தந்தை உறவுக்குரிய சொற்களில் எந்தை, தந்தை, நுந்தை என்பன பெருவழக்குப் பெற்ற சொற்களாகும். தந்தை எனும் சொல் பயன்பாட்டு வரையறையின்றி மூவிடங்களிலும் பயன்படுத்தப் பட்டுள்ள நிலையைக் காணமுடிகின்றது.

* தந்தையைக் குறிக்கும் ஐ எனும் பொதுச்சொல் மூவிடங்களுக்கும் உரிய சொல்லாக முன்னொட்டு-களைப் பெற்றுத் ( என்னை, நின்னை, தன்னை ) தந்தையைக் குறித்து நிற்கிறது.

* தந்தையைக் குறிக்கும் தாதை எனும் சொல் ஒரு பிராகிருத மொழிச் சொல்லாக உள்ளது.

* உறவுமுறைச் சொற்களில் கணவனைக் குறிக்கவே சங்க நூற்களில் அதிகமான சொற்கள் வழங்கப் பெற்றுள்ளன. இவற்றில் பெரும்பான்மையான சொற்கள் இரண்டாம் வகைக்குரிய சொற்களாகும்.

* கணவன், கொழுநன் எனும் சொற்கள் கணவனைக் குறிக்கும் சொற்களில் பெருவழக்குப் பெற்ற சொற்களாகும்.

* கேள், துணை எனும் சொற்களை அடியாகக் கொண்டு கணவனைக் குறிப்பிடும் வண்ணம் பல சொற்கள் பொருள் விரிவு பெற்றுள்ளன (கேள்வன், துணைவன்....).

* ஆண் எனும் பொருள்தரும் ஆள், ஆடவர் எனும் பொதுச் சொற்கள் பொருள் விரிவு பெற்றுக் கணவனைக் குறித்துக் கையாளப் பெற்றுள்ளன.

* சிறந்தான், பெற்றார் எனும் முற்று வடிவங்களும், உரிமை மைந்தர் எனும் கூட்டுச் சொல்லும் கணவனைக் குறிக்கச் சங்க நூற்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

* மனைவி உறவுமுறைக்குரிய சொற்களில் மனை எனும் சொல்லை அடியாகக் கொண்ட மனைவி, மனைவியர், மனையாள், மனையோள் என்பன குறிப்பிடத்தக்கன. மனையோள் எனும் சொல் சங்க நூற்களில் பெருவழக்குப் பெற்ற ஒரு சொல்லாக உள்ளது.

* மனைவியைக் குறிக்க மனை எனும் சொல்லின் ஒருபொருட் பன்மொழியான 'இல்' எனும் சொல்லை அடியாகக் கொண்டு இற்கிழத்தி எனும் கூட்டுச் சொல் படைக்கப் பெற்றுள்ளது.

* பெண், பெண்டு, பெண்டிர் எனும் சொற்களும்; பெண் எனும் பொருள் தரும் மகடூஉ, மடந்தை, செல்வி, தையல் எனும் சொற்களும் மனைவியைக் குறிக்கச் சங்கப் பாடல்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

* அன்புடையவள், துணையானவள் எனும் பொருளைக் கொண்ட சில சொற்கள் பொருள் விரிவு பெற்று மனைவியைக் குறித்துச் சங்கப் பாடல்களில் பயின்று வந்துள்ளன.

* நகர் எனும் சொல் மனைவியைக் குறித்துப் பொருள் விரிவு பெற்றுள்ள தன்மை ஆராய்ந்து நோக்கத் தக்கது.

* அண்ணன் உறவைக் குறிக்கத் தற்காலத்தில் வழங்கப்பெறும் அண்ணன், தமையன் எனும் சொற்கள் சங்க நூற்களில் வழங்கப்பெறவில்லை.

* ஐ, ஐயர் எனும் பொதுச் சொற்கள் மூவிடப் பெயர்களைப் பெற்று அண்ணனைக் குறிக்கச் சங்க நூற்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளனவே அன்றி அடிப்படை உறவுமுறைச் சொற்கள் எவற்றையும் காண இயலவில்லை.

* முன் எனும் சொல் முன்னொட்டுக்களைப் பெற்று அண்ணனைக் குறித்து நிற்கின்றது (எம்முன், தம்முன், தன்முன்).

* தம்பி உறவுமுறை குறித்து மிகச் சில செய்திகளே சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. இவ்வுறவைக் குறிக்கத் தம்பி-இளையன் எனும் இரு சொற்கள் மட்டும் பயன்பாட்டில் உள்ளன.

* அக்காள் உறவுமுறைக்கு உரிய சூழல்கள் சங்க நூற்களில் இல்லை என்றே கூறலாம். எவ்வை எனும் சொல் இரண்டு இடங்களில் அக்காளைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டிருந்தாலும் இச்சொல் இரத்த உறவைக் குறிக்கும் வண்ணம் கையாளப் பெறவில்லை.

* தங்கை உறவுமுறையைச் சுட்ட நுவ்வை, நுங்கை எனும் முன்னொட்டு உறவுமுறைச் சொற்களும் சங்க நூற்களில் ஆட்சியில் உள்ளன.

* தங்கை எனும் சொல் உறவுமுறையைக் குறியாது பொருள் விரிவு பெற்றுக் குலத்துப்பெண் என்ற பொருளில் மட்டும் சங்க நூற்களில் வழக்கில் உள்ளது.

* மகன் உறவுமுறைக்குரிய சொற்களில் புதல்வன், மகன் எனும் இரு சொற்களும் (முதல் வகை) பெருவழக்கு பெற்ற சொற்களாகும்.

* பெயரன் (பேரன்) எனும் சொல் தற்காலத்து நிலைபோல் அன்றி மகனைக் குறிக்கச் சங்க நூற்களில் கையாளப் பெற்றுள்ளது.

* பொதுச் சொற்களான சேய், சிறுவன், இளையோன், செல்வன் என்பன மகனைக் குறித்துச் சங்க நூற்களில் பொருள் விரிவு பெற்றுள்ளன.

* மகள் உறவுமுறைக்கு இரண்டு சொற்களே (மகள், இளையோள்) உள்ள நிலையில் மகள் எனும் சொல்லே சங்க நூற்களில் காணப்படும் பெருவழக்குச் சொல்லாகின்றது.

* இவ்வாய்வேட்டின் பின்னிணைப்பில் இடம்பெறும் வரவிட அட்டவணைகள் சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்களைப் பிற்கால இலக்கியங்களின் உறவுமுறைச் சொற்களுடன் ஒப்பிட்டு ஆராய்வதற்கு மிகவும் பயனுடையதாய் அமையும்.

# சங்கத் தமிழ் உறவுமுறைச் சொற்கள் உறவுமுறையும் வருகை இடங்களும்

| உறவுமுறைச் சொல் (1) | வகை (2) | உறவுமுறை (3) | வருகை இடங்கள் (4) | கூடுதல் (5) |
|---|---|---|---|---|
| அஞ்ஞை | I | தாய் | அகம்.15-19;145-22 | 2 |
| அண்ணல் | II | கணவன் | பரி.திர.1-62 | 1 |
| அத்தத்தா | II | தந்தை | கலி.80-14;81-19 | 2 |
| அத்தன் | II | தந்தை | கலி.115-8;குறு.93-3 | 2 |
| அம்பா | II | தாய் | பரி.11-81 | 1 |
| அன்னை | I | தாய் | அகம்.17-3; 20-12; 28-11; 48-1; 52-9; 65-2; 68-1; 68-4;9; 95-15; 98-6; 110-1, 1 122-4; 122-5; 138-3; 158-7; 190-6; 201-10; 203-8; 209-2; 218-18; 232-12; 242-10; 248-14; 252-14; 253-3; 259-16; 272-15; 292-2; 317-23; 325-4; 358-10; 378-12; 388-19; ஐங்.101-1,1; 102-1; 102-1; 103-1; 103-1; 104-1; 104;1; 105-1; 105-1; 106-1; 106-1; 107-1; 107-1; 108-1; 108-1; 109-1; 109-1; 110-1; 110-1; 113-4; 115-4; 194-4; 201-1; 202-1; 203-1; 204-1; 205-1; 206-1; 207-1; 208-1; 209-1; 210-1; 236-1; 241-1; | |

| உறவுமுறைச் சொல் (1) | வகை (2) | உறவுமுறை (3) | வருகை இடங்கள் (4) | கூடுதல் (5) |
|---|---|---|---|---|
| | | | 242-2; 247-1; 249-1; 366-1; 367-5; கலி. 51-5; 51-6; 51-12,13; 94-5; 95-25; 107-21; 22, 23; 115-8, 9 122-1; 144-64; குறு. 83-2;93-3; 111-2; 141-2; 161-4; 223-6; 246-5; 262-2; 292-6; 316-2; 321-8; 353-7; 360-2; 361-1; நற்.4-5; 17-5; 23-4; 27-7; 28-3; 47-10; 50-1; 53-3; 61-4; 63-6; 115-3; 172-9; 145-7; 147-5; 147-11; 149-4; 172-5; 173-4; 175-5; 182-4; 191-8; 206-6; 236-5; 244-6; 273-4; 288-5; 297-10; 317-6; 339-5; 351-5; 365-1; 372;8; 389-3; பரி.14-29; 20-72; புறம்.254-10; குறி.1 | 138 |
| ஆடவர் | II | கணவன் | குறு.135-2 | 1 |
| ஆள் | II | கணவன் | நற்.353-1 | 1 |
| இளையன் | II | தம்பி | பரி.2-21 | 1 |
| இளையோர் | II | மகன் | புறம்.213-15 | 1 |
| இளையோள் | II | மகள் | நற்.143-1 | 1 |
| இற்கிழத்தி | II | மனைவி | அகம்.86-19 | 1 |
| இறை | II | அண்ணன் | பரி.17-8 | 1 |
| ஈன்றாள் | II | தாய் | பரி.8-58,59 | 2 |
| ஈன்றோள் | II | தாய் | புறம்.230-7 | 1 |
| உரிமைமைந்தர் | II | கணவன் | பரி.திர.2-49 | 1 |
| எந்தை | I | என்+தந்தை | அகம்.12-2; 20-1; | |

| உறவுமுறைச் சொல் (1) | வகை (2) | உறவுமுறை (3) | வருகை இடங்கள் (4) | கூடுதல் (5) |
|---|---|---|---|---|
| | | | 46-11; 80-4; 104-14; 158-17; 240-7; 268-12; 282-12; 298-15; 308-8; 398-19; ஐங்.6-6; 261-3; கலி.61-27; 81-35, 108-32, 111-22; குறு.40-2; 51-5; 176-5; 269-3; 325-4; 354-4; 374-1; நற்.98-8; 206-6; 221-12; 232-7; 295-4; 317-7; 331-6; பரி.20-76; புறம். 19-13; 27-10; 112-2;5; 125-4; 135-10; 171-12; 175-1; 203-12; 235-16; 238-11; 261-1; 307-1; 376-16; 379-10; 381-21; 384-18; 386-9; 388-7; 396-24; 400-8; குறி.20 | 55 |
| எம்முன் | II | என்+ அண்ணன் | புறம்.304-5; | 1 |
| எவ்வை | I | என் - அக்காள் | ஐங்.88-1; 89-1 | 2 |
| என்னை | II | என்-தந்தை | நற்.383-3; | 1 |
| | | என்- கணவன் | குறு.27-3; 203-5; புறம்.280-1; 306-5; 308-6; | 5 |
| | | என்- அண்ணன் | கலி.108-32 | 1 |
| என்னையர் | II | என்- அண்ணன் | அகம்.240-6; 302-9; கலி.39-21; குறு.123-5; நற்.122-1 | 5 |
| ஐ | II | தந்தை | நற்.136-4 காண்க என்னை தன்னை | 1 |

| உறவுமுறைச் சொல் (1) | வகை (2) | உறவுமுறை (3) | வருகை இடங்கள் (4) | கூடுதல் (5) |
|---|---|---|---|---|
| | | கணவன் | காண்க என்னை | |
| | | அண்ணன் | காண்க என்னை<br>தன்னை | |
| ஐயர் | II | கணவன் | காண்க தன்னையர் | |
| | | அண்ணன் | காண்க என்னையர்<br>நின்னையர்<br>தன்னையர் | |
| ஐயன்மார் | I | அண்ணன் | கலி.107-34 | 1 |
| கணவர் | I | கணவன் | பரி.10-35; மது.600 | 2 |
| கணவன் | I | கணவன் | குறு.14-5; 49-4; 167-5;<br>திரு.6; பதி.61-4;<br>புறம்.138-8; 246-13;<br>314-1; 320-7;<br>மலை. 58;424; | 11 |
| | II | ஆண் ஆமை | அகம்.160-8 | 1 |
| | II | ஆண் மந்தி | ஐங்.274-1 | 1 |
| | II | வங்காச் சேவல் | குறு.151-2 | 1 |
| | II | ஆண் செந்நாய் | நற்.103-7 | 1 |
| | | ஆண் யானை | மலை.308 | 1 |
| | II | கணவ ( விளி ) | ( பதி.14-5; 24-11;<br>38-10; 42-7; 55-1;<br>65-10; 70-16; 88-36;<br>90-50; பரி.3-90;<br>புறம்.3-6; 34-7;<br>திரு.264 | 13 |
| காதலன் | II | கணவன் | அகம்.222-10; 236-19; | 2 |
| காதலி | II | மனைவி | அகம்.54-22; ஐங்.<br>403-1; புறம்.234-3 | 3 |
| கிழவன் | II | கணவன் | புறம்.151-3; 326-12 | 2 |
| கேள் | II | கணவன் | ஐங்.271-4; கலி.39-26 | 2 |
| கேள்வர் | II | கணவன் | கலி.39-17; 143-44;<br>பரி.20-89 | 3 |
| கேள்வன் | II | கணவன் | கலி.101-34; 106-43;45;<br>142-62; 144-61; 145-52;<br>61; 147-27; 148-17; பரி.<br>21-40; 21-60; 21-22;<br>புறம். 294-9 | 13 |

| உறவுமுறைச் சொல் (1) | வகை (2) | உறவுமுறை (3) | வருகை இடங்கள் (4) | கூடுதல் (5) |
|---|---|---|---|---|
| கொழுநர் | I | கணவன் | அகம்.196-4; கலி. 109-25; நற்.320-10; மலை. 302 | 4 |
| கொழுநன் | I | கணவன் | அகம்.106-5; 186-20; குறு.80-7; 293-8; பரி.21-44; புறம். 247-7; 248-3; 279-5; நற்.110-10; 170-5 | 10 |
| கோ | II | தந்தை | கலி.116-11 | 1 |
| சிறந்தான் | II | கணவன் | கலி.9-23; பரி.12-48 | 2 |
| சிறாஅன் | II | மகன் | புறம்.276-3 | 1 |
| சிறுவர் | II | மகன் | நற்.330-9 | 1 |
| சிறுவன் | II | மகன் | ஐங்.309-3; குறு.45-4; புறம்.100-11; 277-2; 278-2; 286-3; பெரு.130. | 7 |
| | | சிறுவ ( விளி ) | திரு.258 | 1 |
| செம்மல் | II | மகன் | கலி.84-11 | 1 |
| செல்வன் | II | கணவன் | புறம்.273-4 | 1 |
| | | மகன் | அகம்.26-20; ஐங். 104-4 | 2 |
| செல்வி | II | மனைவி | பதி. 31-28 | 1 |
| சேஎய் | II | மகன் | பரி.5-13 | 1 |
| சேய் | II | மகன் | ஐங்.70-5; மலை.64 | 2 |
| ஞாய் | I | உன்-தாய் | ஐங்.98-4; கலி.107-26; குறு.40-1 | 3 |
| ஞாயர் | I | உன்-தாய் | கலி.85-28;36 | 2 |
| தங்கை | I | தங்கை | அகம்.132-5; ஐங்.364-1; 363-2; குறு.335-6; 392-5; சிறு.190 | 6 |
| தங்கையர் | I | தங்கை | அகம்.320-3 | |
| தந்தை | I | தந்தை | அகம்.2-13; 6-3; 17-7; 49-13; 58-5; 60-3; 96-12; 140-13; 145-17; 162-8; 198-8; 288-13; | |

| உறவுமுறைச் சொல் (1) | வகை (2) | உறவுமுறை (3) | வருகை இடங்கள் (4) | கூடுதல் (5) |
|---|---|---|---|---|
| | | | 17; 216-3; 262-5 ஐங். 60-4; 94-5; 403-3; 49-1. கலி.61-13; 82-10; 83-31; 84-8; 25-31; 86-33; 101-31; 107-33; குறு.26-7; 233-7; 258-4; 298-5; சிறு.127; நற்.8-4; 110-11; 140-5; 162-7; 190-3; 198-4; 198-11; 306-1; 323-6; 324-6; 373-2; 392-1; புறம்.61-9; 78-11; 92-2; 116-15; 117-10; 120-19; 137-14; 201-6; 250-8; 290-3; 290-3; 312-2, 336-2; 340-6; 341-3, 342-11, 343-13, 349-2; 394-3; 394-8. | 64 |
| தந்தை தந்தை | I | பாட்டன் | புறம்.290-3; | 1 |
| தம்பி | I | தம்பி | புறம்.43-10; 300-3; 304-5 | 3 |
| தம்முன் | II | தன்-அண்ணன் | கலி.94-34; பரி.15-19 | 2 |
| தன்முன் | II | தன்-அண்ணன் | சிறு.239 | 1 |
| தன்னை | II | தன்-தந்தை | புறம்.279-3 | 1 |
| | | தன்-அண்ணன் | புறம்.352-14 | 1 |
| தன்னைமார் | II | தன்-அண்ணன் | புறம்.342-15; 345-12; 353-17 | 3 |
| தன்னையர் | II | தன்-கணவன் | கலி.39-17; | 1 |
| | II | தன்-அண்ணன் | அகம்.126-17; 393-8; குறு.272-4; ஐங்.365-1 | |

| உறவுமுறைச் சொல் (1) | வகை (2) | உறவுமுறை (3) | வருகை இடங்கள் (4) | கூடுதல் (5) |
|---|---|---|---|---|
| | | | நற்.127-5; புறம்.337-16; 350-8; 355-4 | 8 |
| தாதை | II | தந்தை | பரி.1-28; 3-13; 4-14 | 3 |
| தாய் | I | தாய் | அகம்.6-13; 16-19; 146-13; 165-7; 195-2; 310-7; 383-11; 392-2; ஐங்.90-4; 373-5; 399-5; 402-1; 405-4; 409-2; 442-5; கலி.22-5; 48-10; 82-11; 82-15; 99-4; குறு. 8-6; 45-4; 359-6; 397-4; நற்.8-10; 26-4; 179-5; 293-9; 324-1; புறம்.4-18; 137-15; 183-4; 270-6; 295-8; 336-12; 346-2; 348-6; 379-15; பட்.96; பதி. 20-27; பரி.10-100; 11-91; 11-112; பொ.132. | 44 |
| | I | தாய்ப்பசு | அகம்.293-11; குறு. 132-5; நற்.359-3 | 3 |
| | I | தாய் ஆமை | ஐங்.44-2; குறு.152-2 | 2 |
| | I | தாய் ஆடு | அகம்.292-3 | 1 |
| | I | தாய்ப்பூனை | அகம்.297-13 | 1 |
| | I | தாய் நாரை | நற்.91-7 | 1 |
| | I | தாய் நண்டு | ஐங்.24-1 | 1 |
| துணை | II | கணவன் | பரி.16-9; பட்.106; மது.550; 561 | 4 |
| | II | மனைவி | ஐங்.307; குறு.20-1; 147-5; புறம்.393-2; மலை.17 | 5 |
| துணைவன் | II | கணவன் | அகம்.385-15 | 1 |
| துணைவி | II | மனைவி | ஐங்.410-2 | 1 |
| துணைவியர் | II | மனைவி | புறம்.166-17 | 1 |

| உறவுமுறைச் சொல் (1) | வகை (2) | உறவுமுறை (3) | வருகை இடங்கள் (4) | கூடுதல் (5) |
|---|---|---|---|---|
| தையல் | II | மனைவி | பரி.15-46 | 1 |
| நகர் | II | மனைவி | கலி.8-21 | 1 |
| நின்னையர் | II | உன்-அண்ணன் | அகம்.259-16 | 1 |
| நுங்கை | I | உன்-தங்கை | அகம்.386-12 | 1 |
| நுந்தை | I | நும்-தந்தை | அகம்.99-11; 219-7; 370-6; ஐங்.92-3; 98-4; 294-3; கலி. 41-42; 57-6; 80-12; 16,20,24; 82-26; 86-11; 11; 15, 19, 23. | |
| நுந்தை-தந்தை | I | பாட்டன் | புறம்.290-3 | 1 |
| நும்முன் | I | நும்-தந்தை | புறம்.174-18 | 1 |
| நுவ்வை | I | நும்-தங்கை | நற்.172-4; 134-6; 204-1; 331-6; 362-1; புறம்.160-23; 202-9; 290-3 | 31 |
| பயந்தோள் | II | தாய் | பரி.3-16; 17 | 2 |
| புதல்வர் | I | மகன் | அகம்.316-15; குறு. 394-3; நற்.58-1; பதி. 57-10; 70-21; பரி.16-7; புறம்.9-4; 19-13; 41-14; 92-3; 196-10; 198-5; 198-14; 198-21; 250-8; சிறு.61; பட்.24-295; பெரு.249; மது.600 | 20 |
| புதல்வன் | I | மகன் | அகம்.5-22; 6-13; 16-5; 26-12; 26-18; 54-22; 66-12; 86-11; 176-19; 184-2; 197-12; 245-12; ஐங்.65-3; 66-3; 90-4; 265-4; 401-2; 402-1; 403-1; 405-4; 408-4; 409-1; 409-2; 410-2; 424-4; 442-5; கலி.70-12; | |

| உறவுமுறைச் சொல் (1) | வகை (2) | உறவுமுறை (3) | வருகை இடங்கள் (4) | கூடுதல் (5) |
|---|---|---|---|---|
| | | | 75-25; 75-28; 79-7; 79-11; 79-15; 79-20; 79-23; 114-2; குறு.8-6; 161-3; 359-5; 359-6; நற்.40-6; 161-11; 166-7; 221-11; 250-3; 269-2; 355-1; 370-5; 380-4; பதி.74-21; புறம்.160-18; 211-21; 222-3; 273-3 | 53 |
| பெண் | II | மனைவி | புறம்.82-1 | 1 |
| பெண்டிர் | II | மனைவி | அகம்.118-3; 216-5; 276-8; நற்.353-1; ஐங்.40-3; 382-5; கலி.73-21; 94-16; மலை.320 | 9 |
| பெண்டு | II | மனைவி | அகம்.106-5; 93-18; ஐங்.83-4; 89-4; 113-3; 283-5; குறு.91-3; நற். 74-11; பரி.9-35; புறம்.276-3 | 10 |
| பெயரன் | II | மகன் | ஐங்.403-3; கலி.81-35; நற்.40-12 | 3 |
| பெற்றார் | II | கணவன் | பரி.திர.2-25 | 1 |
| மகடூஉ | II | மனைவி | புறம்.261-18; 331-9 | 2 |
| மகள் | I | மகள் | அகம்.7-12; 7-12; 48-1; 48-21; 49-7; 52-13; 55-5; 63-1; 95-13; 98-13; 110-25; 117-9; 140-5; 203-4; 221-3; 242-8; 275-17; 369-1; 397-1; ஐங்.29-4; 48-1; 79-2; 91-3; 96-3; 97-3; 98-3; 99-3; 100-3; 101-3; 195-2; 255-1; 256-1; 258-1; 259-1; 260-1; 283-1; 313-1; 372-4; | |

| உறவுமுறைச் சொல் (1) | வகை (2) | உறவுமுறை (3) | வருகை இடங்கள் (4) | கூடுதல் (5) |
|---|---|---|---|---|
| | | | 373-4; 377-3; 386-4; 393-4; 421-3; 424-1; 430-3; கலி.9-6; 9-14; 9-17; 9-20; 50-14; 56-12; குறு.114-5; 184-6; 327-5; 337-7; நற்.8-4; 44-12; 45-3; 97-9; 101-8; 102-8; 184-1; 198-3; 201-1; 271-8; 274-3; 300-1; 305-5; 324--3; 349-10; 353-5; பதி.23-23; 51-10; பரி. 6-98; 9-9; 9-58; 11-135; 20-45; புறம்.338-12; 340-4; 342-3; 353-7; 353-11; திரு.11 | 84 |
| மகன் | I | மகன் | அகம்.16-19; 26-21; 54-18; 66-17; ஐங். 79-4; 404-1; 406-1; கலி.9-6; 39-10; 51-16; 80-9; 81-29; 82-16; 83-14; 83-29; 84-13; 85-29; 86-27; 86-34; 94-6; நற்.45-5; புறம். 86-1; 86-2; 181-2; 254-8; 278-8; 279-10; 310-5; 366-6; 381-25 | 30 |
| மகாஅன் | II | மகன் | பரி.8-57 | 1 |
| மகிழ்நன் | II | கணவன் | அகம்.116-10; 336-8; கலி.75-32 | 3 |
| மடந்தை | II | மனைவி | ஐங்.86-4; நற்.40-9 | 2 |
| மனை | II | மனைவி | அகம்.21-7 | 1 |
| மனைமுதல் | II | மனைவி | அகம்.51-13 | 1 |
| மனையவர் | I | மனைவி | பரி.19-21 | 1 |
| மனையாள் | I | மனைவி | பரி.20-86 | 1 |
| மனையுறை மகளிர் | I | மனைவி | குறு.135-2 | 1 |
| மனையோள் | I | மனைவி | அகம்.14-14; 166-10; 186-13; 224-11; 394-10; | |

| உறவுமுறைச் சொல் (1) | வகை (2) | உறவுமுறை (3) | வருகை இடங்கள் (4) | கூடுதல் (5) |
|---|---|---|---|---|
| | | | 396-15; ஐங்.47-2; 48-2; 81-5; 87-3; 410-2; குறு.164-5; நற்.77-6; 100-7; 336-5; புறம். 41-14; 164-7; 210-11; 260-3; 320-6; 333-8; 334-5; குறி.154 | 23 |
| மனைவி | I | மனைவி | நற்.121-11; புறம்.191-3; 250-5; 326-7 | 4 |
| மனைவியர் | I | மனைவி | பரி.5-39; 5-46 | 2 |
| முதல்வன் | II | தந்தை | கலி.75-24 | 1 |
| முதலாட்டி | II | மனைவி | குறு.10-1 | 1 |
| முன் | II | அண்ணன் | காண்க 1. எம்முன் 2. தம்முன் 3. தன்முன் | |
| | | தந்தை | காண்க நும்முன் | |
| மைந்தர் | I | கணவன் | கலி.92-65; பரி.8-43; 8-122; பட்.109 | 4 |
| | | மகன் | புறம்.340-6 | 1 |
| யாய் | I | என்-தாய் | அகம்.12-1; 18-17; 60-15; 150-6; 156-16; 203-2; 240-9; 276-15; 282-15; 298-17; 302-15; 321-16; 356-11; ஐங்.1-3; 2-3; 3-3; 4-3; 5-3; 6-3; 7-3; 8-3; 9-3; 10-3; 186-5; 253-4; 272-5; 280-5; 384-3; 385-6; கலி.39-21; 105-62; 107-11; 107-15; 108-33; 111-2; 23; 115-6-8; 116-10; குறு.9-1; 10-1; 40-1; 51-4; 198-8; 244-6; 248-7; 269-4; 294-8; 374-1; நற்.55-7; 72-6; 134-6; 150-11; 162-8; 258-2; 295-3; 301-8; 359-5; 368-9; 376-12; புறம்.83-2; 159-5 | 62 |

அட்டவணை-1

தாய்

| நூல் | அன்னை | தாய் | யாய் | ஞாய் | ஞாயர் | அஞ்ஞை | அம்பா | ஈன்றாள் | ஈன்றோள் | பயந்தோள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அகம் | 34 | 11 | 13 | -- | -- | 2 | -- | -- | -- | -- |
| ஐங் | 40 | 9 | 16 | 1 | -- | -- | -- | -- | -- | -- |
| கலி | 13 | 5 | 10 | 1 | 2 | -- | -- | -- | -- | -- |
| குறு | 14 | 6 | 10 | 1 | -- | -- | -- | -- | -- | -- |
| நற் | 33 | 7 | 11 | -- | -- | -- | -- | -- | -- | -- |
| பதி | -- | 1 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| பரி | 2 | 3 | -- | -- | -- | -- | 1 | 2 | -- | 2 |
| புறம் | 1 | 9 | 2 | -- | -- | -- | -- | -- | 1 | -- |
| பத்து | 1 | 2 | -- | -- | -- | -- | -- | | -- | |
| கூடுதல் | 138 | 53 | 62 | 3 | 2 | 2 | 1 | 2 | 1 | 2 |

அட்டவணை-2

தந்தை

| நூல் | தந்தை | எந்தை | நுந்தை | ஐ | | | அத்தன் | தாதை | நும்முன் | முதல்வன் | கோ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | ஐ | என்னை | தன்னை | | | | | |
| அகம் | 15 | 12 | 3 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| ஐங் | 4 | 2 | 3 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| கலி | 8 | 4 | 16 | -- | -- | -- | 3 | -- | -- | 1 | 1 |
| குறு | 4 | 7 | 1 | -- | -- | -- | 1 | -- | -- | -- | -- |
| நற் | 12 | 7 | 5 | 1 | 1 | -- | -- | -- | -- | -- | -- |
| பதி | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| பரி | -- | 1 | -- | -- | -- | -- | -- | 3 | -- | -- | -- |
| புறம் | 20 | 21 | 3 | -- | -- | 1 | -- | -- | 1 | -- | -- |
| பத்து | 1 | 1 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| கூடுதல் | 64 | 55 | 31 | 1 | 1 | 1 | 4 | 3 | 1 | 1 | 1 |

அட்டவணை-3

கணவன்

| நூல் | கணவன் | கணவர் | கொழுநன் | கொழுநர் | மைந்தர் | ஐ / என்னை | ஐயர் / தன்னையர் | காதலன் | கிழவன் | கேள் | கேள்வர் | கேள்வன் | துணை | துணைவன் | செல்வன் | மகிழ்நன் | அண்ணல் | ஆடவர் | ஆள் | உரிமை மைந்தர் | சிறந்தான் | பெற்றார் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அகம் | 1 | -- | 2 | 1 | -- | -- | -- | 2 | -- | -- | -- | -- | -- | 1 | -- | 2 | -- | -- | -- | -- | -- | -- |
| ஐங் | 1 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | 1 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| கலி | -- | -- | -- | 1 | 1 | -- | 1 | -- | -- | 1 | 2 | 9 | -- | -- | -- | 1 | -- | -- | -- | -- | 1 | -- |
| குறு | 4 | -- | 2 | -- | -- | 2 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | 1 | -- | -- | -- | -- |
| நற் | 1 | -- | 2 | 1 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | 1 | -- | -- | -- |
| பதி | 10 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| பரி | 1 | 1 | 1 | -- | 1 | -- | -- | -- | -- | -- | 1 | 3 | 1 | -- | -- | -- | 1 | -- | -- | 1 | 1 | 1 |
| புறம் | 6 | -- | 3 | | -- | 3 | -- | -- | 2 | -- | -- | 1 | -- | -- | 1 | -- | -- | -- | -- | -- | -- | -- |
| பத்து | 5 | 1 | -- | 1 | 1 | -- | -- | -- | -- | -- | -- | -- | 3 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| கூடுதல் | 29 | 2 | 10 | 4 | 3 | 5 | 1 | 2 | 2 | 2 | 3 | 13 | 4 | 1 | 1 | 3 | 1 | 1 | 1 | 1 | 2 | 1 |

# அட்டவணை-4

## மனைவி

| நூல் | மனை | மனைவி | மனையவர் | மனைவியர் | மனையாள் | மனையோள் | மனைமுதல் | மனையுறைமகளிர் | பெண் | பெண்டு | பெண்டிர் | மகடூஉ | மடந்தை | துணை | துணைவி | துணைவியர் | இற்கிழத்தி | காதலி | செல்வி | தையல் | நகர் | முதலாட்டி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அகம் | 1 | -- | -- | -- | -- | 6 | 1 | -- | -- | 2 | 3 | -- | -- | -- | -- | -- | 1 | 1 | -- | -- | -- | -- |
| ஐங் | -- | -- | -- | -- | -- | 5 | -- | -- | -- | 4 | 2 | -- | 1 | 1 | 1 | -- | -- | 1 | -- | -- | -- | -- |
| கலி | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | 2 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | 1 | -- |
| குறு | -- | -- | -- | -- | -- | 1 | -- | 1 | -- | 1 | -- | -- | -- | 2 | -- | -- | -- | -- | -- | -- | -- | 1 |
| நற் | -- | 1 | -- | -- | -- | 3 | -- | -- | -- | 1 | 1 | -- | 1 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| பதி | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | 1 | -- | -- | -- |
| பரி | -- | -- | 1 | 2 | 1 | -- | -- | -- | -- | 1 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | 1 | -- | -- |
| புறம் | -- | 3 | -- | -- | -- | 7 | -- | -- | 1 | 1 | -- | 2 | -- | 1 | -- | 1 | -- | 1 | -- | -- | -- | -- |
| பத்து | -- | -- | -- | -- | -- | 1 | -- | -- | -- | -- | 1 | -- | -- | 1 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| கூடுதல் | 1 | 4 | 1 | 2 | 1 | 23 | 1 | 1 | 1 | 10 | 9 | 2 | 2 | 5 | 1 | 1 | 1 | 3 | 1 | 1 | 1 | 1 |

அட்டவணை-5

அண்ணன்

| நூல் | ஐ | | | ஐயர் | | | ஐயன்மார் | முன் | | | இறை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | என்னை | தன்னை | தன்னைமார் | என்னையர் | தன்னையர் | நின்னையர் | | எம்முன் | தம்முன் | தன்முன் | |
| அகம் | -- | -- | -- | 2 | 2 | 1 | -- | -- | -- | -- | -- |
| ஐங் | -- | -- | -- | -- | 1 | -- | -- | -- | -- | -- | -- |
| கலி | 1 | -- | -- | 1 | -- | -- | 1 | -- | 1 | -- | -- |
| குறு | -- | -- | -- | 1 | 1 | -- | -- | -- | -- | -- | -- |
| நற் | -- | -- | -- | 1 | 1 | -- | -- | -- | -- | -- | -- |
| பதி | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| பரி | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | 1 | -- | 1 |
| புறம் | -- | 1 | 3 | -- | 3 | -- | -- | 1 | -- | -- | -- |
| பத்து | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | 1 | -- |
| கூடுதல் | 1 | 1 | 3 | 5 | 8 | 1 | 1 | 1 | 2 | 1 | 1 |

அட்டவணை - 6

தம்பி

| நூல் | தம்பி | இளையன் |
|---|---|---|
| அகம் | -- | -- |
| ஐங் | -- | -- |
| கலி | -- | -- |
| குறு | -- | -- |
| நற் | -- | -- |
| பதி | -- | -- |
| பரி | -- | 1 |
| புறம் | 3 | -- |
| பத்து | -- | -- |
| கூடுதல் | 3 | 1 |

அட்டவணை - 7

| | அக்காள் | | தங்கை | | |
|---|---|---|---|---|---|
| நூல் | எவ்வை | நுங்கை | நுவ்வை | தங்கை | தங்கையர் |
| அகம் | -- | 1 | -- | 1 | 1 |
| ஐங் | 2 | -- | -- | 2 | -- |
| கலி | -- | -- | -- | -- | -- |
| குறு | -- | -- | -- | 2 | -- |
| நற் | -- | -- | 1 | -- | -- |
| பதி | -- | -- | -- | -- | -- |
| பரி | -- | -- | -- | -- | -- |
| புறம் | -- | -- | -- | -- | -- |
| பத்து | -- | -- | -- | 1 | -- |
| கூடுதல் | 2 | 1 | 1 | 6 | 1 |

# அட்டவணை - 8

## மகன்

| நூல் | மகன் | மகாஅன் | புதல்வன் | புதல்வர் | மைந்தர் | பெயரன் | செல்வன் | சேஎய் | சேய் | சிறுவன் | சிறுவர் | சிறாஅர் | செம்மல் | இளையோர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அகம் | 4 | -- | 12 | 1 | -- | -- | 1 | -- | -- | -- | -- | -- | -- | -- |
| ஐங் | 3 | -- | 14 | -- | -- | 1 | 1 | -- | 1 | 1 | -- | -- | -- | -- |
| கலி | 13 | -- | 9 | -- | -- | 1 | -- | -- | -- | -- | -- | -- | 1 | -- |
| குறு | -- | -- | 4 | 1 | -- | -- | -- | -- | -- | 1 | -- | -- | -- | -- |
| நற் | 1 | -- | 9 | 1 | -- | 1 | -- | -- | -- | -- | 1 | -- | -- | -- |
| பதி | -- | -- | 1 | 2 | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- | -- |
| பரி | -- | 1 | -- | 1 | -- | -- | -- | 1 | -- | -- | -- | -- | -- | -- |
| புறம் | 9 | -- | 4 | 9 | 1 | -- | -- | -- | -- | 4 | -- | 1 | -- | 1 |
| பத்து | -- | -- | -- | 5 | -- | -- | -- | -- | 1 | 2 | -- | -- | -- | -- |
| கூடுதல் | 30 | 1 | 53 | 20 | 1 | 3 | 2 | 1 | 2 | 8 | 1 | 1 | 1 | 1 |

## அட்டவணை - 9

### மகள்

| நூல் | இளையோள் | மகள் |
|---|---|---|
| அகம் | -- | 19 |
| ஐங் | -- | 26 |
| கலி | -- | 6 |
| குறு | -- | 4 |
| நற் | 1 | 16 |
| பதி | -- | 2 |
| பரி | -- | 5 |
| புறம் | -- | 5 |
| பத்து | -- | 1 |



தாய்
180
170
160
150
140
130
120
110
100
90
80
70
60
50
40
30
20
10
0
138
62
53
3
2
அன்னை
யாய்
தாய்
ஞாய்
1. ஞாயர்
2.அத்தை
3.ஈன்றாள்
பயந்தோர்
1. அம்பா
ஈன்றோள்


தந்தை
80
70
60
50
40
30
20
10
0
64
55
31
4
3
1
தந்தை
எந்தை
நுந்தை
அத்தன்
தாதை
1.ஐ
2.என்னை
3.தன்னை
4. நும்முன்
5. முதல்வன்
6. கோ


கணவன்
35
30
25
20
15
10
5
0
29
13
10
5
4
3
2
1
கணவன்
கேள்வன்
கொழுநன்
என்னை
1 கொழுநர்
2. துணை
1. மைந்தர்
2. கேள்வர்
3. மகிழ்நன்
1 கணவர்
2. காதலன்
3. கிழவன்
4. கேள்
5. சிறந்தான்
1. ஐயர்
2. தலைவன்
3. செல்வன்
4. அண்ணல்
5. ஆடவர்
6. ஆள்
7. உரிமைமைந்தர்
8. பெற்றார்


மனைவி
30
25
20
15
10
5
0
23
10
9
5
4
3
2
1
மனையோள்
பெண்டு
பெண்டிர்
துணை
மனைவி
காதலி
மனைவியர்
மகடூஉ
மடந்தை
மனை
மனையவர்
மனையாள்
மனைமுதல்
மனையுறைமகளிர்
துணைவி
துணைவியர்
இற்கிழத்தி
செல்வி
தையல்
நகர்
முதலாட்டி
பெண்


அண்ணன்
10
9
8
7
6
5
4
3
2
1
0
80
50
30
2
1
தன்னையர்
என்னையர்
தன்னைமார்
தம்முன்
1.என்னை
2.தன்னை
3.நின்னையர்
4.ஐயன்மார்
5.எம்முன்
6.தன்முன்
7.இறை



அக்காள்
தம்பி
தங்கை
10
9
8
7
6
5
4
3
2
1
0
2
30
1
5
1
எவ்வை
தம்பி
இளையன்
தங்கை
1.நுங்கை
2.நுவ்வை
3.தங்கையர்


மகன்
80
70
60
50
40
30
20
10
0
53
30
20
8
3
2
1
புதல்வன்
மகன்
புதல்வர்
சிறுவன்
பெயரன்
1.செல்வன்
2. சேய்
1.மகாஅன்
2.மைந்தர்
3.சேஎய்
4. சிறுவர்
5.சிறாஅன்
6.செம்மல்
7.இளையோன்


மகள்
90
84
80
70
60
50
40
30
20
10
1
0
மகள்
இளையோள்

# துணை நூற்கள்

அருளி ( 1989 ) **பெற்றோரைப் போற்றி**, தமிழினத் தொண்டு இயக்கம், புதுச்சேரி.

இராபர்ட் சத்திய சோசப் ( 1996 ) **சமகாலத் தமிழர்களின் உறவுமுறை அமைப்பும் உறவுமுறைச் சொற்களும்**, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

சண்முகம், செ. **பொருண்மையியல்**, அனைத்திந்திய மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்.

சித்திரபுத்திரன், எச். ( 1987 ) '**சொல்லும் சமுதாயப் பண்பாட்டுக் கூறுகளும்**', அகராதிக்கலைக் கருத்தரங்கு, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

( 1991 ) 'சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்பொருண்மை', **மொழியியல் 13/14**.

( 1992 ) **அகராதியியல் கட்டுரைகள்** ( உருளச்சு ) ,தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

( 1992 ) **அகராதிக்கலை கையேடு** ( உருளச்சு ) , தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

தாயம்மாள் அறவாணன் ( 1987 ) **உறவுமுறைகள்-ஓர் ஆய்வு**, பாரி நிலையம், சென்னை.

நடராசன், சி.என். ( 1989 ) 'தமிழரின் உறவுமுறை அமைப்பு', **நாட்டார் வழக்காற்றியல்**, தொகுதி-3, எண்.5 & 6.

பக்தவச்சல, பாரதி ( 1988 ) 'திராவிட உறவுமுறை சொல் வழக்கியலில் ஓர் ஆய்வு', **தமிழ்க்கலை-6**, கலை 3,4, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

( 1997 ) 'இந்தியப் பண்பாட்டுப் பரப்பில் வடக்கும் தெற்கும்', **யாணர்**, புதுச்சேரி.

பாலசுந்தரம் ( 1988 ) **தொல்காப்பியம்**, எழுத்ததிகாரம்.

( 1988 ) **தொல்காப்பியம்**, சொல்லதிகாரம்.

**நிகண்டுகள்:**

திவாகரநிகண்டு ( 1958 ) சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

நாமதீபநிகண்டு ( 1985 ) தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

பிங்கலநிகண்டு ( 1978 ) சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

Barnes, J.A., ( 1955 ) 'Kinship', Encyclopaedia Britannica Vol.13, London.

--------------- ( 1971 ) 'Three styles in the Study of Kinship', Encyclopaedia Britannica No.13, London.

--------------- ( 1973 ) 'Genetrix:Genitor:Nature:Culture', The Character of Kinship, ( Ed ) Goody, Cambridge University Press, Cambridge.

Bean, Susen, ( 1972 ) Kannada Kinship Terms Use and Meaning ( Ph.D. Thesis ) Columbia University, Columbia.

Boas, Franz ( 1965 ) The Mind of Primitive man, The Free Press, Newyork.

Burrow, T & Emeneau, M.B., ( 1984 ) A Dravidian Etymological Dictionary ( 2nd Edition ), Clarendon Press.

Caldwell, Robert ( 1856 ) A Comparative Grammar of the Dravidian or South Dravidian Family of Languages ( Repd. 1956 ) University of Madras, Madras.

Cattopadhyay, K.P. ( 1962 ) 'On Terms Kinship and Social Relationships', Indian Anthropology, ( Eds. ) Madan, T.N. & Gopala Sarma, Asia Publishing House, Bombay.

Chithiraputhiran, H. ( 1991 ) 'Kinship Terms in Tamil - A Linguistic and Socio Cultural Analysis', Seminar on Lexicography, Madurai-Kamaraj University, Madurai.

Dumont Louis ( 1951 ) 'Kinship and Alliance among the Piramalai Kallar', The Eastern Anthropologist, Vol.IV,No.1.

----------------- ( 1953 ) 'The Dravidian Kinship Terminology as an Expression of Marriage', Man, 53 ( 54 ).

----------------- ( 1986 ) South Indian Sub Caste:Social Organisation and Religion of the Piramalai Kallar, Tr. by Moffatt, M. Oxford University Press, Oxford.

Eggan, Fred ( 1934 ) 'The Maya Kinship System and Cross Cousin Marriage', American Anthropologist, 36.

--------------- ( 1968 ) 'Introduction to Kinship', International Encyclopaedia of Social Sciences, Vol.8.

Evans Pritchard, E.E. ( 1964 ) 'NuerModes of Address', Language in Culture and Anthropology ( ed ) Dell Hymes, Harper and Row, New York.

Goedy Jack ( Ed. ) ( 1973 ) The Character of Kinship, Cambridge University Press, Cambridge.

Goodenough, W ( 1956 ) 'Componential Analysis and the Study of Meaning', Language, 32.

Graburn, N.H. ( Ed. ) ( 1971 ) Readings in Kinship and Social Structure, Harper & Row, New York.

Graham, A. Allan, ( 1979 ) A Sociology of Friendship and Kinship, George Allen & Unwin, London.

Harold C. Gonklin ( 1964 ) 'Ethnogenealogical Method', Explorations in Cultural Anthropology, ( Ed. ) Goodenough, W.H. McGraw Hill, Book Company.

Hart, George ( ed ) ( 1974 ) Kinship and History in_South Asia, Michigan Papers on South and South East Asia.

-------- ( 1974 ) 'Some Aspects of Kinship in Ancient Tamil Literature', Kinship and History on South Asia, ( Ed. ) George Hart.

Herskovits, Melville, J ( 1974 ) Cultural Anthropology, Oxford & IBH Publishing and Company.

Hymes, Dell ( 1964 ) Language in Culture and Society, Harper and Row, New York.

Karuppaiyan, V. ( 1983 ) 'Marriage and Family, Seminar on Kinship', Tamil University, Thanjavur.

Karve, Irawati ( 1942 ) 'Kinship Terminology and Kinship Usages in Gujarat and Kathiawad', Bulletin, Deccan College, 4, Poona.

----------- ( 1953 ) 'Dravidian Kinship Terminology and Marriage Customs', Proceedings of Indian Science Congress-40 ( 3 ), No.37.

( 1965 ) Kinship Organization in India, Asia Publishing House, Bombay.

( 1968 ) 'Kinship Terminology and Kinship Uses of Maratha Country', Bulletin, Deccan College, Vol.2,4, Poona.

Kathleen. F. ( 1955 ) 'The Social structure of a Tanjore Village', Indian Village, ( Ed. ) Srinivas, M.N. Asia Publishing House, Bombay.

---------------- ( 1979 ) 'Dravidian Kinship and Modes of Production', Contributions to Indian Sociology-13.

Kroeber, A.L. ( 1909 ) 'Classificatory Systems of Relationship', Journal of the Royal Anthropological Institute.

-------------- ( 1967 ) Anthropology, Oxford & IBH Publishing Company.

Kumaraswami Raja, N ( 1972 ) 'Personal Kinship Terms, Third Seminar on Dravidian Linguistics ( Eds. ) Agesthialingom, S., Shanmugam, S.V., Annamalai University.

Labov, W. ( 1966 ) The Social Stratification of English in New York City, Centre for Applied Linguistics, Washington.

Lalita, S. Katre ( 1970 ) 'Konkani Kinship Terms, Indian Linguistics, Vol.31, 4 Poona.

Levi-Strauss, Claude ( 1956 ) The Family, Man, Culture and Society, ( Ed. ) Harry L. Shapiro, Oxford University Press.

Levi-Strauss, Claude ( 1966 ) 'The future of Kinship Studies, Proceedings of the Royal Anthropological Institute.

------------------------ ( 1969 ) The Elementary Structures of Kinship ( Ed. ) Rodney Needham etal, London.

Lounsbury, Floyd, G. ( 1964 ) 'Crow and Omeha Terminologies, Explorations in Cultural Anthropology_ ( Ed. ) Goodenough, McGraw Hill Book Company.

Lowie, R.H. ( 1928 ) 'A note on Relationship Terminologies American Anthroplogist.

-------------- ( 1929 ) 'Relationship Terms, Encyclopaedia Britannica, Vol.19.

-------------- & Eggan, F.R. ( 1964 ) 'Kinship, Encyclopaedia Britannica, Vol.13.

Malinowski, B. ( 1966 ) 'Brother-Sister Avoidance Among Trobriand Islanders, Readings in Anthropology ( Eds. ) Jesse D. Jennings and Adamson, E. McGraw Hill, Book Company.

Meenakshisundaran, T.P. ( 1963 ) 'The Kinship Terms', Indian Linguistics, 27.

Morgan, D.H.J. ( 1870 ) Systems of Consanguinity and Affinity of the Human Family, Smithsonian Institute.

----------------- ( 1978 ) Social Theory and the Family, Routledge & Kegan Paul.

Murdock, George ( 1934 ) Our Primitive Contemporaries, Macmillan, New York.

------------------ ( 1949 ) Social Structure, Macmillan & Co., New York.

----------------- ( 1966 ) Universals of culture, Readings in Anthropology, ( Eds. ) Jesse-D-Jeenings & Andnson, E., Mc Graw-Hill Book Company.

Natarajan, C.N. ( 1978 ) 'Kin Marriages in Tamil Nadu', Ayvukkovai, 4, Annamalai Nagar.

----------------- ( 1978 ) 'The Piramalai Kallar of Tamil Nadu A Study of their Marriage', Kinship and Clan System ( Ph.D. Thesis ), Madurai Kamaraj University, Madurai.

---------------- ( 1980 ) 'Usage of Kinship Terms in Tamil', Ayvukkovai, 10,2, Annamalai Nagar.

Ogden & Richards ( 1923 ) The Meaning of Meaning, 8th edition, Routledge and Kegan Paul, London.

Palmer, F.R. ( 1981 ) Semantics, Cambridge University Press, Cambridge.

Radcliff Brown ( 1965 ) Structure and Functions in Primitive Society, Routledge & Kegan Paul, London.

---------------- ( 1965 ) 'The Study of Kinship Systems', The Structure and Function in Primitive Society, The Free Press, New York.

*Ravishankar ( 1977 ) Kinship Terms in Tamil Dialects ( M.A. Thesis ) Annamalainagar.*

*Rivers, W.H.R. Kinship and Social Organization, London.*

*Robert Sathya Joseph, D ( 1988 ) 'Kinship Terms of different Castes in a village of Tamil Nadu', All India Tamil Linguistics Conference, Tamil University, Thanjavur.*

*---------------------------- ( 1988 ) 'Dravidian and Kashmir Kinship', Tamilkkalai 1-2.*

*Schusky, Ernet, L ( 1972 ) Manual for Kinship Analysis, Rinehard & Holf, Winston.*

*Shefali Bhattacharya ( 1974 ) Malvi Kinship Terms, Indian Linguistics, Vol.35.*

*Singh, R.A. ( 1982 ) An Introduction to Lexicography, Central Institute of Indian Languages, Mysore.*

*Stephen, Taylor ( 1964 ) 'Koya Kinship Terminology : The Relations between Syntactic and Semantic Analysis', M.B. Emeneau, Sastipurthi Volume, CAS in Linguistics, Poona.*

*Thinnappan, S.P. ( 1976 ) 'A Study of Kinship in Chettiar Dialect', Ayvukkovai, 8, Annamalai Nagar.*

*Trautmann, Thomas, R. ( 1981 ) Dravidian Kinship, Cambridge University Press, Cambridge.*

*Ullmann, Stephen ( 1962 ) Semantics : An Introduction to the Science of Meaning, Oxford, Blackwell.*

*Zgusta, Ladislav, etal ( 1971 ) Manual of Lexicography, Mouton and Company, The Hague.*

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| AN INTRODUCTION TO RELIGION AND PHILOSOPHY - TEVARAM AND TIVVIYAPPIRAPANTAM | 200.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| ஜப்பானியக் காதல் பாடல்கள் | 75.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| பயிலரங்கக் கவிதைகள் | 18.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-2 | 64.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-1 | 56.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-3 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-2 | 110.00 |
| எட்டையபுரப் பள்ளு | 60.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் தொகுதி-2 | 65.00 |
| ON TRANSLATING TIRUKKURAL | 50.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| THIRUVACHAGAM | 175.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| நானும் என் எழுத்தும் | 50.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| தமிழர் கொடிகள் | 30.00 |
| THE NARRIṆAI FOUR HUNDRED | 175.00 |
| சர்வக்ஞர் உரைப்பா | 40.00 |
| தமிழில் ஆவணங்கள் | 75.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் | 55.00 |
| மேலை நோக்கில் தமிழ்க்கவிதை | 100.00 |
| SOUND CORRESPONDENCES BETWEEN TAMIL & JAPANESE | 35.00 |
| அயலகத் தமிழ்க்கலை, இலக்கியம், சமகாலச் செல்நெறிகள் | 125.00 |
| TAMIL LITERATURE AND INDIAN PHILOSOPHY | 200.00 |
| சதகத்திரட்டு தொகுதி-1 | 80.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |

---

Pub.No. 427 **சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்கள் 45.00**